# சிற்பியின் கவிதைகள் - பன்முகப் பார்வை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**இரா. சுமதி**

**(பதிவு எண்.1402)**

நெறியாளர்

**பேராசிரியர் முனைவர் பீ.கா.நபிசாள் பீவி**

இணை நெறியாளர்

**பேராசிரியர் முனைவர் மு.பாண்டி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தரமதிப்பீட்டுக் குழுவின் 'A' மதிப்புப் பெற்றது)

**காரைக்குடி - 630 003**

தமிழ்நாடு

**இந்தியா**


ஆகஸ்ட் - 2010

**பேரா. முனைவர் பீ.கா. நபீசான் பீவி,**
தமிழ்த்துறைத்தலைவர்,
தாசீம்பீவி அப்துல்காதர் மகளிர் கலைக்கல்லூரி,
கீழக்கரை,
இராமநாதபுரம் மாவட்டம்.

நாள்: 7/8/10

## நெறியாளர் சான்றிதழ்

“**சிற்பியின் கவிதைகள் - பன்முகப் பார்வை**” என்னும் தலைப்பில் **திருமதி இரா.சுமதி** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(**முனைவர் பீ.கா. நபீசான் பீவி**)

நெறியாளர்

HEAD,
DEPARTMENT OF TAMIL,
TBAK COLLEGE FOR WOMEN,
KILAKARAI-623 517.
RAMANATHAPURAM DIST.

**துறைத்தலைவர்**
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003

**இரா.சுமதி,**
முனைவர்பட்ட ஆய்வாளர் (தமிழ்),
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்: 7/8/10

## ஆய்வாளர் உறுதிமொழி

"**சிற்பியின் கவிதைகள் - பன்முகப் பார்வை**" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

இரா. சுமதி

**(இரா.சுமதி)**

ஆய்வாளர்

நபீசாள்பீவி. பீ.கா.

உறுதிக் கையொப்பம்

**பேரா. முனைவர் பீ.கா. நபீசாள் பீவி,**
தமிழ்த்துறைத்தலைவர்,
தாசீம்பீவி அப்துல்காதர் மகளிர் கலைக்கல்லூரி,
கீழக்கரை,
இராமநாதபுரம் மாவட்டம்.

HEAD,
DEPARTMENT OF TAMIL,
TBAK COLLEGE FOR WOMEN,
KILAKARAI-623 517.
RAMANATHAPURAM DIST.

# நன்றியுரை

என்னை, முனைவர்பட்ட ஆய்வு மாணவியாக அனுமதித்து, ஆய்வு மேற்கொள்ள வைத்த காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு என் பணிவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பாக அணுகிய போதெல்லாம் அன்னையாக நின்று, என்னை கரைத்து; எனக்குள் கரைந்து, என்னை அவையத்து முந்தியிருக்கச் செய்த நெறியாளர் **பேரா.முனைவர் பீ.கா.நபீசான் பீவி** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான கருத்துக்களையும், விளக்கங்களையும் கொடுத்து இமைப் பொழுதும் இடைவெளியின்றி ஆசிரியப் பணியோடு நிருவாகப் பணியாற்றும் அழகப்பா பல்கலைக்கழகக் கலைப்புல முதன்மையர், தமிழ்த்துறைத்தலைவர் வணக்கத்திற்குரிய **பேரா. முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கு என்றும் மறவாத என் நெஞ்சார்ந்த நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

நான் தமிழ்க்கடலில் மூழ்கி மூச்சுத் திணறிய போதெல்லாம் எனக்கு முத்தெடுத்துக் கொடுத்தவர், தமிழ் வானில் பறப்பதற்குச் சிறகுகளாய் இருந்தவர் **முனைவர் க.மோகன்,** காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரி அவர்களுக்கு என் நெஞ்சம் மறவா நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை, பூவின் மடலுக்குள் பொத்தி வைத்து, என் தாயின் மடியினைத் தத்தெடுத்த என் பாசமிகு கணவர் **மு.ஆ. ரெத்தினக்குமார்** அவர்களுக்கும், என்னை கருவாக்கி உருவாக்கிய என் பெற்றோர் **சரோஜா இராமன்** அவர்களுக்கும், என்றும் எனது இதயத் துடிப்பாய்

இருக்கும் என் மகள் **ரெ.சமிக்ஷா**வுக்கும், தயக்கமின்றி தளர்வின்றி தானே செய்யும் உதவிகளால் என்னைத் திகைக்க வைக்கும் என் மாமா **திரு.முருகேசன்**, **திரு.சேகர்** அவர்களுக்கும், சகோதரர்கள் **திரு.செல்வபாரதி**, **திரு.ராஜேஸ்கண்ணன்**, **திரு.கார்த்திக்**, **திரு.பழனிச்செல்வம்** அவர்களுக்கும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுப் பணியின் போது நல்ல கருத்துக்களைத் தெரிவித்ததோடு, ஆய்வு சிறப்பாக நிறைவு பெற தோள் கொடுத்துதவிய தோழிகள், நண்பர்கள் அனைவருக்கும் நன்றிகள் பல.

ஆய்வு தொடர்பான நூல்களைத் தந்துதவிய அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேட்டினை செம்மையுற கணினியில் அச்சாக்கம் செய்து, கட்டமைப்பும் செய்தளித்த **காரைக்குடி நிதிஷ்பிரபா கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தாருக்கும் என் நன்றிகள் பல.

இரா. அமதி

# பொருளடக்கம்

## முன்னுரை

சமூகம் மனித நேயம் மறந்து, உணர்ச்சியற்று, மரத்துப் போய் கெட்டி தட்டிப் போன காலமெல்லாம், பொறுப்பற்றச் சமூகத்தின் மீது கல்லெறியும் கலகக்காரர்களாய்ப் படைப்பாளர்கள் இருந்து வருகின்றனர். சமூக நீரோட்டத்தின் மீது அவர்கள் ஏற்படுத்திய சலனம்தான், சமூகத்தை இன்னும் உயிர்ப்புள்ளதாய் அடைகாத்து வருகின்றது. இருபதாம் நூற்றாண்டின் இறுதிக்காலம் தமிழ்ப் புதுக்கவிதை உலகில் எழுச்சி மிகுந்த காலமாகும். இன்றைய இளைஞர்களைத் தட்டி எழுப்பி, ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் கவிதைகளை இவ்வுலகிற்கு அளித்துக் கொண்டிருக்கும் படைப்பாளர்களில் சிற்பி பாலசுப்பிரமணியன் தன் பங்கினைச் சரிவர செய்து வருகிறார் எனலாம்.

### ஆய்வுத் தலைப்பு

“**சிற்பியின் கவிதைகள் - பன்முகப் பார்வை**” என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

### ஆய்வு நோக்கம்

சக மனிதர்களைப் பார்த்து புன்னகைப்பது கூட மறந்து போன அவசர வாழ்க்கையில், தன்னைக் கடந்து போகும் உண்மை நிகழ்வுகளில் புதுக்கவிதைக்காரர்கள் கவனம் செலுத்துவது, சமூக அவலங்களை ஓரளவாவது நீக்க அவர்கள் செய்யும் கலைப்பணியாகும். வேர்களின் விலாசம் கேட்காமல் நீர் ஊற்றிப்

போகும் மேகத்தைப் போல, இந்தச் சமுதாயத்திற்கு இலக்கியப் பணியாற்றும் கவிஞர் சிற்பியின் கவிதைகளைத் தொகுத்தாய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**பயன்பாடு**

கவிதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள கவிதைகளை ஆய்வு செய்வதன் மூலம் இதன் தரத்தை மதிப்பீடு செய்ய முடியும். எதிர்காலத்தில் வெளிவரக்கூடிய கவிதைகளின் உள்ளடக்க மாற்றங்களைப் பற்றிச் சிந்திக்க இவ்வாய்வு உதவும். ஒவ்வொரு கவிஞனும் புதிய கோணத்தில் கவிதைகள் வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தைத் தூண்டுவதற்கும் இவ்வாய்வு பயன்படும்.

**கருதுகோள்**

இலக்கியங்கள், படைப்பாளன் மற்றும் அவன் சார்ந்த சமூகத்தின் வெளிப்பாடாக அமைபவை. தற்கால இலக்கியங்களில் புதுக்கவிதையில் சமூக இயங்கு நிலைகளைப் புலப்படுத்தும் போக்கைக் காணமுடிகின்றது. இத்தொகுப்பில் உள்ள கவிதைகளில் சமூகநிலை, பொருளாதாரம், வறுமைநிலை, காதல் உணர்வுகள், அன்பு, இரக்கம் முதலிய பண்புகளின் சிறப்புகள், உள்மன ஏக்கங்கள், இயற்கை, வழிகாட்டிகள் ஆகிய பொருட்களில் மிக அழகாகப் படைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதாக இவ்வாய்வின் கருதுகோள் அமைகிறது.

## ஆய்வு எல்லை

1962ஆம் ஆண்டிலிருந்து 2006 வரை உள்ள சிற்பியின் படைப்புகளான சிற்பியின் கவிதை வானம், சிற்பியின் கவிதைப் பயணங்கள், சிற்பியின் பூஜ்ஜியங்களின் சங்கிலி, ஒரு கிராமத்து நதி, பாரதி கைதி எண் 253, மூடுபனி, ஆதிரை, தேவயானி, இறகு, பெருமூச்சுகளின் பள்ளத்தாக்கு, வண்ணப் பூக்கள் ஆகிய கவிதைத் தொகுப்புகளில் இடம் பெற்றுள்ள கவிதைகள் இவ்வாய்வின் எல்லைகளாகும்.

## ஆய்வு அணுகுமுறைகள்

விளக்கமுறை என்பது Interpretation என்பதன் தமிழாக்கமாகும். இவ்வகைத் திறனாய்வு ஒரு படைப்பாக்கத்தை விளக்கி உரைப்பதாகும். காலம், இடம் என்பவற்றால் வேறுபட்ட சூழல்களில் ஒரு ஆக்கத்தைப் புரிந்து கொள்வதற்கு இன்றியமையாது வேண்டப்படுவது இந்த விளக்க முறை. பகுப்பாய்வு முறை என்பது இலக்கியப் படைப்பொன்றின் ஆக்கக் கூறுகளைப் பகுப்பாய்வு செய்து நோக்குவதாகும். செலுத்து நிலைத் திறனாய்வு என்பது ஒரு படைப்பை அப்படைப்பின் வழிநின்று அணுகி மதிப்பிடும் முயற்சியாகும். இலக்கிய ஆக்கத்துக்கு அடிப்படையான கூறு படைப்பாளியின் உலக நோக்கு என்ற தத்துவ அம்சமாகும். அந்தவகையில் இவ்வாய்வு சமுதாயத்தில் நிலவும் சீர்கேடுகளை விளக்கிக் காணும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும், கவிதைகள் சுட்டும் சமுதாயச் சிக்கல்களைப் பகுத்தும், தொகுத்தும்

காண, சமுதாய இயங்குநிலைகளைச் சுட்ட சமூகவியல் அணுகுமுறையும், கவிதைகளில் காணும் தொன்மம், படிமம் போன்றவற்றை விளக்கும் வகையில் தொன்ம-படிமவியல் அணுகுமுறைகளும் இவ்வாய்வில் கையாளப்பட்டுள்ளன.

**சான்றாதாரங்கள்**

சிற்பியின் கவிதைத் தொகுப்பிலுள்ள கவிதைகள் இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. ஆய்வுத் தொடர்பான நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாக அமையப் பெற்றுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டு அமைகிறது.

1. இலக்கியத்தில் கவிதை
2. புதுக்கவிதையில் பாடுபொருள்
3. சிற்பியின் கவிதைச் சிறப்புகள்
4. சிற்பியின் சமுதாயப் பார்வை

என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், பயன்பாடு, கருதுகோள், ஆய்வு எல்லை, அணுகுமுறைகள், சான்றாதாரங்கள், ஆய்வுப் பகுப்பு, இயல் விளக்கங்கள், முடிவுரை, துணைநூற்பட்டியல் ஆகியவைப் பற்றி விளக்கப்பட்டுள்ளன.

**இலக்கியத்தில் கவிதை** என்ற முதலாமியலில் பண்டைய இலக்கியங்களில் கவிதையின் சொல்லாட்சி காணப்படுவதையும், பாட்டு, தூக்கு, தொடர்பு, செய்யுள் போன்ற பொருள்களில் கவிதை கையாளப்பட்டுள்ளதையும், அவை வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா போன்ற ஓசைகளுடன் கூடியவையாக இருந்தமை பற்றியும், நாடக வழக்கும், உலக வழக்கும் கலந்து வருவதுதான் பாடல் என்று தொல்காப்பியம் குறிப்பிடுவதையும் விரிவாக எடுத்தோதப்பட்டுள்ளன. இலக்கண நூல்கள், சங்க இலக்கியங்கள், நீதி இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், காப்பிய இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், தனிப்பாடல் திரட்டுகள், தற்காலக் கவிதைகள் போன்றவற்றில் காணப்படும் கவிதை என்ற சொல்லாட்சி பற்றியும் அவை பயன்படுத்தப்பட்ட விதம் பற்றியும் ஆராயப்பட்டுள்ளன.

**புதுக்கவிதையில் பாடுபொருள்** என்ற இரண்டாமியலில், இருபதாம் நூற்றாண்டுகளில் படைக்கப்பட்ட புதுக்கவிதைகளில் காணலாகும் அன்றாட மனிதனின் வாழ்க்கையில் ஏற்படும் நிகழ்வுகளும், ஏழை பணக்காரர் நிலை, வேலையில்லா திண்டாட்டம், தீண்டாமை, வரதட்சிணை, விதவை மறுமணம், முதிர்கன்னி, பெண்ணியம், கையூட்டு, பாலியல் கொடுமைகள், தாய்மை, மனிதநேயம், சுற்றுப்புறச் சூழல், அரசியல், வறுமை, காதல், சமயம், தத்துவம், மூடநம்பிக்கை, இயற்கை போன்றவற்றை பல்வேறு கவிஞர்களின் கவிதைத் தொகுப்பிலிருந்து எடுத்து விளக்கப்பட்டுள்ளன.

**சிற்பியின் கவிதைச் சிறப்பு** என்ற மூன்றாமியலில், கவிஞர் கையாண்டுள்ள கவித்திறன்களாக வெளிப்பட்டு நிற்கும் உவமை, குறியீடு, தொன்மம், படிமம், முரண், அங்கதம், அந்தாதி, எதுகை மோனை, பிறமொழிக் கலப்பு, பழமொழி போன்ற உத்தி முறைகள் பற்றி விளக்கப்பட்டுள்ளன.

**சிற்பியின் சமுதாயப் பார்வை** என்ற நான்காம் இயலில், பாமர மக்களை நியாயவிலைக் கடைகள் அநியாயப்படுத்தி நிற்பதையும், சாதி பிரச்சினை, தண்ணீர் பிரச்சினை போன்றவை சமூகத்தில் பெரும் விளைவுகளை உண்டு பண்ணுகின்றன என்பதையும், அரசியல் கட்சிகளின் நிலையையும் பலதரப்பட்ட உறவுகளின் பிணைப்பே குடும்பம், அதில் தாய், தந்தை, பாட்டி, சகோதரன், மனைவி, குழந்தை என்ற உறவுமுறையும், பாசப்பிணைப்பையும் சிற்பி குறிப்பிடுவதையும் இவ்வியல் விளக்குகிறது.

புராணங்களில் பெண்கள் எவ்வாறு படைக்கப்படுகிறார்கள் என்பதைக் கூறி, இன்றைய பெண்களுடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ளமையும் கண்டறியப்பட்டுள்ளன.

இயற்கை மனிதனுக்குச் செய்யும் அற்புதங்களையும், நதி, நிலவு, மழை, ஆறு, வானவில், காவிரி, பனி, கல், காடு, காற்று, வெள்ளம் போன்றவற்றின் மூலம் உணர்த்துவதை விளக்கியுள்ளமையும், வாழ்க்கைக்குத் தேவையான தத்துவமும், அறிவியலின் அதிவேக வளர்ச்சியையும் சிற்பியின் கவிதைகளின் வழி இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

வள்ளுவர், கம்பர், பாரதியார், ஷெல்லி, பாரதிதாசன், மலையாளக் கவிஞர் கடம்மனிட்ட இராமகிருஷ்ணன், விவேகானந்தர், காந்தியடிகள், திலகர், ஜீவா, லெனின், குருசரண்சிங், பெரியார், நேரு, அண்ணாதுரை, அப்துல்கலாம் போன்ற சான்றோர்களைக் குறிப்பிட்டு அவர்களின் செயல்களைப் பற்றி விளக்கியதையும், கவிஞர் பரந்துபட்ட பார்வையுடையவர் என்பதையும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த உண்மைகளும் முடிவுகளும் அந்தந்த இயல்களின் இறுதியில் வழங்கப்பட்டு இருப்பினும், ஆய்வின் நிறைவினைக் கருத்தில் கொண்டு; ஆய்வின் வழி கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுக்கப்பட்டு இறுதியில் முடிவுரையாக வழங்கப்பட்டுள்ளது.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள், இதழ்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்றவை அகர வரிசைப்படுத்தப் பெற்றுத் துணைநூற்பட்டியலாகக் கொடுக்கப் பெற்றுள்ளன.

**இயல் - 1**

**இலக்கியத்தில் கவிதை**

**1. கவிதையின் பழமை**

கவிதை பழமை - சொற்பொருள்

தொல்காப்பியத்தில் கவிதைக் கூறுகள்

**2. பிற இலக்கண நூல்களில் கவிதை குறிப்புகள்**

**3. இலக்கியக் கவிகள்**

சங்க இலக்கியத்தில் கவிதைகள்

I.எட்டுத்தொகையில் கவிதை

II.பத்துப்பாட்டில் கவிதை

**4. நீதிநூல்களில் கவிதை**

**5. பக்தி இலக்கியத்தில் கவிதை**

**6. காப்பியங்களின் கவிதை பற்றிய கருத்துக்கள்**

I. காப்பியக் கவிகள்

II. தமிழ்க்காப்பியம்

III. இஸ்லாமியக் காப்பியம்

Iv. கிறித்தவக் காப்பியம்

**7. சிற்றிலக்கியத்தில் கவிதை**

**8. தனிப்பாடல் திரட்டில் கவிதை**

**8. சிற்றிலக்கியத்தில் கவிதை**

**9. இக்காலத்தில் கவிதை எண்ணங்கள்**

I. நமக்குத் தொழில் கவிதை

II. எது கவிதை?

**கவிதையின் பழமை**

பண்டைய மக்கள் இயற்கையை நேசித்தனர். அந்த இயற்கைச் சூழலோடு இயைந்து தன் வாழ்வை நடத்தக் கற்றுக் கொண்டதால், அவ்வழகியல் உணர்வுகளை வாய்மொழியாகவும், எழுத்து வடிவமாகவும், வெளிக்கொணர முனைந்தனர். அதன் வெளிப்பாடே இலக்கியம். அக்கால மக்களின் உணர்வு வெளிப்பாட்டு வடிவமே கவிதை. "கவிதை, உலகில் இன்று நேற்றுத் தோன்றியதன்று, மிகப் பழங்காலந்தொட்டு அது பயின்று வருகிறது. உரைநடை தோன்றுவதற்கு முன்னமேயே கவிதை தோன்றிற்று என்று கூறுகிறவர்களும் உண்டு. சரித்திரம் தோன்றுவதற்கு முன்னர்த் தொட்டு எல்லா மொழிகளிலும் கவிதைகள் தோன்றியுள்ளன. இன்று உலகிடை எத்தனையோ மொழிகள் தமக்கென வரிவடிவம் இல்லாமல் இருக்கின்றன. எனினும் அவற்றிற்கூடக் கவிதை உண்டு என்பதை அறியலாம்."(1) பரந்துபட்ட தொல் உலகில் பல்வேறு உயிரினங்களும் இம்மண்ணில் உயிர்கொள்ளும் முன்னர் ஆதியில் தோன்றிய இனம் தமிழினம் எனப் புறப்பொருள் வெண்பாமாலையால் அறியமுடிகிறது.

"கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி"(2)

இத்தகு வீரக்குடியில் தோன்றிய தமிழ் மக்களின் முதல் மொழியே கவிதை மொழியாகும். ஆகவே திருமாலின் அடி, முடி காணாக் கதையைப் போல, கவிதையும் என்று தோன்றியது என அறுதியிட்டுக் கூறமுடியாத தொன்மை வாய்ந்ததாகும்.

**கவிதை – சொற்பொருள்**

'கவிதை' என்பது பல பெயர்களில் வழங்கி வருகிறது. யாப்பு, பாட்டு, தூக்கு, தொடர்பு, செய்யுள் என்பன ஒரே பொருளைக் குறிப்பன என்பதை அமிர்தசாகரரின் நூல் விளக்குகிறது.

"யாப்பும்
பாட்டும் தூக்கும் தொடர்பும் செய்யுளை
நோக்கிற் றென்ப நுணங்கி யோரே"(3)

கவிதை என்ற சொல் வழக்கில் வரும் முன்னர் பா, பாட்டு, செய்யுள் என்றே கவிதையை முன்னோர் வழங்கினர். வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனும் நால்வகைப் பாவின் ஓசையைக் கொண்டே இன்னபா, இன்ன பாட்டு எனக் குறிப்பிட்டனர். பின்னர், தாழிசை, துறை, விருத்தம் என வளர்ந்து காலப்போக்கில் கவி, கவிதை என்று பரவலாக வழங்கி வருகிறது.

சங்க இலக்கியப் பாடல்கள் பெரும்பாலும் ஆசிரியப்பாவிலேயே பாடப்பட்டுள்ளன. கலிப்பா யாப்பிற்கு கலித்தொகையே சான்று. வீரம், வேகம், ஆடல் போன்ற விறுவிறுப்பான பண்களைக் கூறுமிடத்து வஞ்சிப்பா பயன்படுத்தப்பட்டுள்ளது. வெண்பா, வஞ்சிப்பா முழுவதுமாக அமைந்த பாடல் சங்க இலக்கியத்தில் இல்லை என்பதை அறிய முடிகிறது. நால்வகைப் பாடல்களின் வளர்ச்சிக்குத் தாய்வீடாக சங்க இலக்கியப் பாடல்கள் அமைந்துள்ளன. எனவே கவிதை என்பது ஒரு பொருள் குறித்த பல சொற்களாகப் பயின்று வந்துள்ளது.

**தொல்காப்பியத்தில் கவிதைக் கூறுகள்**

மிகப் பழமையான இலக்கண நூல் தொல்காப்பியம். பல்வேறு இலக்கியங்கள் தோன்றுவதற்கான முதன்மைக் கூறுகள் இதில் உள்ளன. இந்த இலக்கண நூலில் சொல்லப்படாத பொருளே இல்லை. பாட்டு என்னும் பொருளில் வழங்கப்படும் கவிதையை பற்றியும், அவை அமையும் விதம் பற்றியும் தொல்காப்பியர் தெளிவாகக் கூறியுள்ளார். முப்பத்து நான்கு செய்யுள் உறுப்புகளைப் பற்றிக் கூறியுள்ளார். அதில் தனிநிலைச் செய்யுள் உறுப்புகளும், தொடர்நிலைச் செய்யுள் உறுப்புகளும் கவிதையில் பயின்று வரும் பாங்கினைத் தெளிவுபடுத்தியுள்ளார். நூற்பாவில் பாட்டு என்பது பயின்று வரும் விதம் பற்றிய குறிப்பைக் காணமுடியும்.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்
உரியதாகும் என்மனார் புலவர்"(4)

நாடக வழக்கும், உலகியல் வழக்கும் கலந்து வருவது தான் பாடல் சான்ற புலனெறி வழக்கம். இதில் புலவர்களால் பாடப்படும் அகப்பொருள் சார்ந்த நிகழ்வுகள் அடங்கும்.

"நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளொடு
ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின"(5)

நெடுவெண்பாட்டாவது அளவடியில் நெடிய பாட்டாகும்.

குறுவெண் பாட்டாவது அளவடியில் குறுகிய பாட்டாகும் என்று வெண்பா யாப்பைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

"பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டின் இயல பண்ணத்திய்யே"(6)

பண்ணைத் தோற்றுவிக்கும் பாட்டுக்கள் பொருள் உடையனவாக இருத்தல் வேண்டும்.

"பாட்டிடை வைத்த குறிப்பினாலும்
பாவின் றெழுந்த கிளவியானும்
பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி யானும்"(7)

தொல்காப்பியர் உரைநடையின் வகைகளைக் கூறும்பொழுது பாட்டு என்பது சிறந்த குறிப்புப் பொருளால் பாடப்பட வேண்டும் என்கிறார்.

"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே"(8)

பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், சொல் என்ற ஏழும் யாப்பின் பகுதிகளாகும். இவை சேரர், சோழர், பாண்டியர் என்னும் மூவேந்தரின் நாட்டிலே வாழ்ந்த புலவர்களால் வளர்க்கப்பட்டது. இதில் பாட்டுயாப்பு என்பது இலக்கியத்தில் முதலிடம் பெறுவதைக் காணமுடிகிறது.

"அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே"(9)

அடி சிறப்புடையதாக இருந்தால் அது பாட்டாகக் கருதப்படும். இதன்மூலம் 'பாட்டு' என்பது சிறப்புடையது என்றறிய முடிகிறது.

இலக்கியத்தில் பெரும்பாலான அடிகள் பாட்டாகவே கருதப்படுகின்றன. ஆகவே தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படும் பாட்டு, செய்யுள், என்பன 'கவிதை' என்பதையே குறிப்பவையாகும். இவற்றை இயற்றுவதற்கு ஒரு வரைமுறையினையும் அடியளவையும் குறிப்பிட்டுள்ளனர். தொல்காப்பியர் குறிப்பிட்ட பாட்டிலக்கணம், பின் தோன்றிய சங்க இலக்கியங்களில் சிறப்பான முறையில் கையாளப்பட்டதையும் அவ்விலக்கியம் இன்றும் மக்களிடம் செல்வாக்குப் பெற்றுள்ளதையும் காணமுடிகிறது.

**இலக்கண நூல்களில் கவிதை பற்றிய குறிப்பு**

இலக்கண நூல்களுள் மிகவும் தொன்மை வாய்ந்த நூலாகக் கருதப்படுவது தொல்காப்பியம். இதன் பின்னர் பல இலக்கண நூல்கள் தோன்றியுள்ளன. இவை, தொல்காப்பியத்தை மையமாகக் கொண்டே எழுதப்பட்டிருக்க வேண்டும். நன்னூல், தண்டியலங்காரம், ஐந்திறம், அமுதசாகரம் போன்ற நூல்களில் கவிதை இடம் பெறுவது பற்றி இவ்வியல் ஆய்கிறது.

"பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போறபல
சொல்லால் பொருட் கடனாக
உணர்வின் வல்லார் அணி பெறச்
செய்வன செய்யுள்"(10)

எலும்பு, தோள், கை, கால், தசை போன்ற உறுப்புகள் சேர்ந்து அமைந்த உயிருள்ள உடல் போல, எழுத்து, அசை, சீர், தளை, அடி,

தொடை போன்றவற்றால் தொடுக்கப்படுவது செய்யுள் என்று நன்னூலார் கூறுகின்றார்.

"செந்திருவுந் திங்களும் பூவுந் தலை சிறப்பச்
சந்தத் தொடையோ டணி தழுவிச் - செந்தமிழ் நூல்
கற்றார் புனையும் கவிபோல் மனங்கவரும்
முற்றா முலையான் முகம்"(11)

அழகான நெற்றியில் பொட்டும், தலையில் பூ முதலியவற்றைச் சூடி அழகு தரும் பெண்ணைப் போல சந்தம், ஓசை, தொடை, சொற்கோவை, அணி போன்றவை கவிதைக்கு அழகு சேர்ப்பவை எனப் பெண்ணை கவிதைக்கு உவமைப்படுத்துகிறார். இதனை,

"சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசையுடைமை ஆழமுடைத்தாதல்
முறையின் வைப்பே உலக மலையாமை
விழுமியது பயத்தல், விளங்குதா ரணத்த
தாகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே"(12)

என்று நன்னூல் கூறுகிறது. கவிதை, பார்ப்பதற்கும் படிப்பதற்கும் சுருக்கமாக இருக்க வேண்டும். ஆனால் ஆழமான பொருள் பொதிந்திருக்க வேண்டும். படிப்போருக்கு இனிமை தர வேண்டும். எதுகை, மோனை, சந்தம் போன்றவற்றைக் கொண்டிருக்க வேண்டும். இவை பத்து அழகும் பயின்று வருவதே சிறந்த நூல். இவை எல்லா வகை நூல்களுக்கும் பொதுவான இலக்கணமாகும்.

‘கவிதை’ என்பது ஒரு தனிச் செடியல்ல, அது பல்வேறு கிளைகளைக் கொண்ட விருட்சம். கவிதையில் பல வகைகள் உண்டு அதனை பாட்டியல் நூல் விளக்குகிறது.

“வாய்ந்த கவிகமகன் வாதி வாக்கி வகை வனப்பும்

ஆய்ந்தவல் ஆசு மதுரமும் சித்ர வித்தாரமுமே

ஏய்ந்த வகை நான்கும் கள்ளக்கவி முதல் ஈர் இரண்டும்

தேய்ந்த பிறைநூல் சேயிழையாய் இன்று தேர்ந்து”(13)

பொருந்தியகவி, கமகன்கவி, வாதிகவி, வாக்கி கவி என்னும் வகைகளும் ஆசுகவி, மதுரகவி, சித்ரகவி, வித்தாரகவி எனும் வகைகளும் கள்ளக்கவி, சார்த்துக்கவி, வெள்ளைக்கவி, பிள்ளைக் கவி எனக் கவிதையின் வகைகள் நான்கு நான்காகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளதை விளக்குகிறது.

‘ஐந்திறம்’ என்பது இந்திரனால் செய்யப்பட்ட இலக்கணநூல் அதில் ‘கவி’ என்னும் சொல் பயின்று வரும் விதம் பற்றி இவ்வியல் விளக்குகிறது.

“ஓமியல் ஓவியம் ஓங்கலை நிலைநெறி

கவினியல் நிலையுறும் கலைத்திறன் ஆய்ந்து”(14)

“கதிர்வடி வியலுறும் கவினுறும் புறமாய்”(15)

“பாடல் இசைநெறி பண்புற நோக்கி

மெலிதல் நலித்தற் படுத்தல்”(16)

எனக் கவியெனும் சொல் இடம் பெற்று வந்துள்ளதை விளக்குகிறது. இலக்கண முறைப்படி பாட்டு, செய்யுள் என்பன கவிதை என்பதையே குறிக்கும் எனப் பின்னர் வந்த இலக்கண நூல்களும் எடுத்துரைப்பதைக் காணமுடிகிறது.

## இலக்கியக் கவிகள்

'கவிதை' என்பது வெவ்வேறு காலகட்டத்தில் வாழ்ந்த வேறு வேறு புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பாகும். ஆண்கள் மட்டுமே இலக்கியங்களைப் படைத்தனர் என்று ஒருமைப்படுத்த முடியாத அளவிற்கு பெண்பாற் புலவர்களும் கவிதை இயற்றும் திறன் பெற்றிருந்தனர் என்பதை அப்புலவர்களின் பாடல்கள் உணர்த்துகின்றன.

மன்னர்கள் புலவர்களை ஆதரித்தனர். அதனால் புலவர்கள் மன்னனையும் அவனது நாட்டுச் சிறப்பையும் தம் கவிதைகளில் பாடினர். மன்னர்கள் தம்மைப் பாடிய புலவருக்கு அளவு தெரியாது, பொன்னும் பொருளும் கொடுத்தனர். யானை, சேனை, ஊர், நிலம் முதலியவற்றைப் புலவர்களுக்குப் பரிசாகக் கொடுத்தனர். அது மட்டுமல்லாது சிறந்த புலவரெனப் பட்டமும் கொடுத்தனர். புலவர்களை 'கவிக்கு அரசன்' எனக் கௌரவப்படுத்தினர். ஒட்டக்கூத்தர், முடிநாகராயர், வில்லிபுத்தூரர் போன்றோர் இத்தகைய சிறப்புகளைப் பெற்றவர்களாவர்.

"ஐந்து பாவுடை நால்வகைக்
கவிக்கதி பதியாய்
வந்து வட்டமா மணியின் நன்
மணிமுடி புனைந்து"[17]

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்னும் ஐவகை பாக்களிலும் சிறந்தவராய் ஆசுகவி, மதுரகவி, சித்ரகவி,

வித்தாரகவி என்னும் நால்வகைக் கவிக்கு அதிபதியாய் வில்லிபுத்தூரர் மணிமுடி சூட்டியதை திருமுறைகண்ட புராணத்தால் அறியமுடியும்.

"புரைதவிர் கவிதா சர்வ பூமனென்

றொரு பேர் பெற்றுத்

தரையில் வாழ்புலவ ருள்ளத் தருக்கெலாம்

முருக்கும் தக்கோன்"(18)

என்று புலவர் புராணம் இவரைப் பாராட்டுகிறது. இவர் காளக்கவி, கவிசார்ம பௌமர் என்ற பட்டமும் பெற்றவர். இவரது கவிதை அழியாப்புகழ் படைத்ததாகும்.

புலவர்களின் பாடல்கள் அரசன், சான்றோர் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது. தொல்காப்பியம் என்னும் இலக்கண நூல் நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையில் அரங்கேற்றப்பட்டது என்பதைப் பனம்பாரனாரின் சிறப்புப் பாயிரத்தால் அறியமுடியும்.

"நன்பாட்டுப் புலவனாய் சங்கமேறி

நற்கனகக் கிழிதருமிக்கு அருளினான் காண்"(19)

சிறப்பான பாடல்களுக்கு 'பொற்கிழி' என்னும் பரிசை தருமிக்கு வழங்கி கௌரவப்படுத்தினான் பாண்டியன்.

புலவர்கள் தாம்பாடிய கவிதையில் தன் பெயரையும் இணைத்துப் பாடினர். சில புலவர்களின் பெயர்கள் மறைந்து போயின. அவர்களுக்குப் பின் அப்புலவர்களின் நூலின் பெருமையைச் சுவைத்தறிந்தவர்கள் அப்புலவர்களைப்

பாராட்டியுள்ளனர். கவிதையில் புலவர்களின் பெயர்கள் அமையும் விதத்தை சில பாடல் வரிகளால் அறியமுடியும்.

விறலியர்களும் பாடல் பாடியும் ஆடியும் பரிசு பெற்றதை ஆற்றுப்படை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

"மின்னிழை விறலியர் நின்மறம் பாட"[20]

"ஆடுக விறலியர் பாடுக பரிசிலர்"[21]

பெரும்பாணன், சிறுபாணன் போன்றோருடன் சென்று விறலியர் பரிசு பெறுவர்.

"நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற வூரினும் பலவே"[22]

"மறுவில் வாய்மொழி யரிசில்கிழார்"[23]

"பெருங்குன்றூர்கிழார் பாடினார் பத்துப்பாட்டு"[24]

"பரணர் பாடினார் பத்துப்பாட்டு"[25]

"மென்சொற் கலப்பையர்"[26]

"வெட்டுதற்கோ கவிஒட்டக் கூத்தன் இல்லை"[27]

"மாங்குடி மருதன் தலைவனாக"[28]

"புகழ் செய்யுள் கழாத்தலை"[29]

"இருந்தால் இருப்பேன் எழுந்தேனே யாயின்
பெருங்காள மேகமாய்"[30]

"அணிமேதை ஆய் நல்லவீட்டு நெறியும்
கணிமேதை செய்தான் கலந்து"[31]

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர்
ஜெயங்கொண்டான் விருத்த மென்னும்

ஒண்பாவிற் குயர்கம்பன் கோவையுலா

அந்தாதிக் கொட்டக் கூத்தன்

கண்பாயக் கலம்பகத்திற் கிரட்டையர்கள்

வசைபாடக் காளமேகம்

பண்பாய அயர்சந்தம் படிக்காச

லாதொருவர் பகரொணாதே"(32)

எனும் பாடல் பாடிய புலவர்கள் அந்தந்த இலக்கியத்தால் சிறப்புப் பெற்றதை அறியமுடிகிறது. புலவர்களைச் சான்றோர் கவிஞன், கவி, புலவன், அறிஞர் எனப் பல்வேறு பெயர்களிட்டு அழைத்தனர்.

"கருவூலப் பொருள் கூட அள்ள

அள்ள குறையும் - சங்கக்

கவிப் பெரியோர் கற்பனையோ

அகழ்கின்ற ஊற்றாக நிறையும்"(33)

என்று புலவர்களின் கற்பனைத் திறனை எடுத்துரைக்கிறது.

**சங்க இலக்கியத்தில் கவிதை**

தமிழ் இலக்கியம் மிகப் பழமை வாய்ந்த இலக்கியமாகும். இது கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு பழமை வாய்ந்ததாகும். அக்கால இலக்கியமே சங்க இலக்கியமாகும். பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் சங்க இலக்கியங்களாகும். சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய நூல்கள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களாகும். இவை நீதி நூல்கள் என அழைக்கப்படுகின்றன.

அக்கால மக்கள் நிலங்களை ஐவகையாகப் பிரித்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். ஒவ்வொரு மக்களும் தாம் வாழும் நில அமைப்பிற்கேற்ப வாழ்க்கை முறைகளை அமைத்துக் கொண்டனர்.

தங்களுக்கென தனித்தனி இறைவனை வழிபட்டு இறைவழிபாடும் நடத்தினர். அன்றைய இயற்கைச் சூழல் மனதில் தாக்கத்தை ஏற்படுத்தியதால் அந்நிலக் கருப்பொருளைப் பின்னணியாகக் கொண்டு கவிதைகள் புனையப்பட்டன. அம்மக்களின் கலை, கலாச்சாரம் தமிழ்ப்பண்பாடு, பாரம்பரியம், மகளிர்நிலை, ஆடவர் நிலை, வாழ்வியல் நெறிகள் போன்றவற்றைப் பிரதிபலிக்கும் காலக் கண்ணாடியாகும். "கவிதையின் ஆக்கத்துக்கு வெறும் பாடுபொருள் மட்டும் போதாது. அப்பொருளையும் சொல்ல வேண்டிய முறையில் சொல்லிச் செல்லவும் வேண்டும். இதனைத் தான் இளம்பூரணர் சுவைபடக் கூறுதல்"(34) என்பர்.

**எட்டுத் தொகையில் கவிதை**

எட்டுத்தொகையில் உள்ள பாடல்கள் பல்வேறு புலவர்களால் பாடப்பட்டு, அகம், புறம் எனத் தொகுக்கப்பட்டது. அகத்தை மையமாகக் கொண்டு பாடப்பட்டவை ஐந்து. இதில் 'அகம்' என்ற பெயரைக் கொண்ட நூல் அகநானூறு. புறநூல் மூன்றாகும். 'புறம்' என்னும் பெயரைக் கொண்ட நூல் புறநானூறு. இவ்விரண்டு நூல்களும் அவ்விலக்கியத்தின் பெயரைக் கொண்டுப் புனையப்பட்டுள்ளன. எல்லா இலக்கியங்களிலும் 'பாட்டு' என்ற

சொல் குறிப்பிடப்படுகிறது. குறைந்த அடியளவுடைய குறுந்தொகையில் ‘கவி’ என்ற சொல்லும் பரந்துபட்டதோர் ஓசையை உடைய பரிபாடலில் ‘கவிதை’ என்ற சொல்லும் காணப்படுகிறது.

வெள்ளிவீதியாரின் குறுந்தொகைப் பாடலில் தலைவியின் நிலையைச் சொல்லுமிடத்து ‘கவி’ எனும் சொல் பயன்படுத்தப்படுகிறது.

“கன்று முண்ணாது . . . . . .

திதிலை யல்குலென் மாமமைக் கவினே”(35)

குற்றமில்லாத பலரும் புகழக்கூடிய அறிவுடைய புலவர்கள பாடிய நல்ல கவிதை பொய்யாகாமல் என்றும் நிலைத்து நிற்கும் தன்மையுடையது.

“மாசுஇல் பனுவற் புலவர் புகழ்புல

நாவின் புனைந்த நன்கவிதை மாறாமை”(36)

என்று பரிபாடலில் ‘கவிதை’ என்னும் சொல் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகிறது.

“அகவன் மகளே அகவன் மகளே

மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்

அகவன் மகளே பாடுக பாட்டே

இன்னும் பாடுக பாட்டே அவர்

நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே”(37)

என்று தோழி கூறுகிறாள். பாட்டு கேட்க கேட்க இனிமை

பயப்பதாகும். கேட்போரின் உள்ளத்தை நெகிழ வைக்கும் தன்மை பாடலுக்குண்டு. தன் தலைவனின் பெருமையை ஒரு குறத்தி கூறுவதைக் கேட்டதால் தலைவிக்குத் தாங்கமுடியாத மகிழ்ச்சி ஆதலால் தான் இன்னும் நீ தலைவனது குன்றத்தின் சிறப்பைப் பாடிக்கொண்டே இரு என அவளின் தோழி கேட்கிறாள். தமிழ்க் கவிதைகள் எதுகை, மோனை, விளி, வியங்கோள் போன்றவற்றை மையமாகக் கொண்டு புனையப்பட்டுள்ளன.

**பத்துப்பாட்டில் கவிதை**

பத்துப்பாட்டு என்பது 'பாட்டு' என்னும் பெயரில் அமைந்த பத்து இலக்கியங்களின் தொகுப்பாகும். இதில் இடம்பெறும் குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு என்பவை பெயரளவிலும் பாட்டு இலக்கியமாகத் திகழ்கின்றன. இவை இரண்டும் இசையோடு கூடிய பாடல் வகைகளைச் சொல்லுமிடத்து வஞ்சியடிகள் விரவிவரக் காணமுடிகிறது. இவற்றுள் ஐந்து இலக்கியங்களான பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, திருமுருகாற்றுப்படை, கூத்தராற்றுப்படை என்பவை ஆற்றுப்படை நூல்களாகும். ஆற்றுப்படை என்பது பரிசில் பெற்ற புலவன் பரிசில் பெற விழைபவரை இந்த மன்னனிடம் சென்றால் இன்ன பொருள் பெறலாம் என வழிப்படுத்தலைக் குறிக்கும். தான் பெற்ற இன்பத்தை மற்றவரும் பெறவேண்டும் என்ற பிறர் நலன் விரும்பும் புலவர்களையும், பாணனையும், விறலியரையும் பற்றிப் பாடப்படுவதாகும். குறுகிய அடியாகிய 103 அடிகளைக்

கொண்டது முல்லைப்பாட்டு, நெடிய நீண்ட அடியான 782 அடியளவைக் கொண்டது மதுரைக்காஞ்சி ஆகும்.

பட்டினப்பாலையின் பாடலைக் கேட்ட சோழன் கரிகாலன் அந்நூலைப் பாடிய புலவருக்கு 16 நூறாயிரம் பொன் பரிசாக வழங்கினான் என்பதை செயங்கொண்டார் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

"பாடு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன்
பத்தொடு ஆறுநூ றாயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்"(38)

அக்கால மன்னர்கள் புலவர்களைச் சிறப்பித்து தமிழையும் தமிழ்க் கவிதைகளையும் வாழவைத்தனர் என்பதை அறியமுடிகிறது.

இந்நூலில் 'கவிதை' என்ற சொல் இடம்பெறவில்லை. பாட்டு என்ற சொல்லே இடம்பெற்றுள்ளது. பாட்டிலும் தொகையிலும் இடம்பெறாத கருத்துக்களே இல்லை என்னும் அளவுக்கு அக்கால மக்களின் வாழ்வியல் பதிவுகளாகச் சங்க இலக்கியங்கள் மிளிர்கின்றன.

**நீதிநூல்களில் கவிதை**

நீதிநூல்கள் பதினெட்டும் சங்க மருவிய காலத்தில் தோன்றியவையாகும். மக்களின் வாழ்க்கைப் பற்றி மேல்க்கணக்கு நூல்கள் கூறிய போதிலும், அவர்களின் அறவாழ்வை கீழ்க்கணக்கு நூல்கள் கூறுகின்றன. மக்களின் வாழ்வை சீராக செம்மையாக நல்வழிப்படுத்த சில அறிவுரைகளையும் நீதிகளையும் போதித்தனர்.

அம்மக்கள் தவறான வாழ்வைத் தேடிச் சென்றுவிடாமலும், கொடிய நோய்களில் அகப்பட்டு விடாமலும் வாழ்வில் வளம் பெறவும் எழுதப்பட்டது இந்த நீதிக்கவிகள். ஏலாதி, சிறுபஞ்சமூலம், திரிகடுகம் போன்றவை பிணி போக்கக் கூடிய மருத்துவத் தன்மைகளைப் பற்றிக் கூறுவன. சாதிமத பேதமற்று அனைவராலும் போற்றக்கூடிய நூல் திருக்குறள். இதை இரண்டடிக் கவிதை எனினும் தகும். குறளில் சொல்லப்படாத கருத்துக்களே இல்லை. இதில் வாழ்வதற்கு வேண்டிய அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருளும் புதைந்துள்ளன. பல மொழிகளிலும் பிறந்த பெருமை திருக்குறளைச் சாரும். நீதிநூல்களில் ‘கவிதை’ என்ற சொல் காணப்படவில்லை. கவி, பாட்டு என்ற குறிப்புள்ளது. ‘கவி’ என்னும் சொல் ‘கவிதை’ என்னும் பெயரில் மூன்று இடங்களில் பயின்று வந்துள்ளது.

> “வேகமும் செந்தமிழ் தேற்றான் கவி செயலும்
> நாவகம் மேய் நாசன் நகை”[39]

என்று சிறுபஞ்ச மூலத்தால் அறியமுடியும்.

> “பொருள் உணர்வார் இல்வழிப் பாட்டு உரைத்தல் இன்னா”[40]
>
> “பண் அமையா யாழின்கீழ்ப் பாடல் பெரிது இன்னா”[41]

என இன்னா நாற்பதில் பாட்டு என்ற சொல் இடம் பெற்றுள்ளதை அறியலாம். இக்கவிதைகள் என்றும் அழியாதவை. இவை முக்காலத்தும் படிப்போரின் வாழ்வைச் செம்மை செய்து சீர்தூக்க உதவும். “பூச்சற்ற இனிய எளிய சங்க கால வாழ்க்கையில் சமூக அரசியல் ரீதியான மாற்றங்கள் விளைந்து வாழ்க்கை நெறியில்

சிதைவுகள் தோன்றிய போதுதான் அறவியல் எழுத்தாளர்கள் தோன்றியிருக்க வேண்டும். அத்தகைய மாறுதலான காலகட்டத்தில் தான் பதினெண் கீழ்கணக்கு ஆசிரியர்கள் நீதிபோதனையைத் தம் இலக்கிய நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும்"(42) என மனித வாழ்வில் நீதிநூல்கள் பெரும்பங்கு ஆற்றியுள்ளதை அறியமுடிகிறது.

**பக்தி இலக்கியத்தில் கவிதை**

ஆழ்வார்களும், நாயன்மார்களும் பல்வேறுத் திருத்தலங்களுக்குச் சென்று இறைவனின் புகழைப் பாடினர். இறைவழிபாடு என்பது மனித வாழ்வோடு ஒன்றிய ஒரு கூறாகும். தமிழ்மக்கள் மட்டுமல்லாது உலக உயிரினங்கள் எல்லாமே முதலில் இறைவழிபாட்டில் முதன்மை செலுத்தின. அல்லும் பகலும் உணவும் நீரும் பருகாமல் தம் உடலை வருத்தி பக்திப் பாமாலையை இறைவனுக்குச் சூட்டினர்.

"வெறும்
புத்தியைக் கொண்டு புனைகின்ற கவிதைகள்
பூஜைக்கு சேர்வதில்லை - கவி
ஒத்திகையில் கொஞ்சம் பத்தி சேராவிடில்
உள்ளம் தொடுவதில்லை"(43)

கவிதையில் பக்திமணம் இருக்க வேண்டும். அந்தக் கவிதையால் மனித உள்ளம் பண்பட வேண்டும் என்கிறார் வ.வே.சு. ஐயர்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவனுக்கு ஆற்றிய தொண்டு குறிப்பிடத்தக்கதாகும்.

“இன் கவிபாடும் பரம கவிகளால்

தன் கவிதான் தன்னைப் பாடுவியாது இன்று

நன்கு வந்து என்னுடன் ஆக்கி என்னால் தன்னை

வன் கவிபாடும் என் வைகுந்த நாதனே”(44)

எல்லாப் பொருளும் தாமாக இருந்து, இனிய கவிதையை என்னைப் பாடவைத்த வைகுந்த நாதனை தன் கவியால் புகழ்கிறார்.

“செஞ்சொற் கவிகாளுயிர் காத்தாட்

செய்யின் திருமாயிருஞ்சோலை

வஞ்சகக் கள்வன் மாமாயின்

மாயக் கவியால் வந்து.....”(45)

செம்மையான கவிதைச் சொற்களால் என்னைக் காத்தவனே என திருமாலிருஞ்சோலையில் விற்றிருக்கும் இறைவனை வணங்குகிறார்.

“என்ற நாவில் இன்கவி யானொரு

வர்க்கும் கொடுக்கிலேன்”(46)

இறைவா! உன்னுடைய புகழை தினமும் என் நாவில் துதித்துப் பாடவே நீ என்னைப் படைத்தாய் என்று நம்மாழ்வார் தமது பாடலில் ‘கவி’ என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.

கிறித்தவப் பெரியாரான பேராயரின் பெருமையைத் தம் கவிப்பாக்களால் பாடிப் புகழ்கிறார் கன்னிமாரியம்மாள்.

“கலைஞான வடிவாம் பேராயர் பெருமையைக்

கவிதையால் தரவே கிளம்பினேன் அன்பால்”(47)

நபிப் பெருமானின் பெருமைகளை அனைவரும் உணரவேண்டும் என பெரிய கவிதை எழுதினேன் என்கிறார்.

"அரியோர் போற்றும் முகம்மதுவின்

அருமை உணர்ந்திர் எனக்கூறி

பெரிதோர் கவிதை மடல்எழுதிப்

பிழைஇல் லாத மன்னனுக்கு"(48)

நபிப்பெருமானின் அருளுரையை பிழை ஏதும் இல்லாத மன்னன் மறுக்காமல் கேட்டு மக்களுக்கு உதவி புரிந்தான். இறைவனின் பெருமையை அவன் தனக்குக் கொடுத்த அழியாத கல்விச் செல்வத்தாலே புகழ்ந்து போற்றினார்.

"பாடல் இசைநெறி பண்புற நோக்கி

மெலிதல் நலித்தற் படுத்தல்"(49)

எனக் கவியெனும் சொல் இடம் பெற்று வந்துள்ளதை விளக்குகிறது. இலக்கண முறைப்படி பாட்டு, செய்யுள் என்பன கவிதை என்பதையே குறிக்கும் எனப் பின்னர் வந்த இலக்கண நூல்களும் எடுத்துரைப்பதைக் காணமுடிகிறது.

**காப்பியங்களில் கவிதை பற்றிய கருத்துக்கள்**

சங்கம் மருவிய காலத்தில் தோன்றியவை காப்பியங்கள். இவற்றை ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள் என இரண்டாகப் பிரிப்பர். காப்பியங்கள் என்பவை மூன்று உறுதிப்பொருள்களை மையமாகக் கொண்டு ஒருவரின் வாழ்க்கையை விளக்கிக் கூறுவதாகும். இவை நீண்ட நெடுங்கவிதைகளாக அமையும். காப்பியங்கள் எல்லா மதங்களிலும் எழுந்துள்ளன. சமணம், சைவம், வைணவம், கிறித்தவம், இஸ்லாம் என பாகுபாடு இல்லாமல் அந்தந்த மதத்தவரும் அந்த மதக்

கருத்துக்களையும் போதனைகளையும் கூறுமிடத்து எழுந்தவை. குடிமக்களை மையமாகக் கொண்டு எழுதப்பட்டுள்ள காப்பியங்களாகச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் உள்ளன. இஸ்லாமியக் காப்பியம் நபிப் பெருமானின் வாழ்வைப் பற்றியும் கிறித்தவக் காப்பியம் இயேசு பெருமானின் வாழ்க்கையைப் பற்றியும் எடுத்துக் கூறும் இலக்கியங்களாகத் திகழ்கின்றன.

"நாடகக் காப்பியம் நன்னூல் நுனிப்போரும்"[50]

'காப்பியம்' என்ற சொல் மணிமேகலையில் முதன் முதலில் கையாளப்பட்டுள்ளது. 'காப்பியம்' என்பது குடிப்பெயராகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. காப்பியங்களில் கவி, கவிதை என்ற சொல் வெளிப்படும் திறம் பற்றி இவ்வியல் விளக்குகிறது.

"காப்பியக் கவிகள் காம எரிஎழ விகற்பத்திட்டார்"[51]

என சீவகசிந்தாமணியில் காப்பியக் கவிஞர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். காப்பியங்களில் கவிதையைக் குறிக்கும் 'கவி' என்ற சொல்லும், கவிஞனைக் குறிக்கும் 'கவி' என்ற சொல்லும் பயன்படும் விதம் பற்றி இவ்வியல் ஆய்கிறது.

**காப்பியக் கவிகள்**

சங்க காலப் புலவர்களுக்கு உயர்வான மதிப்பும் மரியாதையும் இருந்ததை இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. அதுபோலக் காப்பியக் கவிஞர்கள் அன்றைய சூழலை தம் காப்பியங்களில் பதிவு செய்துள்ளனர். அவற்றைப் படித்துச் சுவைத்த ஆன்றோரும்

சான்றோரும் அக்கவிஞர்களைப் பற்றியும் அவர்களின் படைப்புச்சுவை பற்றியும் எடுத்துக் கூறியுள்ளனர்.

"எண்ணிய சகாத்தம் எண்ணுற்று

ஏழின்மேல் சடையன் வாழ்வு

நண்ணிய வெண்ணெய் நல்லூர்

தன்னிலே, கம்ப நாடன்

பண்ணிய இராம காதை

பங்குனி அந்த நாளில்

கண்ணிய அரக்கர் முன்னே

கவிஅரங் கேற்றி னானே!"(52)

பங்குனி நன்நாளில் திருவரங்கத்தில் இராமனின் கதையை கம்பர் அரங்கேற்றினார் என்பதை அறியமுடியும்.

"பொய்இல் கேள்வி புலமையினோர் புகல்

தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே"(53)

கம்பர், வால்மீகியை புலமை பொருந்திய தெய்வமா கவிஞன் எனப் போற்றியுள்ளார்.

"வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த வால்மீகி என்பான்,

தீம்கவி, செவிகள் ஆரத் தேவரும் பருகச் செய்தான்;

ஆங்கு, அவன் புகழ்ந்த நாட்டை, அன்பு எனும் நறவம் மாந்தி

மூங்கையான் பேசல் உற்றான் என்ன, யான் மொழியல்

உற்றேன்"(54)

என்னும் வரிகள் வால்மிகியின் கவிதைச் சுவையைப் புலப்படுத்துகின்றன.

"கம்ப நாடன் கவிதையிற் போற்

கற்றோர்க் கிதயங் களியாதே..."(55)

"கம்பனை மறந்தாலும் தமிழேது

கவிதை என்பதும் கமழாது"(56)

எனும் நாமக்கல்லாரின் வரிகளாலும் கவிதைக்கு இலக்கணமாக காப்பியம் அமைத்தவர் கம்பர் என்பது பெறப்படுகிறது.

குடிமக்கள் காப்பியமான சிலப்பதிகாரம் சிலம்பால் பெயர் பெற்ற காப்பியமாகும். இது சேரன் செங்குட்டுவனின் இளங்கோ இயற்றியது.

"உரை இடையிட்ட பாட்டுடைச் செய்யுள்

உரைசால் அடிகள் அருள மதுரைக்

í é k Vè ï [ ÄVÝ>[ ¼ïâ ¦ ª [" (பதிகம்: 87-89)

என சிலப்பதிகாரப் பதிகம் விளக்குகிறது.

உமறுப்புலவர் 'சீறாப்புராணம்' இயற்ற தமக்கு உதவியாக இருந்த வள்ளலை தம் காப்பியத்தில் நினைவு கூர்ந்துள்ளார். இது கவிஞர்களிடம் காலம் காலமாக இருந்து வரும் உயரிய பண்பாகும். 'நன்றி மறத்தல் நன்றன்று' எனும் குறள் மொழிக்கு இலக்கணமாக வாழ்ந்தவர்கள் கவிஞர்கள் என்பதை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

"சூழ்வினைச் சிலம்பு காரணமாக

சிலப்பதிகாரம் என்னும் பெயரால்

நாட்டுதும் யாம் ஓர் பாட்டு உரைச் செய்யுள்"(பதிகம்:58-60)

எனும் பதிகப் பாடலால் அறியலாம்.

“தேசிகத் திருவினோசை கடைப்பிடித்து

தேசிகத் திருவினோசை எல்லாம்

ஆசின் றுணர்ந்த வறிவின னாகித்

கவியது குறிப்பு மாடற் றொகுதியும்

பகுதிப் பாடலுங் கொளுத்துங் காலை”(57)

அரங்கேற்றக் காதையில் இசைக்கு மட்டும் இலக்கணம் கூறாமல் அது கவிஞனுக்கும் பொருந்தி வருமாறு இலக்கணம் வகுத்தது குறிப்பிடத்தக்கதாகும்.

சிலப்பதிகாரம் குன்றக் குரவையில் வரும் ‘உரைப் பாட்டு மடை’ என்பதற்கு உரை கூறுகையில் ‘பாட்டு’ என்பது கவிதை என்பதையே குறிக்கும் என்கிறார் அடியார்க்கு நல்லார். பழங்காலந்தொட்டு வாய்மொழியாகக் கூறப்பட்ட இக்கதை, இன்று படிப்போரின் மனதில் நீங்கா ஓவியமாகப் பதிந்து இளங்கோ, சாத்தனார் பெயருக்கு புகழ் சேர்க்கிறது. இதில் ‘பாட்டு’ என்னும் சொல் காணப்படுகிறது.

விருத்தப்பாவில் எழுந்த முதல் காப்பியம் சீவகசிந்தாமணி. சீவகன் என்னும் மன்னனின் பிறப்பு முதல் துறவு வரை உள்ள எல்லா நிகழ்வையும் முழுமையாகக் கூறும் காப்பியமாகும்.

கவிமதங் கடந்து காமர் வனப்புவிற் றிருந்த கண்ணார் ”(58) கவிஞனின் கற்பனை படிப்போருக்கு இன்பம் தருவது”(58) என்பர். கவிஞன் என்னும் பொருளில் ‘கவி’ என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடியும். இது போன்று

காப்பியங்களில் குறிப்பிடப்படும் பாட்டு என்பது கவிதை என்பதைக் குறிக்கும். எனவே, காப்பியமாயினும் இலக்கியமாயினும் அதில் வரும் ‘பாட்டு’ என்பது கவிதையைக் குறிக்கும். உரைநடையை விட படிப்போரின் மனதில் எளிமையாக இதமாகப் பதிய உதவிபுரிபவை பாடல்களே. பாடல்கள் தான் எளிதில் மனப்பாடம் செய்யவும் கூடியவை. ஆகவே பாட்டு தான் காப்பியத்தின் மூலாதாரமாகக் கருதப்படுகிறது.

கம்பராமயணத்தில் ‘கவி’ என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. இரணிய வதைப் படலத்தில் தனது இறைவனான நாராயணனின் சிறப்பைப் பிரகலாதன் கூறுகையில், கவிஞன் என்பவன் நான்கு மறைகளும், அகம், புறம் என்னும் இருபொருளையும் அறிந்தவன். அதாவது முற்றும் தெரிந்தவனே கவிஞன் எனக் கூறுகிறான்.

“கவிகள் ஆகுவார்”(59)

இராமனால் அம்பு எய்தப்பட்ட போது வாலி சீற்றம் கொண்டான். பின்பு மனம் மாறினான். அவனின் மாற்றம் பற்றிக் கூறுகையில்,

“கவிக் குலத்து அரசும்”(60)

என்னும் சொல்லும் இடம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது. இங்கு கவி என்பது குரங்கு என்ற சொல்லாட்சியால் வழங்கப்படுகிறது. கன்னிமாடத்தில் நின்ற சீதையின் பேரெழில் தோற்றத்தை வருணிக்கும் போது தேன் போன்ற இனிய சொல், கவியைப் போல இன்பம் தரக் கூடியது. இனிமை என்றால் அது கவிதை இன்பம் தான் என்பது பெறப்படும்.

“தென்உண் தேனின் தீங்சுவை செஞ்சொல் கவியின்பம்”(61)

கும்பகர்ணன் வீடனனை அழைக்கையில்.

“கவிஞரின் அறிவு மிக்காய்”(62)

எனும் போது கவிஞன் அனைத்தும் தெரிந்தவன். அவனை விட அறிவினை உடையவனே! என்று விடணனுக்கு அடைமொழி கொடுத்து சிறப்புச் செய்கிறார். கம்பர், கவிதையைப் பற்றிக் கூறும் போது,

“கவியெனக் கிடந்த கோதா வரியினை”(63)

கவிதை என்பது என்றுமே மறையாது அழிக்க முடியாது, தடுக்க முடியாது அது நிலைத்து நிற்கும் தன்மை கொண்டது. நீர் மக்களின் பயன்பாட்டிற்காக அவர்களைச் சென்றடைவது போல கவிதையும் அதன் கருத்துக்களும் மக்களைச் சென்றடைய வேண்டுமென கவிதையை வற்றாத ஜீவநதியோடு உவமிக்கிறார்.

**இஸ்லாமியக் காப்பியங்கள்**

கி.பி. 7ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே தமிழகத்தில் இஸ்லாம் சமயத்தாரின் வாழ்வு தொடங்கப்பட்டுவிட்டது என்பதை களவிற்யகாரிகையின் அகப்பொருள் இலக்கண நூலால் அறியலாம்.

“அல்லா எனவந்து சத்திய

நந்தா வகை தொழும் சீல் நல்லால்”(64)

என 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இலக்கண நூலால் அறியலாம். ஆனால் இஸ்லாமிய இலக்கியங்கள் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் தோன்றியுள்ளதாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர். இஸ்லாமியக்

காப்பியங்கள் இஸ்லாம் மதத்தின் மூலக்கடவுளான நபி அவர்களின் வாழ்க்கை வரலாற்றை மையமாகக் கொண்டு எழுதப்பட்டவை. முதல் காப்பியமாகக் கருதப்படும் கனகாபிசேக மாலை கனகவிராயர் என்பவர் இயற்றியது. இது நபிப்பெருமானின் பேரனைப் பற்றிக்கூறும் காப்பியமாகும். இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்கள் 16 எனக் கருதப்படும். இதில் ‘கவி’ கவிதை என்னும் சொல் கையாளப்பட்டுள்ள விதம் பற்றி இவ்வியல் விளக்குகிறது. உமறுப்புலவர் இயற்றிய சீறாப்புராணம் நபிப்பெருமானின் வாழ்வை முழுமையாகக் கூறும் காப்பியமாகும் இந்நூல் முற்றுபெறாத நிலையில் அதைத் தொடர்ந்து எழுந்தது சின்னச்சீறா என்னும் நூலாகும்.

இஸ்லாமியப் புலவர்கள் தம் சமயக் கருத்துகளை கற்பனை வளத்துடன், கருத்துப்பாங்குடனும் படைத்து உலகம் போற்றும் காப்பியமாக உலவ விட்டுள்ளனர். முகமது நபியின் திருப்பெயரை தன் நாவில் உச்சரிப்பார்கள் அழியாத புகழைப் பெறுவார்கள். நபியின் திருப்பெயரைக் காதில் கேட்டாலே அவர்களின் மனம் தூய்மை அடைகிறது, என இறைநாமத்தின் மகிமையை கவிக்கு ஒப்பிடுகிறார்.

“கவியா லுரைத்த புகழ் பெறுவார் மிகுந்த கவி
யடைவார் கலக்க மறவே
செவியர மெய்ப்பொருளை யறிவார் மனத்தினுறு
செயல்கே டகற்றி விடுவார்”(65)

என இக்காப்பியத்தில் ‘கவி’ என்னும் சொல் இடம் பெற்றுள்ளதைஇவ்வியலால் அறியமுடியும்.

**கிறித்தவக் காப்பியம்**

வேற்று நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்குக் கிறித்தவத் தொண்டு ஆற்ற வந்த 'பெஸ்கி' என்பவர் தம் பெயரை வீரமாமுனிவர் என மாற்றிக் கொண்டார். ஏசுநாதரின் வளர்ப்புத் தந்தையாகிய வளன் வரலாற்றை தேம்பாவணி என்னும் காப்பியமாக்கியவர். இயற்கை எழில் பொங்கும் நகரம், பிறப்பு, சிறப்பு பற்றி மிகவும் அழகான கற்பனை கலந்த கவிதை நடையில் கூறிச் செல்கிறார்.

"குவிமதத்து அயிர்ப்பிற் கற்றோர்

குழாங் குழாம் நகரத்து எங்கும்

கவிமதத்து எழுந்த அந்நூல்

கடக்கிலாது அலைய ஓர் நாள்"(66)

கவிஞனின் கருத்து வளத்தை எல்லாம் கடந்து நிற்கும் அவ்வேத நூலை அளந்தறிய முடியாமல் மக்கள் தவித்தனர் என இயேசு பெருமானின் பெருமையைக் கூறியுள்ளார்.

"கற்பனைக் கவிமழை பொழிகின்ற மேகக் கூட்டங்கள்

மொண்டு கற்பனைக் கவிபொழி முகிற்குலஞ் சிதறி"(67)

மேகக் கூட்டங்கள் கருக்கொண்டு மழையைப் பொழிவதைப் போல கற்பனைகள் பலசேர்ந்து கவிதைகளை உருவாக்குகின்றன என இரட்சணிய யாத்திரிகம் தரும் கவிதைக் குறிப்பால் அறியப்படும்.

**சிற்றிலக்கியத்தில் கவிதை**

இலக்கிய வரிசையில் சிற்றிலக்கியங்கள் இன்று புற்றீசல் போல் பல்கிப் பெருகிற வண்ணம் இருக்கின்றன. பரணி, கோவை, தூது,

உலா, அந்தாதி, பிள்ளைத்தமிழ், வண்ணம் அம்மானை, சிந்து, கும்மி, மாலை, வழக்கியல், பதிகம், சதகம், ஆற்றுப்படை போன்ற இன்னும் பல இலக்கிய வரிசையில் அடங்கும். இவை மதவேறுபாடு இல்லாமல் எல்லா மதத்திலும் தோன்றியுள்ளன. அனைத்துப் பரம்பொருள் மீதும் சிற்றிலக்கியங்கள் பாடப்பட்டன. சிற்றிலக்கியத்தால் அந்தந்த மதத்தைச் சார்ந்த இறைவனும், மதப் பெரியோர்களும் சிறப்பிக்கப்பட்டனர்.

"இசையான
பாட்டுக் கிரங்கியொரு பாணனுக்குச் சேரலன்மேற்
சீட்டுக் கவி விடுத்த சீராட்டும்"[68]

எனத் தமிழ்விடு தூது விளங்கி நிற்கிறது.

"கள்ளருஞ் செஞ்சொற் கலம்பகமே கொண்டு காயம்விட்ட
தெள்ளாறை நந்தியெனும் தொண்டைமான் கவிதீர்ப்பதற்கு
வள்ளலார் முரச மதிர்த்தாண்ட துந்தொண்டை மண்டலமே"[69]

கவிதைக்காக பொன்னும் பொருளும் கொடுத்தனர். ஆனால் கவிதைக்காக தன் உயிரையே கொடுத்தான் நந்திவர்மன் என்று தொண்டை மண்டலச் செய்யுள் கூறுகிறது. நஞ்சுச் சொற்கள் கலந்து பாடப்பட்ட கவியாயினும், அவற்றால் தன் உயிர் பிரியும் என அறிந்தும். கவிதையைக் கேட்டுக் கொண்டே இறக்க வேண்டும் என்று கூறிய நந்திவர்மனின் கவிதை உணர்வை அறியமுடிகிறது.

"அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும் சொல்லாதோ கவி"[70]

என சரசுவதி அந்தாதி காப்புச் செய்யுள் விளக்குகிறது.

"கல்லில் சிலையோ? கவிதை வடிவோ?"[71]

என இயேசு பெருமானின் பிள்ளைத் தமிழ் கூறுகிறது. இறைவனை அல்லும் பகலும் துதித்தால் கரையாத கல் கூட கரைந்து விடும் என்று எடுத்துரைக்கிறது.

"மும்மணிக் கோவையும் பன்மணி மாலையும்
மறமும் கலிவெண் பாட்டும் மடலூர்ச்சியும்
கிரீடையும் கூத்தும் பாசாண்டத் துறையும்
விருத்த கவிதையும் இயலிசை நாடகத்தொடு
விரித்துப் பாடுவது வித்தார கவியே"[72]

என்னும் பாடலால் வித்தார கவியின் தன்மையை அறியமுடிகிறது.

"கவித் தானை மன்னற்கு நட்புஆய் முடி
கவித்தானை, அன்று"[73]

என அழகர் அந்தாதி விளக்குகிறது.

"களவழிக் கவிதை பொய்கை உரைசெய்ய உதியன்
கால்வழித் தளையை வெட்டி அரசிட்ட அவனும்"[74]

எனக் களவழி நாற்பதின் கவிதைத் தன்மையை பரணி இலக்கிய ஆசிரியரின் கூற்றால் அறியமுடிகிறது. களவழி நாற்பது, பரணி இரண்டும் போர்க்களம் பற்றிப் பாடும் கவிதை.

"கறங்கூர் கொண்ட புரட்டும் எனக்
கலியா ணத்தில் கவிகேட்டுப்"[75]

திருமண விழாவில் கவிதை பாடும் இயல்பு இருந்தமையை சோழ மண்டல சதகம் விளக்குகிறது.

"சீட்டுக் கவிதை அந்தாரி

செம்பும் தமிழின் திறன் அறிந்தோன்"(76)

எனும் கவிதை வரிகள் சீட்டுக் கவியால் பெருமை பெற்றவர் அந்தாரிப் புலவர் என்பதை விளக்குகிறது.

"கனமான திரவியம் செல்வர்க்குப் பெலனாம்

கவிஞர்க்குக் கல்வி பெலனாம்"(77)

"பண்ணுவ தெல்லாந்தீமை பேசுவ தெலாம் வம்பு

பாடுவ தெலாம் புன்கவி"(78)

என 19ஆம் நூற்றாண்டில் தோன்றிய சதக நூல் எடுத்துக்காட்டுகிறது.

"புவிவாழி யுந்தன் புகழ்வாழி வாணர்

கவிவாழி யென்றும் களித்து"(79)

எனக் கிறித்தவ உலாமாலை பகர்கிறது.

"பாடறிய கவியாக கிசுறத் தானே"(80)

என்பது குலாம் காதிறு நாவலர் இயற்றிய மாலை நூல் பகரும் செய்தியாகும்.

"தொடுக்கும் கடவுட் பழம் பாடற்

றொடையின் பயனே! நறை பழுத்த

துறைத் தீந்தமிளொழுகு நறுஞ்

சுவையே! யகந்தைக் கிழங்கை யகழ்ந்......"(81)

அன்று முதல் இன்று வரை கவிஞர்கள் இறைவனுக்குப் பூமாலை சூட்டாமல், சந்தத்தோடு கூடிய இசைப்பாக்களால் இறைவனுக்குப் பாமாலை சூட்டிய பாங்கினைப் பகர்கிறது.

**தனிப்பாடல் திரட்டில் கவிதை**

வேறுபட்ட காலத்தில் வாழ்ந்த வெவ்வேறு புலவர்களால், பல சூழல்களில் பாடப்பட்டு பலதரப்பட்ட சமயப் புலவர்களால் தொகுக்கப்பட்டதே தனிப்பாடல் திரட்டு ஆகும். ஒவ்வொரு புலவனும் தான் சொல்லக் கருதிய செய்திகளை உவமையுடனும் கற்பனையுடனும் சொல்லும் முறை கவிதைக்கு அழகு சேர்க்கிறது. இதில் அப்புலவர்கள் கையாண்ட 'கவிதை' எனும் சொல் பற்றி இவ்வியல் ஆய்கிறது.

"இலக்கண கவிஞர்சொ லின்பந் தேடுவர்
மலக்குச் சொல் தேடுவர் வன் கணார்களே"(82)

இலக்கணக் கவிஞர்கள் இன்பம் தரும் சொற்களையே பயன்படுத்துவர். பிறரை மயக்கும் தகாத சொற்களைத் தேர்ந்தெடுத்து கவிதை புனையமாட்டார்கள் என்று கவிஞனின் இலக்கணம் கூறுகிறது.

"ஞானிகவி விரகமறுங் காமிகவி யதுவா
நடுவர்கவி யிரண்டுமுறும் படியாதான் கவியே
யூனமுறுங் குலனலனி லிருதாதைக் கவிகட்
கோங்கிடும் வாழ் வெழுபான்மே லுறுமாண்டார் கவிக்கு
மேயுறு சிரத்தையறும் தெரிந்தவிரு தாதை
மிகைவரல்க விக்காபு மிடலுமுண்டா மன்றோ
கூனன்முதற் குறைக் கவத்தை நோய்க்கு நோய் நண்டு
குலந்தவறுங் கவிக்குமாறு மனையிச்சை பிறவே"(83)

கவிஞர்களில் பல வகைகள் உண்டு. அவர்கள் பாடும் கவிகளும் பாடுவோரின் இயற்பிற்கேற்ப மாறுபடும்.

“இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும்

அம்மென்றால் ஆயிரம் பாட்டு ஆகாதோ”(84)

‘இம்’ என்னும் ஒலிக்குறிப்புச் சொல், சொல்லி முடிவதற்குள்ளே எண்ணூறு பாடலும், வாய்திறந்து மூடுவதற்குள் ஆயிரம் பாட்டுப் பாடும் காளமேகப் புலவரின் கவிவல்லமையை உணரலாம். மழை பொழிவதைப் போல் கவிபாடும் திறம் பெற்றவர் என்பதை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

“விரகர் இருவர் புகழ்ந்திடவே வேண்டும்

விரல் நிறைய மோதிரங்கள் வேண்டும்-அரைதனில்

பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் அவர் கவிதை

நஞ்சேனும் வேம்பேனும் நன்று”(85)

இப்பாடலால் பொன்னும் பொருளும் உயர்வாக மதிக்கப்பட்டதை அறிய முடிகிறது.

“நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினும் நூற்சிலை

நாற்றிங்க ணாளுக்கு ணைந்துவிடும் - மாற்றலர்கள்

பொன்றப் பொருதடக்கைப் போர்வே லகளங்கா

என்றுங் கிழியாதென் பாட்டு”(86)

எவ்வளவு விலை உயர்ந்த நூல்சேலையாக இருந்தாலும் சில நாட்களிலேயே நைந்து கிழிந்துவிடும். ஆனால் என் பாடலோ எந்நாளும் அழியாது எனக் கல்விச் செல்வத்தின் சிறப்பைக் காண்கிறோம்.

"சிந்து படிக்கக்கவி படிக்கத் தெரியா மடவாயுன் றனக்குக்"[87]

எனக் காளமேகப் புலவர், தன்னை ஏளனம் செய்த ஒரு கிழட்டுப் பெண் தாசியை நிந்திக்கிறார். ஆற்றல் உடையோர் அடித்தாலும் பொறுத்துக் கொள்வேன் என்பது இவர் கல்விக்கும், கவிதைக்கும் தரும் முக்கியத்துவத்தை விளக்கி நிற்கிறது.

**இக்காலத்தில் கவிதை எண்ணம்**

இருபதாம் நூற்றாண்டில் தமிழ் கவிதை உலகில் மாபெரும் புரட்சியைச் செய்தவர் பாரதியார். அவரின் வசனகவிதை மக்களை வெகுவாகக் கவர்ந்தது. சமுதாயத்தில் நிகழும் பல்வேறு நிகழ்வுகளைத் தம் மனக்கண் முன் பதிவு செய்து, அவை மக்களைச் சென்றடையச் செய்யும் ஒரு அற்புத உணர்வாகவே பாரதி கவிதைக்கு வடிவம் கொடுத்தார். அக்கவிதைதான், பூட்டியிருந்த மக்கள் மனதிற்குத் திறவுகோலாகப் பயன்பட்டது. சுதந்திர வேட்கையை மக்கள் மனதில் தூண்டில் போல் சுண்டி இழுக்க பாரதி, பாரதிதாசன் கவிகள் உதவின. இவர்களை குருவாக ஏற்றுக்கொண்டு கவிஞர்கள் கவிதைகளை எழுதத் தலைப்பட்டனர். கவிஞன் சமூகத்திற்கு அப்பாற்பட்டவனாக இருக்க முடியாது. சமூகம் - கவிஞன் - கவிதை மூன்றும் ஒன்றையொன்று தொடர்புடையது. "கவிஞன் வேறு கவிதை வேறாக இருக்க முடியாது. கவிதை எழுதுவது வேசம் போடுவது அல்ல. வெல்ல உருண்டையைப் போல வெளியேயும் உள்ளேயும் ஒன்றாக இருப்பது. போர்வாள் போல அதற்காக வடிவமைக்கப்பட்டதாக இருப்பது"[88] என்று பழமலய் குறிப்பிடுகிறார்.

கவிதை எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றி ஒவ்வொரு கவிஞர்களும் பல்வேறு விதமான வரையறைகளைக் கொண்டுள்ளனர். அதில் கவிதைக்கு சொற்களே முக்கியம் என்று கூறுகிறார் சுரதா. "சிறிய கவிதைகள் எழுதி வெற்றி பெற பெரிய ஆற்றல் வேண்டும். சொற்சுருக்கம் எனக்குப் பிடிக்கும். தாழம்பூவை மடித்து தலையில் சொருக வேண்டும். அதுபோல் சொற்களை மடித்து கவிதையில் சொருக வேண்டும். சங்க இலக்கியத்தின் வெற்றியே சொற்சுருக்கத்தில் தான்"(89) எனக் கவிதைப் படிப்போருக்கு ஒரு அற்புதமான உலகைப் படைத்துக் காட்ட வேண்டும்.

"கவிதை என்பது மென்மையானது
கவிதை உலகில் மேன்மையானது
கவிதை காலத்தால் தொன்மையானது
கவிதை சுகம் தரும் தன்மையானது
கவிதை ஊருக்கு நன்மையானது
கவிதை பொய்யன்று; உண்மையானது"(90)

என்று உரைக்கிறார் இராதாகிருஷ்ணன்.

**நமக்குத் தொழில் கவிதை**

ஒவ்வொருவருக்கும் தான் பிறந்த குலம் முக்கியமான ஒன்றாகும். ஆகவே அக்குலப் பெயரைக் கொண்டு தன்னைப் பிறர் அழைப்பதையும் பெருமையாக நினைப்பர். தாம் செய்யும் தொழிலைக் கொண்டும் பெயர் சூட்டி அழைக்கப் பெறுவர். இவ்வழக்கம் அன்று முதல் இன்று வரை யாவரும் அறிந்த பழம்

மரபாகவே கொள்ளப்படுகிறது. அதுபோல பாரதியார் பிறந்த குலம் 'கவிக்குலம்' என்றும் அவரின் தொழில் கவிதை என்றும் குறிப்பிடமுடியும். கவிதை எழுதுவதையே தன் உயிர் மூச்சாகக் கொண்டவர். ஆதலால்தான்,

"நமக்குத் தொழில் கவிதை நாட்டிற் குழைத்தல்
இமைப் பொழுதும் சோராதிருத்தல்"[91]

என்று உறக்கம் வராது. தாம் வறுமையுற்ற நிலையிலும் நாட்டுக்காக உழைக்க வேண்டும் என்று அவரின் தொண்டுள்ளம் விளக்கிக் காட்டுகிறது.

"அணிசெய் காவிய மாயிரங் கற்கினும்
ஆழ்ந்தி ருக்குங் கவியுளம் காண்கிலார்"[92]

பாரதியின் கவிதைகள் நாட்டு விடுதலைக்கு மட்டுமல்லாது பெண் விடுதலைக்கும் ஊக்கமளித்தது. வீட்டின் மூலையே சுகம் என முடங்கிக் கிடந்த பெண்ணினம் விழிப்படையச் செய்யவும், அக்கால தீண்டாமை நோய் போக்கவும். கடுகளவு இருந்த மக்கள் மனம் கடலளவு விரியவும் பாரதியாரின் சக்தி வாய்ந்த பாடல்கள் ஊன்றுகோலாயின. கவிதையால் புதுமையான உலகைப் படைத்துக் காட்டியவர் பாரதியார்.

பாரதியாரைப் போன்றே பாரதிதாசனும் கவிதை எழுதுவதைத் தொழிலாகக் கொண்டுள்ளார்.

"கலையே வளர்! தொழில் மேவிடு!
கவிதைபுனை தமிழா!"[93]

தமிழர்கள் எல்லோரையும் கவிதை எழுத வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறார். இதனால் இருபெருங்கவிஞர்களுக்கும் கவிதையின் மேலிருந்த ஈடுபாட்டை அறியலாம். இருவரும் கண்ணில் கண்ட பொருளை எல்லாம் கவிதையாக்கும் சக்தி படைத்தவர்கள் ஆவர்.

கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை கவிதையைப் பற்றி,

"உள்ளத் துள்ளது கவிதை - இன்பம்

உருவெ டுப்பது கவிதை

தெள்ளத் தெளிந்த தமிழில் - உண்மை

தெரிந்துரைப்பது கவிதை"[94]

என்கிறார். மனதில் புதையுண்டு கிடக்கும் எண்ணங்களுள் எவை கவிதைப் பொருளாக உருவெடுக்கும் என்பது எவரும் அறிய முடியாத ஒன்றாகும்.

'கற்பனை என்ற சாட்டையால் தான் கவிதையெனும் பம்பரத்தை சுழற்ற முடியும்' என்கிறார் வ.வே.சு.

"கற்பனைகள் என்னுமொரு சாட்டையடி இல்லை யெனில்

கவிதைகள் சுழன்றிடாதா - நெஞ்சில்"[95]

கற்பனைகள் நெஞ்சில் சுற்றினால் கவிதைகள் கையில் பிறக்கும்.

"நவ நவ நாக ரீக

நடையுடை இருபதாண்டு

யுவதியாய் உலகில் நல்ல

கவிதை போல் உயர்ந்து நின்றாள்"[96]

நாகரிக உலகத்திற்கேற்ப பெண் தன்னை மாற்றிக் கொள்வதைப் போல கவிதையிலும் அன்றைய சமுதாயச் சூழல் பிரதிபலித்து நிற்பதை விளக்குகிறார்.

கவிதையையும் வாழ்க்கையையும். வேறு வேறாகப் பிரிக்க முடியாது என்பதனை வைரமுத்து,

"கவிதையும் வாழ்க்கையின் பகுதி என்பது
உங்களுக்குப் புரியவில்லை"(97)

என வாழ்க்கைதான் கவிதைக்கு உருக்கொடுக்கிறது என்கிறார். புதுக்கவிதைக்கு மு.மேத்தா இலக்கணம் கூறுகையில்,

"இலக்கணச் செங்கோல்
யாப்பு சிம்மாசனம்
எதுகைப் பல்லக்கு
மோனைத் தேர்கள்
தனிமொழிச் சேனை
பண்டித பவனி
இவை எதுவும் இல்லாத...
கருத்துக்கள் தம்மைத்தாமே ஆளக்
கற்றுக்கொண்ட புதிய மக்களாட்சி முறையே
புதுக்கவிதை"(98)

என்கிறார். புதுக்கவிதை எந்தவிதமான கட்டுப்பாடுகளும் இல்லாமல் இருக்க வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

கவிதை மக்கள் மனதில் நீங்கா இடம் பிடிப்பதில் தான் இருக்கிறது. ஆயிரக்கணக்கான கவிதைகளில் எல்லாக் கவிதையும் நினைவில் இருப்பதில்லை. சில மட்டுமே எக்காலமும் மனத்தை விட்டகலாதத் தன்மையைப் பெற்றுள்ளன.

“எழுதப் பட்டுவிட்ட

எமது கவிதை

நீ பறித்துக் கிழிக்கும்

தாள்களில் இல்லை.

பேனா முனையில் இல்லை

நீ அறைந்து மூடும்

உதடுகளில் இல்லை

இலையைத் தென்றல்

அசைப்பது போல

மலரைச் சூரியன்

மலர்விப்பது போல

அது

மக்கள் இதயங்களை

வருடிக் கொண்டிருக்கிறது”(99)

என கவிதை என்பது இதயத்தில் இடம்பிடிப்பது என இன்குலாப் கூறுகிறார்.

“ஓலைக் கவிதைகளாம் - தமிழ்

ஓசை வளர்த்திடும் ஆசைக் கவிதைகள்

சோலைக் கவிதைகளாம் - சிறு

சோற்றுக்கும் கூழுக்கும் பாடும் கவிதைகள்

வேலிக் கவிதைகளாம் - பணம்

விட்டெறிடந் தாற்சிலர் கட்டும் கவிதைகள்

கூலிக் கவிதைகளாம் - பிழை

கொண்ட கவிதைகள் நொண்டிக் கவிதைகள்"(100)

ஒவ்வொரு பொருளுக்காகவும் கவிதைகள் புனையப்படுகின்றன. அவை ஒவ்வொரு தன்மையைப் பெற்றுள்ளன. மனம், பொருள், ஆசை இல்லாமல் தமக்காகப் புனையும் கவிதைகள் சிறப்பு வாய்ந்தவை. பிறர் வற்புறுத்த தாம் புனையும் கவிதைகள் கூனல் விழுந்த கவிதைகள் என்கிறார் கவிஞர் சுரதா.

"மனித மனம் காய்கிறதே

என்று

கவிஞன் அழுதான்

அது

கவிதை ஆயிற்று"(101)

கவிஞனுக்கு எல்லாப் பொருளுமே கவிதைக்குரிய பொருளாகும் என மொழிகிறார் சக்திகனல்.

"எறும்புதனை ஈர்த்துவரும் இனிப்பைப் போலே

அருங்கவிதை அனைவரையும் ஈர்த்தல் வேண்டும்"(102)

நல்ல கவிதைகள் அனைவரையும் தன்வயப்படுத்தும் என்கிறார் பிரதாப்.

"எச்சியிலைத் தொட்டிலில்

ஏறிவரும் தெருநாயின்

லாவகம் எனக்கொரு

கவிதை தரப் பார்க்கிறது"(103)

என்று கலாப்பிரியா எந்நிகழ்விலும் கவிதைக்குக் கரு உள்ளது என்கிறார்.

“கவிஞனைக் காலம் கொன்று விடும் - அவன்

கவிதைகள் காலத்தை கொன்று விடும்”(104)

கவிஞனுக்குச் சிறப்பு உண்டு. ஆனால் அவன் படைக்கும் கவிதைகள் இறவா தன்மையுடன் வாழும் என்கிறார் தமிழ்ஒளி.

சங்கப் பாடல்கள் கிடத்தற்கரிய சீதனமாக விளங்குகின்றன. எந்தன் பாடல் பிறரை சீராட்ட வேண்டும் எனப் பாடியுள்ளார்.

“சாதத்தில் நெய்போலக் கவிதை கொட்டும்

சங்கத்துக் கவித்தலைவர்! உன்றன் பாட்டைச்

சீதனமாய்க் கொள்கின்றார்; என்றன் பாட்டைச்

சீராட்டாய்க் கொள்கவெனக் கேட்கின்றேனே”(105)

பார்க்கும் இடமெங்கும் கவிதையின் வடிவமாக இருப்பதாகப் பாடியுள்ளார்.

“எங்கெங் கெல்லாம் அழகு உளதோ!

அங்கங் கெல்லாம் கவிதை உள்ளது!

ஆன்மா னுபவமே அழகிய கவிதையாம்!

ஐம்பொறி யுணர்வே கவிதை அனுபவம்!

ஆசறு மனத்தைக் கவிவது கவிதை!

தேசுறு ஞானத் தெளிவது கவிதை

அறத்தினும் அன்பினும் இயல்வது கவிதை!

பிறப்பினும் இறப்பினும் பிறப்பது கவிதை!

அமிழ்தாம் தமிழில் உளதே கவிதை!

தமிழே கவிதை என இசைத் ததுவே”(106)

கவிதையால் அறியாமையில் சிக்கிக் கிடக்கும் மக்களை மேல்நிலை அடையச் செய்ய முடியும் எனப் பாடியுள்ளார்.

"ஊற்றுப்போல் கவிகள் பாடி உள்ளத்தை வெள்ளையாக்கி

சோற்றில் வாழ் மாந்தர்கூட மேட்டினில் ஏறச் செய்வேன்

ஊரெல்லாம் கவிதை கேட்க உளம்மாறி வந்து நிற்பார்

பாரெல்லாம் தமிழ் சிறக்கும்; தத்துவக்கவி மிளிரும்"(107)

கவிதைக்கு சாதி மதமும் சொத்து சுகமும் தேவையில்லை. அதனால் தான் நான் கவிதையை நேசிக்கிறேன் எனப் பாடியுள்ளார்.

"பூக்களை நேசிக்கிற உலகில்

நான் கவிதையை நேசிப்பதுகூட ஏன் தெரியுமா?

அது சாதியையும் பணத்தையும் நேசிக்காததால்"(108)

"மேகலையும் பொன் சிலம்பும்

பூட்டி மகிழ்ந்த தமிழ்ப்

புலவர் பரம்பரையின்

பாட்டின் திறம் வியந்து

பரவசத்தில் ஆழ்பவன் நான்

தவமிருந்தும் காண்பதில்லை

தமிழ்க்கவிதை பெற்ற நிலை"(109)

பலவிதமான இலக்கியங்கள் தோன்றிய நிலையில், இன்று தமிழ்க் கவிதை மிக உன்னதமான உயர்ந்த இடத்துக்குச் சென்று விட்ட நிலையை உணரமுடிகிறது.

**தொகுப்புரை**

♦ கவிதை என்பது மிகப் பழங்காலத்தில் தோன்றியது என இவ்வாய்வில் விளக்கி நிற்கிறது.

♦யாப்பு, பாட்டு, தூக்கு, தொடர்பு, செய்யுள் என்பவை கவிதை என்னும் ஒரே பொருளைக் குறிக்கின்றன.

♦பழமையன இலக்கண நூலான தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படும் பாட்டு, செய்யுள் என்பன கவிதை என்பதைக் குறிக்கும் என ஆய்வில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

♦சங்கப் புலவர்கள் தாம் பாடிய கவிதைகளால் பேரும் புகழும் பெற்றனர். இவர்களின் கவிகள் அள்ளக் குறையாத அமுத கவிகளாக விளங்குவதை உணரமுடிகிறது.

♦சங்க இலக்கிய எட்டுத்தொகையில் இடம்பெறும் குறுந்தொகை, பரிபாடலில் கவிதை என்னும் சொல் கையாளப்படுவதை அறியமுடிகிறது.

♦பத்துப்பாட்டில் வரும் பாட்டு என்னும் சொல் ‘கவிதை’ என்னும் பொருளைக் குறிக்கிறது.

♦பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் பாட்டு, கவி என்னும் சொல்லே காணப்படுகிறது. கவி என்னும் சொல் ‘கவிதை’என்னும் பொருளில் மூன்று இடங்களில் காணப்படுகிறது.

♦ சீவகசிந்தாமணியில் கவிஞனைக் குறிக்கும் கவி என்ற சொல்லும், கவிதையைக் குறிக்கும் ‘கவி’ என்ற சொல்லும் கையாளப்பட்டுள்ளது.

♦ காப்பியம் பாடிய கவிஞர்கள் தம் கவிதை வரிகளால் சிறப்புப் பெற்றனர். சிலப்பதிகாரக் குன்றக் குரவையில் வரும் உரைப்பாட்டு மடை எனபது ‘கவிதை ’ என்பதைக் குறிக்கிறது.

♦ கம்பராமாயணத்தில் கவிஞனுக்குரிய இலக்கணம் கூறப்பட்டுள்ளது. கவிஞன் என்பவன் இன்பம் தரக்கூடியவன் என்பதைக் கம்பர் சுட்டுகிறார்.

♦ இசுலாமியப் புராணத்தில் இறைநாமத்தின் மகிமை கவிதைக்கு இணையாக ஒப்பிடப்பட்டுள்ளது.

♦ கிறித்துவக் காப்பியத்தில் கவிஞனின் கவிதை வளம் வேத நூல்களோடு ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

♦ எல்லா காலகட்டங்களிலும் கவிதைகள் தோன்றியுள்ளன. தன் மதக் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துக்கூற அக்காலத்தில் கவிதைகள் பயன்பட்டன என்பதை அறியலாம். எல்லா மதத்தைச் சார்ந்த புலவர்களும் தகுந்த கருத்துக்களை தக்க சமயத்தில் எடுத்துக் கூறக் கவிதைகளைப் பயன்படுத்தினர் என்பது புலனாகிறது.

♦ ஆழ்வார்களும் நாயன்மார்களும் தம் கவிப்பாக்களால் இறைவனுக்குப் பாமாலை சூட்டியதை அறியமுடிகிறது.

♦ இலக்கண நூலான பாட்டியலில் கவிதையை நான்கு நான்கு பகுப்பாக பாகுபாடு செய்துள்ளதைக் காணலாம்.

♦ ‘ஐந்திறம்’ என்னும் நூலில் ‘கவி’ என்னும் சொல் இடம் பெற்றுள்ளதை இவ்வாய்வில் உணரலாம்.

♦ பல்வேறு புலவர்களால் பாடப்பட்ட தொகுப்பான தனிப்பாடல் திரட்டில் புலவர்களின் கவிநயமும், அக்கவியைச் சுவைத்த அரசர்களின் கொடை நயமும் அறியப் பெறுகிறது.

♦ சிற்றிலக்கியங்களில் கவிதை பற்றிய குறிப்பும், கவிஞன் பற்றிய குறிப்பும் பரவிக்கிடப்பதை இவ்வாய்வு விளக்குகிறது.

♦ இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களுள் புதுக்கவிதைக்கு வடிவம் கொடுத்தவர் பாரதியார். இவர் ‘எமக்குத் தொழில் கவிதை’ என உரைத்தார். இவரைத் தொடர்ந்து பாரதிதாசன் போன்ற பல கவிஞர்கள் கவிதைத் துறையில் தம் முத்திரையைப் பதித்து வருகின்றனர்.

♦ சங்க காலம் தொடங்கி இன்று வரை கவிதை என்பது மக்கள் மனத்தில் விதையாய் பரவி, இன்று எங்கும் கவிதை விருட்சமாக நிலை கொண்டுள்ளதை இவ்வியல் புலப்படுத்துகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.151.
2. புறப்பொருள் வெண்பாமாலை, ப.35.
3. ந.மு.வேங்கடசாமி நாட்டார், யாப்பருங்கலக்காரிகை, ப.3.
4. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம், ப.70.
5. மேலது, ப.450.
6. மேலது, ப.488.
7. மேலது, ப.485.
8. மேலது, ப.425.
9. மேலது, ப.407.
10. ஆறுமுகநாவலர், நன்னூல், ப.179.
11. கு. முத்துராசன், தண்டியலங்காரம், ப.54.
12. ஆறுமுகநாவலர், நன்னூல், ப.8.
13. இரா.கண்ணன் (ப.ஆ), நவநீதப் பாட்டியல், ப.176.
14. மயன், ஐந்திறம், ப.202.
15. மேலது, ப.165.
16. மேலது, ப.74.
17. ச.கு.கணபதி, வியாசரும் வில்லியும் ஒரு திறனாய்வு, ப.133.
18. மேலது, ப.133.
19. ஸ்ரீசந்திரன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.21.
20. உ.வே.சாமிநாதையர், பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், ப.143.
21. மேலது, ப.151.

22. மேலது, ப.226.

23. மேலது, ப.213.

24. மேலது, ப.244.

25. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ), தொல்காப்பியம், ப.34.

26. பதிற்றுப்பத்து, பக்.25-26.

27. இரா.மோகன், சிற்பி பாலசுப்பிரமணியன் (ப.ஆ), தமிழ் உலா தொகுதி II ப.264.

28. கா.மாணிக்கவாசகன் (உ.ஆ), புறநானூறு, ப.118.

29. மேலது, ப.5.

30. தமிழோவியன், கவிதையில் காட்சியும் கற்பனையும், ப.41.

31. பதினெண்கீழ்க்கணக்கு (பதிப்பாசிரியர் குழு), ப.300.

32. சி.பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.177.

33. ந.கடிகாசலம், ச.சிவகாமி (ப.ஆ), சங்க இலக்கியத்தில் கவிதையியல் நோக்கு சிந்தனை பின்புல மதிப்பீடு, ப.427.

34. மேலது, ப.4.

35. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, ப.31.

36. பெ.சுப்பிரமணியன் மற்றும் பலர் (ப.ஆ), பரிபாடல், ப.124.

37. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை, ப.54.

38. ப. அரங்கசாமி, பத்துப்பாட்டில் பைந்தமிழ் வளம், ப.116.

39. பதினெண்கீழ்க்கணக்கு, ப.260.

40. மேலது, ப.304.

41. மேலது, ப.307.

42. வெ.இரத்தினமூர்த்தி, தொல்காப்பிய நோக்கில் புதுக்கவிதை, ப.118.

43. கே.ரவி, ஷோபனாரவி, நமக்குத் தொழில் கவிதை, ப.22.

44. ரா.ஸ்ரீதேசிகன், காலவெளியில் கவிதை நதிகள் (கவிதைக்கலை), ப.53.

45. மேலது, ப.29.

46. இரா.மோகன், சிற்பி பாலசுப்பிரமணியன் (ப.ஆ), தமிழ் உலா தொகுதி II ப.31.

47. ஆடுதுறை அம்பலவாணன், காளமேகம் ஔவையார் கவிதைத் திரட்டு, ப.184.

48. சூ.இன்னாசி, கிறித்தவத் தமிழ் கொடை தொகுதி -I ப.156.

49. துரை.மாலிறையன், இறைப்பேரொளி நபிகள் நாயகம் அருட்காவியம், ப.203.

50. வா.மு.சேதுராமன், தமிழ் நூல்களில் கவிதை பற்றிய கருத்துகளும் கற்பனைகளும், ப.61.

51. ஜெ.ஸ்ரீசந்திரன், சீவகசிந்தாமணி, ப.738.

52. அ.ச.ஞானசம்பந்தன், கம்பன் - புதிய பார்வை, ப.28.

53. மேலது, ப.91.

54. பதிப்பாசிரியர் குழு, கம்பராமாயணம், ப.8.

55. ரா.ஸ்ரீதேசிகன், காலவெளியில் கவிதை நதிகள் (கவிதைக்கலை), ப.7.

56. மு. சாயபுமரைக்காயர், கம்பர் கருவூலம், ப.88.

57. உ.வே.சாமிநாதையர், சிலப்பதிகாரம், ப.62.

58. ஜெ.ஸ்ரீசந்திரன், சீவகசிந்தாமணி, ப.1072.

59. பதிப்பாசிரியர் குழு, கம்பராமாயணம், ப.989.

60. மேலது, ப.642.

61. மேலது, ப.83.

62. வா.மு.சேதுராமன், தமிழ் நூல்களில் கவிதை பற்றிய கருத்துக்களும் கற்பனைகளும், ப.74.

63. மு. விவேகானந்தன், பாட்டு இலக்கியம் ஒரு பார்வை, ப.18.

64. ஜெகதா, இதயம் தொட்ட இசுலாமிய இலக்கியம், ப.9.

65. எம்.முகம்மது யூசுப், சீறாப்புராணம், ப.6.

66. எம்.ஆர். அடைக்கலசாமி, தேம்பாவணி, ப.208.

67. தி.தயானந்தன் பிரான்சிஸ், மோசஸ் மைக்கேல் (ப.ஆ), இரட்சணிய யாத்திரிகம், ப.98.

68. சிற்பி மற்றும் பலர், தமிழ் உலா, ப.66.

69. சோ. அருணாசல தேசிகர், நந்திக்கலம்பகம், ப. 22.

70. வா.மு.சேதுராமன், தமிழ் நூல்களில் கவிதை பற்றிய கருத்துகளும் கற்பனைகளும், ப.71.

71. சூ. இன்னாசி, கிறித்தவத் தமிழ்கொடை தொகுதி -I ப.202.

72. ச.வே.சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவமும், ப.30.

73. பதிப்பாசிரியர் குழு, அஷ்டப்பிரபந்தம், ப.100.

74. பதினெண்கீழ்க்கணக்கு, ப.406.

75. செ.இராசு (ப.ஆ), சோழமண்டல சதகம், ப.51.

76. மேலது, ப.40.

77. சூ.இன்னாசி, கிறித்தவத் தமிழ் கொடை தொகுதி -I ப.163.

78. மேலது, ப.170.

79. மேலது, ப.193.

80. மு.முகம்மது உவைஸ், இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு - II ப.22.

81. ச.வே.சுப்பிரமணியன், ச.மெய்யப்பன் (ப.ஆ), தமிழ்ப் பெருங்கவிஞர்கள் ப.24.

82. இராமசாமி நாயுடு, தனிப்பாடல் திரட்டு, ப.111.

83. அன்னிதாமசு, பிரபந்தத் திரட்டு, ப.297.

84. இராமசாமி நாயுடு, தனிப்பாடல் திரட்டு, ப.10.

85. மேலது, ப.100.

86. மேலது, ப.112.

87. மேலது, ப. 97.

88. மு.வளர்மதி, நானும் என் கவிதையும், ப.119.

89. மேலது, ப.26.

90. எஸ். இராதாகிருஷ்ணன், கவிதை வானில், ப.129.

91. பாரதியார் கவிதைகள், ப.216.

92. மேலது, ப.217.

93. பாரதிதாசன் கவிதைகள், ப. 40

94. அசோக்குமார் (தொ.ஆ), கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் கவிதைகள், ப.57.

95. கே.ரவி, ஷோபனாரவி, நமக்குத் தொழில் கவிதை, ப.91.

96. சிவ.கன்னியப்பன் (தொ.ஆ),நாமக்கல் கவிஞர் பாடல்கள், ப.467.

97. வைரமுத்து, சிகரங்களை நோக்கி, ப.6.

98. கே.ரவி, ஷோபனாரவி, நமக்குத் தொழில் கவிதை, ப.77.

99. இன்குலாப், ஒவ்வொரு புல்லையும், ப.289.

100. சுரதா, துறைமுகம், ப.99.

101. சக்திகனல், கனகாம்பரமும் டிசம்பர் பூக்களும், ப.4.

102. பிரதாப், கவிதைச் சிறகுகள், ப.23.

103. சிவம் சிவராசன், கவிதைப் பொருள், ப.100.

104. சங்கை வேலவன், தமிழ் ஒளியின் கவிப்பயணம், ப.96.

105. அரு.சோமசுந்தரன், அருசோ கவிதைகள் தொகுதி II, ப. 269.

106. மா.அண்ணாதுரை (தொ.ஆ), பாரதிதாசனும் தமிழ்க் கவிஞர்களும் (தொகுதி 4) ப.93.

107. துருவன், வாழ்க்கை என்னும் ஓடம், ப.111.

108. நீலவன், (தொ.ஆ), கவிதை வனம், ப.68.

109. குலோத்துங்கன், குலோத்துங்கன் கவிதைகள் ஒரு பன்முகப் பார்வை, ப.276.

## இயல் - 2

## புதுக்கவிதையில் பாடுபொருள்

**1. பாடுபொருள் விளக்கம்**

**2. புதுக்கவிதையில் பாடுபொருள்**

**3. பாடுபொருள்**

**1. சமூகம்**

அ. மதக்கலவரம் ஆ. ஏழை பணக்காரன் பாகுபாடு

இ. வேலை ஈ. ஒடுக்கப்பட்டோர் நிலை

**2. அரசியல்**

அ. வாக்காளர் நிலை

**3. பொருளாதாரம்**

அ. வறுமை ஆ. குழந்தைத் தொழிலாளர்கள்

**4. கல்வி**

அ. மொழியுணர்வு ஆ. ஆசிரியர் இ. தேர்வுத்தாள்

ஈ. வேலை நிறுத்தம் உ. நூலகம்

**5. குடும்பம்**

அ. கணவன் மனைவி உறவு ஆ. தாய்மை சிறப்பு

இ. தந்தையின் சிறப்பு ஈ. உறவுமுறை

உ.சகோதரர்கள்

**6. பெண்**

அ. பெண்ணியம் விளக்கம் ஆ. ஆணாதிக்கம்

இ. வரதட்சிணை ஈ. விலை மகளிர்

உ. போகப்பொருள் ஊ. முதிர்கன்னி எ.விதவை

ஏ. பெண்ணுக்குப் பாதுகாப்பின்மை

ஐ. பெண்சிசுக்கொலை

**7. காதல்**

அ. புதுக்கவிதையில் காதல் ஆ. காதலுக்கு எதிர்ப்பு

இ. காதலின் சிறப்பு ஈ. காதல் சின்னம்

**8. இயற்கை**

அ. மின்னல் ஆ. மழை இ. வானவில் ஈ. மரம்

உ. அருவி ஊ. சூரியன்

**9. தத்துவம்**

அ. வாழ்க்கைத் தத்துவம்

**10. அறிவியல்**

**11. அகப்போராட்டம்**

**12. தகவல் ஊடகங்கள்**

அ. பத்திரிகை ஆ. திரைப்படங்கள் இ. கணிப்பொறி

**13. அனைத்துலகப் பார்வை**

அ. ஒற்றுமை ஆ. தேசம் இ. சுதந்திரம்

**தொர்ப்புஹுர**

**பாடுபொருள் விளக்கம்**

ஒன்றைப் பற்றி பாடுவது பாடுபொருளாகும். "பாடுபொருள் என்பது கதையின் கருவாக அமையும் பொருள்; **Subject Matter (of a poem etc)** எனக் க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி கூறுகிறது."[1]

கரு என்ற சொல் உட்பொருள் **(Substance Contents)** என்றும் அஸ்திவாரம் **(foundation, basement)** என்றும் பொருள் குறிப்பதாகத் தமிழ் லெக்ஸிகன் குறிப்பிடுகின்றது.[2]

கரு என்ற சொல்லுக்கு மூலக்கருத்து **(basic theme)** என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது.[3]

**புதுக்கவிதையின் பாடுபொருள்:**

அமெரிக்க இலக்கிய வரலாற்றில் புதுக்கவிதையின் பிதாமகன் எனப் போற்றப்படுபவர் வால்ட்விட்மன் ஆவார். இவர் இலக்கணத்திற்கு கட்டுப்படாமல், தாம் சொல்லவந்த கருத்திற்கு உயிரோட்டம் தந்த முதற்கவி. இவர் தம் கவிதைகளில் விபச்சாரம் செய்யும் சிறுமி, சிறார் தொழிலாளர், பெண்களின் நிலை போன்ற நகர்ப்புற அவலங்களை தம் கவிதையில் அதிகமாகக் காட்டியுள்ளார். இவரைத் தவிர டி.எஸ்.எலியட், எஸ்ரா பவுண்டு போன்ற புதுக்கவியாளர்களும் சமூக நிகழ்வைத் தம் கவிதைகளில் பாடுபொருளாக்கி வெற்றி கண்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியா ஆங்கிலேயர் ஆட்சியில் பெரும் மாற்றங்களுக்கு ஆளானது. இக்கால

கட்டத்தில் நிலப்பிரபுத்துவ சமூக அமைப்பாக இருந்த, இந்திய சமூக அமைப்பு முதலாளித்துவ சமூக அமைப்பாக மாறத் தொடங்கியது. ஆங்கிலக் கல்வியினாலும் மேனாட்டு தொடர்பினாலும் மேலை நாட்டு இலக்கிய வகைகள் தமிழில் கலந்தன. அக்கால சமூகச் சூழலுக்கேற்ப புதுக்கவிதை என்னும் இலக்கிய வடிவம் தமிழுக்கு வந்தது.

மேலைநாட்டுக் கவிஞரான வால்ட் விட்மனின் கவிதை பொருளில் ஈடுபாடு கொண்ட பாரதி, தானும் அதுபோல் கவிதை புனைய வேண்டும் என்று நாட்டம் கொண்டார். ஆதலால் அவர் வசன கவிதை எழுதத் தலைப்பட்டார். அதுவே தமிழ்ப் புதுக்கவிதையின் தொடக்கம் எனலாம்.

பாரதியார் கவிதைகளில் நாட்டுப்பற்று, நாட்டு விடுதலை, பெண்கள் நிலை, தோட்டத்தொழிலாளர் நிலை, மொழிப்பற்று, சாதி, பக்தி, சமயம், பெண்கல்வி, பெண்விடுதலை, காதல், இயற்கை போன்ற அன்றைய சமூக நிகழ்வுகளை தம் கவிதையில் பாடுபொருளாக்கியுள்ளார். இவர் கவிதையில் உலகலாவியப் பார்வையைப் பார்க்க முடிகிறது.

> "ஓராயிரம் குயில்கள்
>
> உட்காரும் சோலையிலே
>
> ஒருகுயில் கண்டானடி பாரதி
>
> உடன் குயிலானானடி!"[4]

தாம் கண்ணில் பட்ட பொருளை எல்லாம் பாடுபொருளாக்கும் தன்மை பாரதியிடம் இருந்தமையை இக்கவிதைவரிகள் உணர்த்தும்.

பாரதிக்குப் பின்னால் வந்த பாரதிதாசனிடமும் இத்தகைய தன்மை இருப்பதைக் காணமுடிகிறது. பாரதியின் பாடுபொருளில் பாடிக்குவித்தவர் சுத்தானந்த பாரதியார். இவர் தமிழ், பக்தி, நாட்டுப்பற்று போன்றவற்றை தம் பாடலில் மிகுதியாகப் பாடியுள்ளார். பாரதிக்குப்பின் தேசிய உணர்வில் கவிதை படைத்தவர் நாமக்கல் கவிஞர், அகிம்சை, நாட்டுப்பற்று, தலைவர்களைப் புகழ்தல் போன்றவை இவரது பாடல்களில் விரிந்து காணப்படுகிறது.

**பாடுபொருள்:**

சமுதாயத்தில் நிலவும் ஏழை பணக்காரர் நிலை, மதக்கலவரம், வேலைநிறுத்தம், வேலையில்லாத் திண்டாட்டம், தீண்டாமை, மனப்போராட்டம், அகமன உளைச்சல்கள், வரதட்சிணை, கற்பழிப்பு, விதவை, விதவை மறுமணம், விபச்சாரம், கணவனால் கைவிடப்பட்டவள், ஆணாதிக்கம், வேலைக்குப் போகும் பெண்களின் நிலை, தெருவோரப் பெண்களின் நிலை, தெருவோரம்வேலை செய்யும் ஏழைக்கூலி, கையூட்டு, ~~கையூட்டு~~, கல்வி நிறுவனங்களின் நிலை, ஆசிரியன், பள்ளியின் நிகழ்வுகள், மாணவர்களின் செயல்கள், பொருளாதாரத்தில் பின்தங்கிய மக்களின் நிலை, வர்க்கவேறுபாடு, முதுமை, ஊனம், முதிர்கன்னி, உழைப்பின் பெருமை, விவசாயத்தின் சிறப்பு, விவசாயிகள் படும் துன்பம், அரசியல்வாதிகளின் அலட்சியப்போக்கு, வாக்காளர்களின் பரிதாபம் போன்றவையாகும்.

சமகால சமுதாயப் பிரச்சனைகளான வறுமை, காதல், காதலின் எதிர்பார்ப்புகள், தோல்விகள், குடும்பம், குடும்ப உறவுமுறைகளைப் பற்றிய மதிப்பீடுகள், சமயம், தத்துவம், விஞ்ஞானம், அறியாமை, விழிப்புணர்வு, மனிதநேயமற்ற போக்கு, உள்ளுணர்வு, சமயப்போக்கு, தலைமுறை இடைவெளி, காலம், வாழ்வியல் வெளிப்பாடுகள், கனவுகள், மரணம், ஏமாற்றம், மது, முற்போக்குச் சிந்தனை, தலைவர்கள் பற்றிய புகமுரைகள், இயற்கை நம்பிக்கை, மூடநம்பிக்கை, காமம், அறிவியலின் வளர்ச்சி – வீழ்ச்சி, திரைப்படம், இணையம், கணிப்பொறி என சமுதாயத்தின் ஒவ்வொரு நிகழ்வுகளும் இன்னும் பிறவும் பாடுபொருளாக அமைகின்றன.

இயற்கை பற்றிய நிகழ்வுகளும் இன்றையப் புதுக்கவிதையின் பாடுபொருளாக அமைகின்றன. அவை, கடல், அலை, அருவி, ஏரி, ஓடை, குளம், நதி, வானம், சூரியன், நிலா, விண்மீன், மேகம், கிரகங்கள், மழை, மலை, பனித்துளி, நெருப்பு, மணல், நிலம், புல், மரங்கள், மலர்கள், நத்தை, புறா போன்ற பறவைகளும், விலங்குகளும் என எண்ணிலடங்காப் பொருட்களை புதுக்கவிதையின் பாடுபொருள் என்ற தலைப்பில் ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**சமூகம்:**

மக்கள் கூடிவாழும் அமைப்பைச் சமுதாயம் என்கிறோம். விலங்குகளைப் போல காடுகளிலும் மலைகளிலும் வாழ்ந்து, அங்குள்ள விலங்குகளை வேட்டையாடி, அதன் மாமிசத்தை உண்டு,

மரப்பட்டைகளையும், இலை தழைகளையும் ஆடையாக உடுத்தி, குகைகளிலும், மரப்பொந்துகளிலும் வாழ்ந்த காலத்தில் "தனிமரம் தோப்பாகாது" என்னும் பழமொழிக்கேற்ப தனிமனிதன் சமூகமாகிவிட இயலாது. மரங்கள் பல ஒன்று சேர்ந்து காணப்படும் தோப்பைப் போல தனி மனிதர்கள் பலர் ஒன்று சேர்ந்து கூடிவாழும் அமைப்பே சமூகம் எனப்படும்.

மேலும், காலம் செல்லச் செல்ல நாகரீகம், பண்பாடு போன்றவை வளர வளர தனி மனித வாழ்க்கையை விடுத்து மற்றவர்களோடு கூடி வாழ ஆரம்பித்தான். மனிதனின் அறிவு வளர வளர தன் எண்ணங்களை பிறரிடம் கூறவும் பிறர் எண்ணங்களை தான் அறிந்து கொள்ளவும் தலைப்பட்டான். தன் முன்னேற்றத்தின் விளைவாக புதிய புதிய தொழில் நுட்பங்களை கணடறிந்து அவற்றைத் தாம் வசதியாக வாழ்வதற்குப் பயன்படுத்திக் கொண்டான். தமக்கென உறவுமுறைகளை உருவாக்கிக் கொண்டு ஒரு சமூகமாக வாழ்ந்த மனிதன், தனது சமூகத்திற்கென உள்ள கலாச்சாரம், மரபு, பண்பாடு, நம்பிக்கை, பழக்க வழக்கங்கள் போன்றவற்றைத் தம் வாழ்வில் கடைபிடிக்கலானான். ஒரு பரந்த நிலப்பரப்பில் தங்களுடைய அனைத்துத் தேவைகளையும் நிறைவேற்றிக் கொண்டு வாழும் மக்கள் கூட்டமே சமுதாயமாகும்.

சமுதாயம் என்பது "பொதுவான பண்புகளையும் நியதிகளையும் கொண்டு, குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மக்கள் தொகுதியைக் குறிக்கிறது. Society ஒரு குறிப்பிட்ட தொழில், துறை முதலியவற்றை சேர்ந்தவர்களின் தொகுதி, இனம் Community"[5] எனக் க்ரியாவின் தற்காலத்தமிழ் அகராதி பொருள் கூறுகிறது.

சமூகம், மனிதனின் சமுக உறவுகளில் தோன்றுகிறது. உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதும் மனிதர்கள் அவ்வுறவுகளை நிலைப்படுத்தி, முறைப்படுத்தித் தங்களுக்குள் ஓர் அமைப்பை, அனைவரும் கூடி வாழக்கூடிய நிலையினை ஏற்படுத்திக் கொள்ளும்போது சமூகம் பிறக்கிறது."[6]

சமூகம் அனைத்து சமூக உறவுகளையும் தன்னகத்தே கொண்ட ஒரு பின்னல் என்னும் பொருளில் கையாளப்படுகிறது. பொதுவாகச் சமூகம் (Society) என்பது சமூக உறவுகளின் தொகுப்பு என்ற பொருளைத் தந்தாலும் நடைமுறையில் சமூகவியல் அறிஞர்கள் இப்பொருளில் இச்சொல்லைப் பயன்படுத்துவதில்லை. ஒரு நிலப்பகுதியில் நிலையாகக் கூடிவாழும் பெருந்திரளான மக்கள் என்ற பொருளில் சமூகத்தைக் குறிப்பிடுகிறார்கள். அதாவது தம்மைப் பேணிக் காத்துக் கொள்வதற்கும், அழியாமல் நிலை நிறுத்திக் கொள்வதற்கும் ஒன்றாக இணைந்துள்ள ஒரு மானிடக்குழு சமூகம் எனப்படுகிறது.[6] "மக்கள் பலர் கூடிவாழும் இனக்குழுவே சமுதாயம் எனப்படும். சமுதாயம் என்ற சொல்லில் உள்ள தாயம் என்ற சொல் உரிமை எனப் பொருள்படுவதாகத் தமிழ்மொழி அகராதி கூறுகிறது."[7]

"Social என்ற ஆங்கிலச் சொல் சமுதாயத்தைக் குறிக்கிறது. Society என்ற சொல்லோடு நெருங்கிய தொடர்புடையது. மனிதனை விலங்கினத்திலிருந்து பிரிப்பதே சமுதாயம் என்ற சொல்லாகும் என்பதை உணரலாம்"[8] என விளக்குவர் அ.மு.பரமசிவானந்தம்.

அரிஸ்டாட்டில் (Aristotle), மனிதனுக்குச் சமூகவியல் (Sociality) இயற்கையிலேயே இருக்கிறது. இந்தச் சமூகவியல்பு காரணமாக அவன் பிறரோடு கூடிப்பழகுகிறான். அவ்வாறு பழக முற்படும் போது சமூகம் தோன்றிவிடுகிறது எனக்கூறுகிறார்.[9]

காலம் செல்ல செல்ல ஆதிக்கவர்க்கம் தனது செல்வாக்கையும் பதவியையும் தவறாகப் பயன்படுத்தியதால் சமூகத்தில் பிரிவினைவாதம் உண்டாயிற்று. சமுதாயத்தில் நிகழும் பிரிவினைக்கு முக்கியக் காரணமாக இருப்பவை சாதி அமைப்புகள் தான். சமூகத்தில் நிகழும் பிரச்சனைகளைக் கூறுவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**சாதியப் பிரிவுகள்**

ஒரு சாதியைச் சேர்ந்த உறுப்பினர் அல்லது பலர் சமூகத்தால் ஒப்புதல் அளிக்கப்பாத செய்கைகளைச் செய்துவிட்டால் அவர்களை நெறிமுறைபடுத்திச் சமூகக் கட்டுப்பாட்டை ஏற்படுத்திச் சாதிமுதறை உதவி புரிகிறது.[10]

இந்திய நாட்டில் நடைபெறும் பெரும்பான்மையான அவலங்களுக்கும் காரணமாக இருப்பது சாதிக் கொடுமையாகும்.

“ஒக்கத் தொழுகிற்றிராகில் கலியுக மொன்று மில்லையே”[11] என்கிறார் நம்மாழ்வார். ‘ஒக்கத் தொழுதல்’ என்பது சாதிப் பிரிவினைகளை மறந்து அனைவரும் ஒன்றாக இறைவனை வணங்க வேண்டும் என்பாகும்.

தமிழகத்தைப் பொறுத்தமட்டில் சங்க காலத்திலிருந்தே சாதிக்கு எதிரான குரல் ஒலித்து வருகிறது. ஆயினும் சாதிமுறைகள் நாட்டை விட்டு ஒழியவில்லை நடைமுறையில் எண்ணற்ற சாதிகள் இருப்பினும் நால்வர்ண அமைப்புமுறை முன்னர் இருந்ததை அறியமுடிகிறது. பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனப்பட்டனர். "கற்றல், கற்பித்தல் ஆகியவற்றுடன் சமயச்சடங்கு முறைகளையும் நிகழ்த்தியவர்கள் பிராமணர் எனப்பட்டனர். போர்த்தொழிலை மேற்கொண்டவர்கள் சத்திரியர் எனப்பட்டனர். கைவினைஞர்களும் ஏவலர்களும் சூத்திரர் எனப்பட்டனர்."[12]

இந்திய மக்கள் சுதந்திரத்துடன் வாழத் தலைப்பட்டாலும் சாதி வேற்றுமைகள் மட்டும் குன்றாமல் புல், பூண்டுகளைப் போல மண்டிக் கிடக்கின்றன.

"சுதந்திர இந்தியா
பல துறைகளிலும்
சுடர் விட்டாலும்
விதந்தரும் சாதிவெறி
வேற்றுமைகள் மட்டும்
புதர்கள் போல
மண்டி வளர்கின்றன"[13]

"வன்முறை என்பது ஒருவரின் உயிருக்கும் உடமைக்கும் ஆபத்து விளைவிக்கும் வகையில் செயல்படும் முறை என க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் குறிக்கிறது. இது 'Violence' என ஆங்கில மொழியில் குறிக்கப்படுகிறது."[14]

"இரை தேடச் சென்று
திரும்பிய பறவைக்கு
ஒரே குழப்பம்
எங்கே கூடு?
அதற்கு தெரியாது
மதச் சண்டையில்
கோபுரம் இடிக்கப்பட்டதென்று"[15]

மதக்கலவரத்தால் நாட்டில் கொலை, கொள்ளை போன்ற நிகழ்வுகள் நடைபெறுகின்றன. மனிதனை மனிதன் தாக்கி நாட்டையே போர்க்களமாக்குகிறான். இதில் உயர்திணைப் பொருட்களும், அஃறிணைப் பொருட்களும் பாதிப்படைகின்றன. அப்பாவி மக்கள் தங்கள் இன்னுயிரையும் உடமைகளையும் இழந்து அல்லல் படுகின்றனர். இதனால் அஃறிணைப் பொருட்களும் தனது உடமைகளை இழந்து வாடுகின்றன.

"அவரவர் விருப்பப்படி
அனைவருக்கும் உரிமையுண்டு.....
கோவில்களில் கும்பிடலாம்
தேவாலயங்களில் தியானிக்கலாம்!
மசூதிகளில் தொழலாம்!
ஆனால்
எவனது விருப்பப்படியும்
எவனுக்கும் உரிமையில்லை
மதவெறி வாளால்
மற்றவரைக் கொல்வதற்கு"[16]

என்ற வரிகளால் ஆசிரியர் சமத்துவத்தை நோக்கமாகக் கொள்வதை அறியமுடிகிறது. மனித உருவில் நடமாடும் மிருகங்களால் வன்முறைகள் அதிகரித்து வருகின்றன. பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையால், தன் குழந்தைகளின் வளர்ப்பில் அக்கறை செலுத்தாத சில பெற்றோர்களின் கவனக்குறைவும் இதற்குக் காரணம் என்கிறார். தகாத நண்பர்களின் பழக்க வழக்கம் போன்றவை வன்முறைகள் முளைப்பதற்கும் வளர்ப்பதற்கும் வழிவகுக்கின்றன.

மதக்கலவரத்தால் கலகக்காரர்கள் மட்டும் பாதிக்கப்படுவதில்லை. அப்பாவி மக்களும் குழந்தைகளும், ஏதுமறியாத பிராணிகளும் துன்பத்தில் துவளுகின்றன என்பதை,

"குழந்தைகள், பெண்கள்
முதியவர்கள் எல்லாம் விறகாய்
பற்றி எரியும் மகாமயனத்தில்
விக்கி அழ முடியாமல்
திக்பிரமை கொண்டு நிற்றாள்"[18]

எனக் கலவரத்தை நேரில் கண்ட பெண்ணின் மனநிலையை ஆசிரியர் உணர்த்துகிறார். மக்கள் அனைவரும் எந்தவிதமான வேறுபாடும் இல்லாமல் ஒரே தாயின் பிள்ளைகளைப் போல ஒற்றுமையுடன் வாழ்ந்தால் சமுதாயத்தில் ஏற்பட்டிருக்கும் சாதி வேறுபாடுகள் நீங்கி சமத்துவம் பிறக்கும்.

**ஏழை பணக்காரன் பாகுபாடு**

சமுதாயத்தில் வாழும் மக்களுள் செல்வச் செழிப்புடன் சீமான்களாக வாழ்பவர்களை பணக்காரர்கள் என்றும், அன்றைக்கு

உழைத்துத் தன் வயிற்றை நிரப்பிக் கொண்டு, தன் தேவைகளையும் நிறைவு செய்தும் செய்ய முடியாமலும் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களை ஏழை என்றும் பாகுபடுத்துவர்.

'பணம் என்றால் பிணமும் வாயைப் பிளக்கும்' என்பது முதுமொழி. பணம் பத்தும் செய்யும், பணம் பாதாளம் வரை பாயும் என்றும் கூறுவர். பணம் உள்ளவர்களுக்கு சமுதாயத்தில் மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. சட்டம், அரசாங்கம், குடும்பம் போன்றவை பொருளாதாரப் போக்கிலே தன் முகத்தைத் திருப்பிக் கொள்ளும், ஏழை எவர் துணையுமின்றி ஏக்கத்துடன் வாழும் நிலை.

சட்டம் என்பது "சட்டமன்றங்களாலோ உயர் அரசியல் பதவிகளில் உள்ளவர்களாலோ இயற்றப்படுகிற விதிமுறைகள் எனப்படும்"[18] என்பர்.

"சட்டம் என்பது
வசதி படைத்தவர்களுக்கு
வகுத்துக் கொடுத்த
சௌகரியமாகி விட்டது!"[19]

இக்கவிதையால் சட்டம் விலைக்கு வாங்கப்படுவதை கவிஞர் மேத்தா சுட்டிக் காட்டியுள்ளார்.

"சட்டக் கட்டிடங்களில்
ஓட்டைகள் விழுந்துவிட்டன
வயதாகிப் போனதால்
தர்ம ஸ்தூபிகள்
தள்ளாடுகின்றன"[20]

பணம் படைத்தவர்கள் சட்டத்தை தன் கையில் எடுத்துக் கொள்வதால் தவறு செய்தவர் அத்தவற்றைத் தொடர்ந்து செய்யவும். தவறு செய்யாதவர்கள் தண்டனைக்கு உள்ளாவதும் அன்றாடம் நிகழ்வாகிவிட்டது. ஏழைகளுக்கும் நல்லோருக்கும் உதவ வேண்டிய தர்மசாஸ்திரங்கள் செல்லறித்துவிட்டன. சட்டத்தைப் பேணிக்காக்க வேண்டியவர்களே அதனைச் சகதியில் தள்ளிவிட்டனர்.

> "பணக்காரன் ஏழை
> பாகுபாடு எதுவரை
> வெல்லும்?
> பிணமாகும் வரைதான்
> செல்லும்"[21]

பணக்காரன், ஏழை என்ற பெயர்களை நீக்கிவிட்டு, இறந்தவுடன் அனைவரின் பெயரும் பிணம் தான். உயிரோடு இருக்கும் வரைதான் இந்த வேறுபாடு பிணமான பின்பு எல்லோரும் ஒன்று சேரும் இடமும் ஒன்றேயாகும் என மனிதன் தத்துவார்த்த நிலையை விளக்கியுள்ளமை இங்கு ஆராயத்தக்கதாகும்.

**உழைப்பு**

உழைப்பை மையமாகக் கொண்டு தான் மானுடம் தன் வளர்ச்சிப் பயணத்தைத் தொடங்கியது. உலகில் இன்று உருவாகியிருக்கும் முன்னேற்றங்களுக்குப் பல்வேறு துறைகளைச் சேர்ந்த படைப்பு முயற்சிகளே காரணம் ஆகும். சமுதாயத்தின் வளர்ச்சிக்கு மட்டுமின்றி, தனி மனிதனின் ஆளுமை வளர்ச்சிக்கும் உழைப்பு மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். தனது

படைப்புத்திறனால் புதிதாக ஒன்றைப் படைக்கும் போது மனிதன் மகிழ்வும் நிறைவும் எய்துகிறான். தனது திறன்களை முழுமையாகப் பயன்படுத்தும் போது தான் அவன் முழுமை அடைகிறான்."[22]

உழைப்பு என்பது "கடுமையான வேலை அல்லது பணி, எனக் க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. இதை hard work என ஆங்கில மொழியில் குறிப்பிடப்படுகிறது"[23]

"சமூகத்தின்
நிர்வாணத்தை மறைக்க
நெசவு செய்தவருக்கு
இந்தச்
சமூகம் தந்ததென்ன?
சாவுத் துணிதானே?"[24]

இக்கவிதை வரிகளால் உழைப்பாளனின் நிலையை அறியலாம். உழுபவனுக்கு நிலம் சொந்தமிருக்காது, கட்டிடத் தொழிலாளிக்கு வீடு சொந்தமாக இருக்காது. உழைப்பாளர்கள் எல்லாமே பிறருக்காகவே உழைப்பர் தனக்கென எதுவும் தமதாக்கிக் கொள்ளமாட்டார்கள். அதுபோலத் தான் ஊரில் உள்ளோர் எல்லோரும் விதவிதமான ஆடைகள் அணிந்து வலம் வருவதற்காக ஆடை நெய்து கொடுக்கும் ஒரு நெசவாளிக்கு இடுப்பில் கட்ட ஒரு நல்ல துணி இல்லை. அவனது சவத்திற்கு மட்டுமே அந்த பாக்கியம் கிடைத்தது.

உழைக்கும் வர்க்கத்தினரிடம் போராட்டம் என்பது முக்கியமான ஒன்றாகிவிட்டது. சம்பளம் குறைவு என்றால் மறியல்,

வேலையில் ஊழல் இருந்தால் மறியல், சமுதாயத்தில் நல்லதோ கெட்டதோ எது நடந்தாலும் மறியல் என்பது நம் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்த ஒன்றாகிவிட்டது என்பதை ஆசிரியர்,

"வேலைக்குச் சென்றால் ஆலை மறியல்
வீதிக்கு வந்தால் சாலை மறியல்
நாளை மறியல் இன்றே மறியல்
நல்லதோ கெட்டதோ நடக்கும் மறியல்"[25]

என நினைத்தவுடன் நடத்தும் மறியல் போராட்டத்தைப் பற்றிக் கூறியுள்ளார்.

"இருபதாயிரம் கொடுத்தபின் தான்
வேலை கிடைத்ததெனக்கு
கையூட்டு ஒழிப்புத் துறையில்"[26]

அனைத்துத் துறைகளிலும் கையூட்டு என்பது முதலிடம் பெற்றுவிட்ட நிலையில், அரசாங்க அலுவலகமானாலும், தனியார் அலுவலகமானாலும் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது கையூட்டு. தான் கையூட்டு ஒழிப்புத் துறையில் வேலை செய்ய கையூட்டு கொடுத்து சேர்ந்த நிலையை ஆசிரியர் தம் கவிதை வரிகளால் உணர்த்துகிறார்.

"வேலையில்லாப்
பட்டதாரிப்
பறவைகளின்
வாழ்க்கைச் சரணாலயம்
அவை....

ஆண்டு முழுவதும்

வட்டமிட்டுத் திரியும்

பறக்க முடியாத

பட்டங்களோடு”[27]

இன்றைய சூழலில் வேலை என்பது முயற்கொம்பான நிலையில், படித்த இளஞர்களின் தீராத பிரச்சனையாக இருப்பது வேலையின்மை. எல்லையில்லா கனவுகளை நெஞ்சல் சுமந்து, காகிதப் பட்டங்களை கையில் சுமந்து நூல் அறுபட்டு நிற்கும் காட்சியைக் காணமுடிகிறது. கல்லூரிக் காலங்களில் சிறகடித்துப் பறந்தவர்கள், பின்பு வேலையின்மையால் சிறகொடிந்த பறவைகளாய் நிற்கின்றனர்.

**ஒடுக்கப்பட்ட மக்களின் நிலை**

இரண்டு மனிதர்கள் சந்தித்துக் கொண்டால் அவர்கள் பேசுகின்ற மூன்று வார்த்தைகளில் ஒன்று சாதி. ஒடுக்கப்பட்டவன் பிறக்கும் போதே சாதி என்ற நஞ்சுக் கொடியால் சுற்றப்பட்டே பிறக்கின்றான். தலித் என்ற மராத்திச் சொல்லுக்குக் ‘குழியில் விழுந்தவன்’ என்று பொருள். “தலித் என்பது சாதி அமைப்பில் ஒடுக்கப்பட்ட மக்களைக் குறிக்கும் சொல். இதனை ஆங்கிலத்தில் **the section of society oppressed by the caste system** எனக் க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி கூறுகின்றது ”[28]

நால்வகை வர்ணப் பிரிவினருக்குப் பின்னர் உள்ள சாதி அமைப்புப் பஞ்சமர் என்று அழைக்கப்படுகிறது. இவர்கள் ஒடுக்கப்பட்ட இனத்தைச் சார்ந்தவர்கள். பிறரிடம் உணவு வாங்கி உட்கொண்டு அவர்கள் அணிந்த பழைய ஆடைகளை அணிந்தும்,

அவர்களுக்குப் பணிவிடை செய்யும் பிரிவினர் என அம்பேத்கார் தமது சட்ட நூல் குறிப்பிட்டுள்ளமையை அறியலாம்.

> "அரிசனம் என்பது
> அரசியல் வழக்கு
> பறையன் என்பது
> பண்ணையார் வழக்கு
> சாதி அகராதிக்கு
> அண்ணல் காந்தி
> அருளிய கொடை தான்
> அரிசனம் என்பது"[29]

என பல்வேறு பெயர்களிட்டு, சமுதாய மாற்றங்களுக்கேற்ப அழைத்தனர் என்பதை அறியலாம். ஹரிஜனம் (அரிசனம்) என்றால் கடவுளின் குழந்தைகள் என்று பெயரிட்டனர். ஹரியை அதாவது கடவுளை வணங்குபவர்கள் கடவுளின் குழந்தைகளை வணங்குவார்களா? என்பது கேள்விக்குறியாக உள்ளது.

> "மண ஊர்வலத்திலும்
> பிண ஊர்வலத்திலும்
> பின் செல்பவர்கள்
> நாங்கள்
> ஆனால்
> விருந்து
> சந்தையில்
> விலக்கப்பட்ட கனிகள்"[30]

எனச் சமுதாயத்தால் ஒடுக்கப்பட்டுப் பல்வேறு இன்னல்களுக்களான

ஒடுக்கப்பட்டவர்களைத் தம் கவிதையின் பாடுபொருளாக்கியமை குறிப்பிடத்தக்கது.

சமுதாயத்தில் ஒரு மூலையில் ஒதுங்கி, எந்தவித வசதிகளும் இல்லாமல், உயர் வகுப்பினருக்கு அடிமைகளாய் வாழும் நிலையை

"துருப்பிடித்த வேல்களைச்
சுற்றி விளையாடுகின்ற
சப்பைக்கால் மாறுகண்
சளிமூக்கு சோகைகள்
அரிசனக் குழந்தைகள்"[31]

என அரிசனக் குழந்தைகளின் நிலையையும், அரிசனப் பெண்கள் உயர்வர்க்கத்தால் கற்பிழக்கும் நிலையையும் தம் கவிதையில் சிற்பி வெளிப்படுத்துவதை உணரமுடிகிறது.

சமூகம் என்ற சமுதாய அமைப்பில் நிகழும் அன்றாட நிகழ்வுகள் அனைத்துமே கவிஞனின் பாடுபொருளாகின்றது. தான் கண்ணில் கண்டவற்றை எல்லாம் பாடும் தன்மை கவிஞனிடம் இருப்பதால் அனைத்துமே பாடுபொருளாகின்றன. "இதயத்தால் குழைந்து மூளையால் கட்டப்படுகிற பாலம் தான் சமூகம்"[31] என்பர் வைரமுத்து.

**அரசியல்**

மனித வாழ்வைக் கட்டுப்படுத்தும் சக்திகளுள் முக்கியமான ஒன்று அரசியல் சங்க காலத்தில் மன்னராட்சி நிலவியது. "மன்னன் உலகத்திற்கு உயிராகக் கருதப்பட்டான். இதனையே கம்பர்

வேறுவிதமாகக் கூறுகின்றார். மக்களுடைய உயிர்கள் எல்லாம் உறையும் உடம்பாக அரசனைக் கருதுகின்றார் அவர். அவனுடைய ஆட்சியின் சிறப்புக்கு அடிப்படையாக அமைவது அறநெறியை மேற்கொள்ளுவதே ஆகும்."[33]

அரசன் என்பவன் தன் நாட்டையும், நாட்டு மக்களையும் பாதுகாக்க வேண்டும். வறுமை என்னும் நோய் தொற்றாமல் மக்களைப் பாதுகாக்க வேண்டும். மேலும் தன்னை நாடி வந்தவர்களை ஆதரிக்க வேண்டும். அளவோடு வரி வாங்குதல் வேண்டும் என அரசனுக்குரிய கடமைகளை சங்க இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன. "முறை செய்து காப்பாற்றும் மன்னன் மக்கட்கு இறையென வைக்கப்படும்" என்ற சங்க வரிகளால் அறியலாம். தன்னையும் மக்களையும் நாட்டையும் எந்தவிதமான தீங்கும் இல்லாமல் முறையாகக் காப்பாற்றும் மன்னனை மக்கள் தெய்வத்திற்கும் சமமாக மதித்துப் போற்றுவர்.

"மனிதர்கள் எல்லோரும் சமூக வாழ்க்கையினர். பலர் ஒன்றாகக் கூடிவாழும் பண்பு அவர்களுக்கு இயற்கையாகவே அமைந்துள்ளது. மனிதன் நல்வாழ்க்கை வாழ்வதற்குத் தேவையான சூழ்நிலையை ஏற்படுத்தவே இராச்சியம் தோன்றி வளர்ந்து வந்துள்ளது என்று கிரேக்க அறிஞரான அரிஸ்டாட்டில் கூறியுள்ளார். இவ்வாறு மனிதனுடைய செயல்களையெல்லாம் சமூக முறையில் ஆராயும் இயல்கள் பலவற்றில் அரசியலும் ஒன்று. அரசியலானது இராச்சியத்தின தன்மை அரசாங்கத்தின் இயல்பு முதலியவற்றின் உண்மையைக் கண்டு கூறும். ஒரு சமூகம் நிலைபெற்றிருப்பது, அதன் இராச்சியத்தையும் அரசாங்கத்தையும் பொறுத்திருப்பதால்,

அரிஸ்டாட்டில் அரசியலைத் தலை சிறந்த அறிவுப்பகுதி (Master science) என்றார்"[33] எனக் கலைக்களஞ்சியம் கூறுகிறது.

தலைவர் என்பவர் (அணி, கட்சி, அமைப்பு, கூட்டம், குடும்பம் போன்றவற்றின் செயல், போக்கு, நிர்வாகம் முதலியவற்றை) வழிநடத்திச் செல்பவர். தலைமைப் பொறுப்பில் இருப்பவர், Leader/ head (of an organization, party etc) என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள்படுத்தியுள்ளது.[35]

"அடடா! இங்கு
அதிகார வேட்டை
அரசியல் வாதிகளோ
மேடை மந்திரவாதிகள்"[36]

தனக்குப் பதவி கிடைக்கும் வரை பாமரமக்களைச் சுற்றிவருவார்கள், மேடை கிடைத்துவிட்டால் போதும் பிரச்சாரம் என்ற பெயரில் புகழுரையும் பொய்யுரையும் நாவில் கரைபுரண்டு ஓடும். நாட்டை செல்வவளம் கொழிக்கச் செய்வேன். மாறாக அவர்களது வீடுதான் செல்வத்தால் நிறையும், தான் பேசிய பேச்சுக்களை எல்லாம் காற்றில் பஞ்சைப்போல் பறக்கவிடுவர். அரசியல் வாதிகளின் மேடைப்பேச்சு தூபம் போடுவது போல் அன்றே முடிந்துவிடும். நாட்டை சீர்படுத்தக்கூடியவர்கள் நாட்டைக் குலைத்து நாசவேலையில் இரங்குவர். "அரசாங்கம் என்பது சட்டங்களின் மூலமும் அரசியல் தீர்மானங்களின் மூலமும் சமூகத்தின் ஒரு விதிமுறைக்குட்பட்ட ஒழுங்கை ஏற்படுத்த அமையும் அமைப்பு முறை அரசாங்கம் எனப்படுகிறது."[37] அரசாங்கம் என்னும் அமைப்பையும் சீர்குலைக்கின்றனர்.

"வெள்ள நிவாரணத்திற்காக
வரிசையில் நிற்கும்
மக்களைப் பார்த்த
தலைவர்
மறந்து விடாதீர்
எங்கள் சின்னம்
குடை"[38]

வீடு வாசலை இழந்து, சுற்றத்தாரையும் இழந்து, உண்ண உணவும் உடுக்க உடையுமற்று அனாதைகளாக நிற்கும் மக்களைப் பார்த்து எங்கள் சின்னம் குடை என கேலியும் கிண்டலும் நிறைந்த பாணியில் குறிப்பிட்டு இருக்கிறார். மக்கள் என்ன துன்பங்களை சந்தித்தாலும் தன் காரியம் நடைபெற வேண்டும் என நினைக்கும் அரசியல் வாதியின் போக்கைக் குறிப்பிட்டுள்ளார்.

**வாக்காளர் நிலை**

வாக்காளர்கள் அரசியல் என்னும் அங்கத்தில் மாட்டிக் கொண்டு தன்னை விடுவிக்க முடியாமல் துடிக்கும் பட்டம் போன்றவர்கள். தனக்கென ஒரு முடிவு எடுக்க முடியாமல் பிறரைச் சார்ந்து வாழும் சமூகத்தினர். அரசியல் வாதிகளின செயல்களுக்கு எல்லாம் தலையசைக்கும் ஆட்டுமந்தைகள்.

"வெளிச்சத்தை
காட்டுவதாகச்
சொல்லிக் கொண்டே
நம்மை

குருடாக்கி வருகிற

உண்மையின் சமாதிகள்!"[39]

வாக்காளர்களை ஏமாற்றி வாக்கு சேகரிக்கும் நிலையை அறியலாம்.

"இன்றோ

பதவிக் கனிகளைப்

பறிப்பதற்காக

சீட்டுக்கள் யாருக்கென்று

ஒருவரை ஒருவர்

குலுக்கிப் பார்க்கிறோம்

உலுக்கிப் பார்க்கிறோம்"[40]

தான் பதவிபரிவாரங்களோடு வாழவேண்டும் என்பதற்காக அப்பாவி மக்களின் வாக்குகளை லஞ்சம் கொடுத்துப் பறிக்கும் நிலையையும் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

அனைத்துத் தரப்பினரும் ஒன்றாகக்கூடி உறவினர்களைப் போல நலம் விசாரித்து அன்பைப் பறிமாறிக் கொள்வதாய் நடிக்கும் காலம், தேர்தல் காலம்.

"ஓட்டுக் கேட்டு வருகிறார்

ஒன்றாய்க் கூடி வருகிறார்

வீட்டில் கோடி குவித்தவர்

நாட்டைக் காக்க வருகிறார்"[41]

நாட்டுக்கு செல்வம் சேர்ப்பதாகச் சொல்லிவிட்டுச் சென்றவர்கள். அவர்களின் வீட்டுக்கு செல்வங்களைச் சேர்க்க ஆரம்பித்துவிட்டனர் என்பதை உணர்த்துகிறார்.

"ஹரிஜனங்கள் ஆ.....

வாக்குச் சீட்டை

அடைகாக்கும் முட்டைகள்

தேர்தல் தீர்ந்தால்

திரு திருவென எரிய

நல்ல விறகுக் கட்டைகள்"[42]

ஓட்டுகள் சேகரிக்கும் வரை ஹரிஜனங்கள் (ஹரிஜனங்கள் என்றால் கடவுளின் குழந்தைகள் என்று காந்தியடிகள் குறிப்பிடுவார்) புனிதப் பொருளாக மதிக்கப்படுவார்கள். தேர்தல் முடிந்துவிட்டால் தேவையற்றவர்களாகக் கருதப்படுவர். உதவிக்காக அலுவலகம் போய் நின்றால் தீண்டப்படாதவர்கள் போல தள்ளி நிற்கச் சொல்லி ஏளனமாகச் சிரிப்பர். ஒடுக்கப்பட்ட சாதியினர் அரசியல் வாதிகள் அடுப்பிற்கு எரிய நல்ல விறகுக்கட்டைகள் எனும் ஹரிஜன மக்களின் பரிதாப நிலையை அறியமுடிகிறது.

**பொருளாதாரம்**

"தேவைகளுக்கும் பொருளாக்க முயற்சிக்கும் நெருங்கிய தொடர்புண்டு. மனிதனுடைய தேவைகளில் சில இன்றியமையாதனவாக உள்ளன. அவைகளைத் திரட்டித் தேவைகளை நிறைவேற்ற மனித முயற்சி அவசியம். மனித வாழ்ககையின் அடிப்படையான விருப்பப் பொருள்களை அடைந்தவுடன் புதிய தேவைகள் ஏற்படுகின்றன.[43]

பொருளாதார அறிஞரான மார்ஷல் (Marshall) பொருளாதாரத்தைப் பற்றி பின்வருமாறு விளக்கியுள்ளார்.

பொருளாதார நூல் மக்கள் தம் வாழ்க்கையில் கைக்கொள்ளும் பெருளாக்க முயற்சி முறையை விவரிக்கிறது. பொருளாதாரம் ஒருபுறம் செல்வத்தைப் பற்றிய நூலாயிருப்பினும், அது முக்கியமாகச் செல்வ ஆதிக்கத்தில் மக்கள் ஈடுபடும் முயற்சியைப் பற்றிய நூலாகும்.[44]

பொருளாதாரம் என்பது ஒன்றைச் செய்வதற்குத் தேவையான அளவில் ஒருவரிடம் இருக்கும் பணவசதி, அது ஆங்கிலத்தில் (a persons's money resources) என்று அகராதி குறிப்பிடுகின்றது.[45]

இக்காலப் பொருளாதார அறிஞர் பொருளாதாரத்தின் இயல்பை வேறு விதமாக விளக்கியுள்ளார். மக்களுக்குள்ள தேவைகளை நிறைவு செய்வதற்குரிய வழிவகைகள் குறைவாயுள்ளன. ஆனால் பற்றாக் குறையாகவுள்ள பொருள்கள் பல வழிகளில் பயன்படக்கூடியவை. ஆகையால் ஒவ்வொரு பொருள் விளைவிக்கும் சாதனத்தையும் ஏதாவதொரு வகையிலே தான் பயன்படுத்தலாம். எனவே பொருளாதாரம் என்பது பொருளாக்க முயற்சியில் ஒவ்வொரு பொருளையும் எவ்விதத்தில் மிகச்சிறந்த முறையில் பயன்படுத்தலாமென்பதை விளக்குவதாகும்.[46]

பொருளாதாரம் என்பது மனித வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்த ஒன்றாகிவிட்டது. பொருள் + ஆதாரம் = பொருள் தான் வாழ்க்கையின் ஜீவநாடியாக விளங்குகிறது. பொருள் இல்லையேல் வாழ்க்கை இல்லை.

மனிதன் மனிதனாக வாழவேண்டுமெனில் முதலில் அவனுடைய பொருளாதாரத் தேவைகள் நிறைவு செய்யப்பட வேண்டும். பொருளியல் தேவை நிறைவு செய்யப்பட்டால் தான் அவன் சமூகத்தில் நல்ல நிலையில் வாழமுடியும்.

**வறுமை**

பொருளாதாரமற்ற நிலையை 'வறுமை' என அழைப்பர். "வறுமை என்பது அடிப்படைத் தேவைகளைக்கூட நிறைவு செய்து கொள்ள முடியாத நிலை, வசதியில்லாத நிலை Poverty's, destitution, எனக் குறிப்பிடப்படுகிறது."[47]

"விற்ற பணத்தில்
ரவிக்கை வாங்க முடியவில்லை
சேலை எடுத்த பாடில்லை
பாவாடை எடுக்க வழியில்லை
நினைத்துப் பார்க்கவே
மனசு பாய்ந்தது
சேலையும் வேண்டாம்
..................................
உலையில் போட
அரிசி போதும்!"[48]

வாத்துக்களை மேய்த்து வாழ்க்கை நடத்தும் ஒரு குடும்பத்தின் வறுமை நிலையை மிகவும் அழகாக எடுத்துக் கூறியுள்ளார்.

முட்டைகளை விற்று அரிசி வாங்கி ஒரு வேலை உணவை மட்டுமே உட்கொண்டு கிழிந்த ஆடைகளை உடுத்தி வாழும் நிலையைப் பாடுபொருளாக்கியுள்ளார்.

"வாசலில் மீன்காரன்
முள்ளாய் உறுத்தும்
கடன்"[49]

அன்றாடத்தேவையைக்கூட பூர்த்தி செய்து கொள்ள முடியாத அளவு வறுமை நிலை முள்ளாக உறுத்துகிறது.

நம் நாட்டின் வறுமை நிலையை, வீடின்றி தவிக்கும் நிலையை ஆசிரியர்,

"சுவரொட்டிகளின் பலத்தால்
இன்னும் நிற்கின்றன
சில ஏழைச் சுவர்கள்"[50]

நாடு முன்னேற்றம் அடைந்து கொண்டிருக்கிறது என்று கூறினாலும், ஏதேனும் ஒரு பகுதிகளில் உணவின்றியும், உறைவிடம் இன்றியும் தவிக்கும் நிலையை ஆசிரியர் கூற்றால் அறிய முடிகிறது.

வருடம் முழுவதும் உழைத்து சலித்தவர்கள் வீடு இன்றியும், உண்ண உணவின்றியும், உடுக்க உடையின்றியும், உழைத்து தரித்திரங்களாய் வாழ்கிறோமோ என,

"அன்று போல் இன்றும்
ஏழையாய் தரித்திரமாய்
பட்டினிப் படையினராய்

உண்ண உணவும்
உடுக்க உடையும்
உறையுள் வசதியும்
பெற்றிட இயலாப் பூச்சிகளாய்
உழைத்து சலித்து
வரிகளும் உயர்விலைகளும்
கொடுத்து சோர்ந்து
புலம்பித் தவிக்கிறீர்"[51]

விலைவாசி உயர்வால் அறைவயிறு மட்டுமே நிரம்பும் வறுமை நிலையைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

"சூரிய சந்திரர்
இராகு கேதுவுக்கெல்லாம்
வீடுகட்டி
பட்டா போட்டு
பதிவு செய்த சோதிடர்
குடியிருந்தார்
மரத்தடியில்"[52]

உலகில் வாழும் மக்களுக்கெல்லாம் அவர்களின் நிலையைக் கணித்துச் சொல்லி அவர்களின் எதிர்காலத்தையும், நிகழ்காலத்தையும் இறந்த காலத்தையும் சொல்லும் சோதிடன் தன் அடுத்த வேலை உணவுத் தேவையை நிறைவு செய்ய முடியாமல் தவிக்கிறான். கிரகங்களுக்கு வீடு கட்டி ஒரு வீட்டில் இருந்து மற்றொரு வீட்டிற்கு கிரகங்களை குடியமர்த்தக் கூடியவன்

தனக்கென ஒரு சொந்தமான குடிசை கூட இல்லாத நிலையை பாடுபொருளாக்கியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

"லஞ்சம்
குற்றம் என்கிறது சட்டம்
வாழும் வழி என்கிறது வயிறு"[53]

ஒழுக்கமானவனாக சட்டத்திற்குக் கட்டுப்பட்டவனாக வறுமையில் வாடுவதைவிட வயிற்றுக்கு சோறிடும் எந்தத் தொழிலும் வாழ்வதற்கு வழியே அது குற்றமல்ல என்கிறார் கவிஞர் தமிழ்நாடன்.

பொருளாதாரம் என்பது எக்காலத்தும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. அது மாறும் தன்மை கொண்டது. இன்று செல்வ நிலையில் இருக்கும் ஒருவன் நாளை வறுமை நிலையில் தள்ளப்படுவது இயற்கை. பொருளாதாரத்தைப் பொறுத்தவரை வளர்ச்சியும் வீழ்ச்சியும் நாணயத்தின் இருபக்கங்கள் போன்றவை.

"யாருக்கும் வருவதில்லை
பணத்தின் மனம்
இன்று
விபூதிக்காரன் கையில்
நாளை
விபச்சாரியின் கையில்"[54]

பணம் கைமாறும் தன்மை கொண்டது. ஒவ்வொரு மனமும் அதனைக் கைப்பற்ற நினைக்கின்றது.

விவசாயம் செய்பவரானாலும் கூலிவேலை செய்பவரானாலும், அரசாங்க வேலை செய்பவரானாலும் சரி.

விலைவாசி ஏற்றத்தால் கையிருப்பு குறைந்துவிடுகிறது. மாதச்சம்பளம் வாங்கும் ஒருவன் எண்ணி செலவு செய்கிறான். ஆனால் தேதி பத்துக்குள் பணம் பறந்துவிடுகிறது.

"என்னுடைய சம்பள நாளில்
எண்ணி வாங்குகிற
பளபளக்கும் நோட்டுக்களில்
எவரெவர் முகமோ
தெரியும்
என் முகத்தைத்
தவிர"[55]

மாதத்தில் மீதமுள்ள நாட்களை கடன் வாங்கி நிறைவு செய்ய வேண்டிய நிலை. தேதி முதல் ஆனதும் காந்தியின் முகத்தைத் தவிர எவர் எவர் முகமோ தெரிகிறது. மாதச் சம்பளக்காரனுக்கு எனப் பொருளாதாரச் சிக்கலைப் பாடுபொருளாக்கியுள்ளார்.

"அணைக் கட்டுகளில்
திறக்கப்படும் தண்ணீர்
பள்ளங்களை ஏமாற்றிவிட்டு
மேட்டை நோக்கியே
பாய்கிறது."[56]

பணம் என்பது வசதிபடைத்தவர்களின் இல்லங்களிலே குடி கொண்டுள்ளது. ஏழைகளின் கையில் இருக்க மறுக்கிறது.

மக்களுக்குத் தேவையான ஓரளவு இயற்கை வளம் நிறைந்த நம் நாட்டில் வறுமை நிலவுகிறதென்றால் அதற்கு அரசில் சமுதாய

கலாச்சார காரணங்கள் தான் முக்கிய இடத்தை வகிக்கிறது என்பதை சிறந்த பாடுபொருள் திறத்தால் விளக்கியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

"இந்த தேசத்திலேயே
மிகவும் உயர்ந்தவன்
கிராமவாசியா?
நகரவாசியா?
இல்லை
விலைவாசியா!"[57]

பொருளாதாரம் மந்த நிலையில் இருப்பதற்குக் காரணம் விலைவாசி. என விலைவாசி ஏற்றத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

**குழந்தைத் தொழிலாளர்கள்**

சிறு குழந்தைகளைப் பணிக்கு அனுப்புதல் சட்டப்படி குற்றமாகும். "சிறார் என்பவர்கள் இளம் வயது சிறுவர்களும் சிறுமியரும் என்றும் கொடுமை என்பது ஒன்றின் விளைவாக உணரும் கடுமை அல்லது அனுபவிக்கும் துன்பம் அல்லது இரக்கமற்ற செய்கை"[57] என்றும் குறிக்கின்றது.

பள்ளிக்குச் சென்று படிக்க வேண்டிய பிஞ்சு வயதிலேயே தொழிற்சாலைகளில் கட்டுண்டு கிடக்கும் சிறார்களை குழந்தைத் தொழிலாளர் என்கிறோம். பிஞ்சில் நூலெடுக்க வேண்டியவர்கள் பஞ்சாலைகளில் பஞ்சில் நூலெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

குழந்தைகள் எப்படி எல்லாம் இருக்க வேண்டும் என அறிவு புகட்டினான் பாரதி. ஓடி விளையாட வேண்டும், காலையில்

படிக்க வேண்டும், மாலையில் விளையாட வேண்டும் என வேண்டினான்.

"ஓடி விளையாடு பாப்பா – நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா!
கூடி விளையாடு பாப்பா – ஒரு
குழந்தையை வையாதே பாப்பா!"[59]

ஓய்ந்திருக்கலாகாது எனக் கூறினான். அதற்கு மாறாக அவர்கள் ஓய்ந்திருக்கவில்லை உழைத்துக் கொண்டிருக்கிறார்கள். பாடப் புத்தகங்களைத் தூக்க வேண்டிய கைகளில் பாரங்களை ஏந்தி நின்கினறனர். குடும்பத்தில் ஏற்படும் வறுமை நிலை காரணமாக தொழிற்சாலைகளில் தள்ளப்படுகிறார்கள்.

"ஓடியாடும் பிள்ளை கற்க மறுப்பு
ஓரிடத்தில் உழைத்திடத் தரும் அழைப்பு
ஏடு ஏந்தி படித்திடத்தான் விருப்பு
ஏழ்மையினால் கூலிவேலை திணிப்பு"[60]

குறும்புத்தனத்தையும் கனவுகளையும் புதைத்துவிட்டு மன ஏக்கத்துடன் தொழிற் கிடங்குகளில் அடைபட்டு கிடக்கிறார்கள்.

"குழந்தைத் தொழிலாளர்கள்
இவர்கள்
தரித்திரத்தை ஒழிப்பதற்காகத்
தவறான கூட்டணியில்
இடம் பிடித்துத்

தண்டனை அனுபவிக்கும்

குட்டித் தலைவர்கள்”[61]

தன் குடும்பத்தின் தரித்திரத்தைப் போக்குவதற்காக மீளமுடியாத சிறைக் கைதிகளாய் தண்டனை அனுபவிக்கும் இளைய தலைமுறையினரின் நிலையைப் பாடுபொருளாக்கியுள்ளார்.

“ஆசையாய் பள்ளி சென்று

அன்றாடம் படிக்கும் பிள்ளை

அரைவயிற்றுக் கஞ்சி இன்றி

அடைப்பட்டுக் கிடக்கிறது”[62]

பள்ளிச் சீருடை அணிந்து ஓடிவிளையாடிக் கொண்டு படிக்கும் பருவத்தில் பல எண்ணங்கள் சிறகடித்துப் பறக்க, அரைவயிற்றுக் கஞ்சி குடிப்பதற்காக அன்றாடம் தன்னை வருத்திக் கொண்டு, எந்திரங்களைப் பார்த்தே மனதும் எந்திரமயமான குழந்தைகள் நிலை பரிதாபத்திற்குரியது. பள்ளி செல்லும் மற்ற பிள்ளைகளைப் பார்த்து ஏங்கும் மனம் படைத்த தரித்திர செல்வங்களாய் வாழ்கிறார்கள். கூண்டுக்குள் அடைபட்டுக் கிடக்கும் சிறகொடிந்த பறவையாய் மனம் நொந்து கிடக்கின்றனர் என சிறுவர்களின் நிலையை எண்ணி ஏங்கும் ஆசிரியரின் மனநிலையை அறியமுடியும்.

இன்றும் வெடிமருந்துத் தொழிற்சாலைகளிலும் செங்கல் சூளைகளிலும் குழந்தைகள் தங்கள் இன்னுயிரையும் கொடுத்து ஓயாது உழைத்து வருகிறார்கள் என்பவை போன்ற பல பிரச்சினைகளும் புதுக்கவிதையின் பாடுபெருளாகியுள்ளமையை அறியப்பெறுகிறது.

**கல்வி**

கல்வி மக்கள் அறிவு வளர்ச்சிக்கு உதவும் கருவியாகும். மனிதன் காடுகளில் விலங்குகளுடன் வாழ்ந்து கொண்டிருந்த காலத்திலிருந்து அவன் தன் அறிவை அபிவிருத்தி செய்ய முயற்சிகள் செய்து கொண்டிருக்கிறான். இதில் தன் முன்னோருடைய அனுபவத்தையும் பயன்படுத்திக் கொள்ள முயன்று வருகிறான். தன் குழந்தைகளை நன்றாக வளர்ப்பதற்காக அதற்கேற்ற சாதனங்களையும் பயன்படுத்திக் கொள்ளுகிறான். இச்சாதனங்களை வகுக்கு முன் தன் குழந்தைகள் எத்தகையவர்களாக இருக்க வேண்டுமென்பதையும் தீர்மானம் செய்து கொள்கிறான். இது அவன் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் சமூக அமைப்பைச் சார்ந்ததாக இருக்கும்.[63]

"எனவே, அந்தச் சமூகம் அல்லது நாடு தன் வாழ்க்கை நோக்கங்களுக்கு ஏற்ற கல்வி முறையை வகுத்துக் கொண்டது. ஜனநாயகம் பரவிவரும் இந்நாளில் மக்கள் அனைவரும் தங்கள் அரசியல் உரிமைகளையும் கடமைகளையும் உணர்வது அவசியமாக இருக்கிறது. எனவே, தற்கலக் கல்வி முறையில் குடிமைப் பயிற்சி (citizenship training) முதலியவைகளுக்கு இடம் அளிக்கப்பட்டிருக்கிறது.[64]

நம் நாட்டில் முற்காலத்தில் அனைத்து மாந்தர்க்கும் கல்வி அளிக்கப்படவில்லை. கற்கும் உரிமை அன்று உயர்சாதி மக்களுக்கு மட்டுமே இருந்தது. ஒடுக்கப்பட்ட மக்களைத் தொடர்ந்து அடிமைகளாக வைத்திருக்க அந்நிலை பெரிதும் உதவியது.

ஆங்கிலேயர் காலத்தில் அனைவருக்கும் கல்வி போதித்தனர். ஆனால் அது அவர்களின் ஆதிக்கக் கல்வியாக இருந்தது.

கல்வித் துறையில் குறிப்பாக ஆரம்பக்கல்வி, உயர்நிலைக்கல்வி, மேல்நிலைக்கல்வி, ஆராய்ச்சிப்பணி என எந்நிலையிலும் கல்வி பயிலலாம். வசதி படைத்தவர்கள் மட்டுமே மேல்நிலைக் கல்வியைப் பயின்று வந்துள்ளனர். கல்வி முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகக் கருதப்பட்டபோது அனைவரும் கல்வி பயிலும் கட்டாயத்தில் தள்ளப்பட்டனர்.

கல்வி என்பது அறிவை வளர்ப்பதோடு, மனதைப் பண்படுத்தி பக்குவப்படுத்தும், ஒரு மனிதன் மனிதனாக வாழவும் கல்வி இன்றியமையாதது.

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்"[65]

கல்வியின் அவசியத்தை உணர்ந்த வள்ளுவர். கற்றவர்கள் தான் கண் உடையவர்களாகக் கருதப்படுவர். கல்லாதவர்கள் கண் உடையவர்களாயினும் அது இல்லாதவர்களாகவே மதிக்கப்படுவர் என்கிறார்.

"கல்வியை மம்மர் அறுக்கும் மருந்து எனப் போற்றுவர் சமண சமயத்தவர்[66] எனக் கல்வி என்பது நோயைப் போக்க வந்த மருந்து.

"கல்வி என்பது
உதட்டால் உதிர்வதல்ல

மூளையில் கருத்துக்களை

முளைவிட வைப்பது!"[67]

கல்வியை உதட்டளவில் நுனிபுல் மேய்வதைப் போலப் படிக்காமல் ஆழமாக ஊன்றிப் படித்து அதில் உள்ள நல்ல கருத்துக்களை தம் வாழ்வில் கடைபிடிப்பதை லட்சியமாகக் கொள்ள வேண்டும்.

கல்வி புனிதமாகவும், கல்வியைப் போதிக்கும் ஆசிரியன் தெய்வமாவும் மதிக்கப்பட்ட காலங்கள் போய்விட்டன. இன்று ஆசிரியனும் ஆசிரியத் தொழிலும் சிலர் மத்தியும் ஏளனப்படுத்தப்படும் நிலையை,

"பெரியமனிதர் மத்தியிலே வாத்தியாரு வந்தால்

பிச்சைக்காரன் என்பதுபோல் ஏளனமாய்ப் பார்வை"[68]

என ஆசிரியர் வேலை மக்கள் மத்தியில் மதிப்பைத்தரவில்லை. ஆசிரியர்களுக்கு மாணவர்கள் மத்தியில் மதிப்பும் இல்லை என்பதை உணர்த்துகிறார்.

கல்வி கற்றவர்க்கு எல்லா ஊரும் தம் ஊரே, எல்லா நாடும் தம் நாடே, கல்வி கற்றோரை எல்லாரும் சிறப்புச் செய்வர் எனக் கல்வி என்பது மனிதன் வாழ்வதற்கு முக்கியமானதொன்றாகும். சிலரால் அது மதிப்பிழக்கும் தன்மையை அறியமுடியும்.

**மொழியுணர்வு**

மொழி என்பது சொற்களையும் சொற்களின் தொடர்புகளையும் கொண்ட, மனிதர்கள் தங்கள் கருத்தையும் உணர்வையும் வெளிப்படுத்தித் தங்களுககுள் தொடர்பு கொள்ளப்

பயன்படுத்தும் கருவி, பாஷை Language எனலாம்[69] என தற்காலத் தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

மனிதன் தன் கருத்துக்களைப் பறிமாறிக் கொள்ள கையாண்ட கருவியே மொழியாகும். தமிழ்மொழி மிகவும் பழமையான மொழியாகும். இதனைக் கம்பர் "தழற்புரை நிறக்கடவுள் தந்த தமிழ்" என்றும், உலகத் தோற்றத்தின் போது சிவபெருமானின் உடுக்கையிலிருந்து ஒருபுறம் தமிழும் மறுபுறம் வடமொழியும் தோன்றின என கூறுவர். அத்தகைய தாய்மொழியின் இனிமையை,

> "தமிழே உன்னை வாசித்தேன்
> தமிழால் எல்லாம் யோசித்தேன்
> தமிழை உயிரின் மூச்சாக்கித்
> தழுவத் தீண்டிச் சுவாசித்தேன்"[70]

தமிழ் மொழியாம் தாய்மொழியை தன் உயிர்போல நேசித்தனர். தமிழுக்கு ஏதும் தீங்கு வந்தால் தன்னுயிரையும் கொடுத்தனர். தமிழ்மொழி மீது மிகுதியான பற்று இருப்பதால் சங்கம் வைத்து வளர்த்தனர். பள்ளிகளில் தமிழைக் கட்டாயப் பாடமாக்கினர், ஆட்சி மொழியாக்கினர் தமிழ்ப் பற்றாளர்கள்.

ஓர் இனத்தின் வளர்ச்சியும் வாழ்வும் அதன் மொழி அறிவோடும் அந்த மொழியின் வளர்ச்சியோடும் இரண்டறக் கலந்திருக்கிறது என்பர் மொழியறிஞர். தமிழ்மொழி அதன் தன்மை குன்றாமல் தழைத்தோங்க வேண்டுமென விரும்புகிறார் சிற்பி,

"மீண்டுமந்தப் பழமைநலம் புதுக்கு தற்கு

மெய்சிலிர்க்கத் தமிழ்குயிலே! கூவி வா, வா!"[71]

என்கிறார். தமிழ் தன்னிலை மாறாமல், என்றும் அழியாப் புகழோடு விளங்க வேண்டுமென்பது கவிஞரின் கருத்தாகும்.

**ஆசிரியர்**

ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி, முன்னேற்றம், அமைதி, ஆக்கப்பண்பு ஆகியன அச்சமுதாயத்தில் பரவியுள்ள கல்வி முறையைச் சார்ந்து அமைவனவாகும். இவ்வுண்மையினைக் கேத்தாரி தலைமையில் 1964 ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட கல்வி ஆய்வுக்குழு தமது அறிக்கையில் சுட்டிக் காட்டியுள்ளது.[72] ஆசிரியர்கள் நல்ல சமுதாயத்தை உருவாக்க அரும்பாடு படுபவர்கள். மாணவர்களின் அறிவையும் ஆற்றலையும் கூர்மைப்படுத்தி அவர்களின் உள்ளார்ந்த திறனை வெளிக்கொணர்ந்து அவர்களின் நல்வாழ்வைப் பேணுபவர்கள். ஆசிரியனின் கண்டிப்பும் பரிவும் ஒரு மாணவனுக்கு முக்கியமானதாகும். ஒருவனை சமுதாயத்தில் சிறந்தவனாக அடையாளம் காட்டுபவர்கள் ஆசிரியர்களே.

சமூக மாற்றம், பயனுள்ள வகையில் எழவும், புதிய நிலைமைகள், தேவைகள் ஆகியவற்றிற்கேற்பவும் இளம் தலைமுறையினரிடையே புதிய கருத்துக்கள், மனப்பான்மைகள், செயல்திறன்கள் நடத்தை முறைகள் போன்றவற்றைத் தோற்றுவித்தல் ஆசிரியர்களது பொறுப்பாகிறது.[73]

"அறிவுப் பசியால் துடிக்கும்

மாணவ மணிகளிடம்

தாயினும் சாலப்

பரிந்து ஊட்டுபவன்

எல்லாவற்றிற்கும் எடுத்துக்காட்டாக

விளங்குபவன் ஆசிரியன்”[74]

ஒரு தாய் தன் குழந்தையின் பசியறிந்து உணவு கொடுப்பதைப்போல, ஆசிரியன் மாணவனின் அறிவுப் பசியைப் போக்குமாறு அவனுக்கு விடையளிக்க வேண்டும்.

“சுண்ணாம்புத் தூளதனைத் தினமும் கொஞ்சம்

தின்னாமல் தின்கின்றோம் எங்கள் நெஞ்சம்

புண்ணாகிப் போனாலும் கவலை இல்லை!

புத்தறிவை ஊட்டுவதே எங்கள் வேலை”[75]

ஆசிரியர் இப்படித்தான் இருக்க வேண்டும் எனக் கவிஞர் தானும் ஓர் ஆசிரியன் என்ற நிலையில் உணர்வுப்பூர்வமாகக் குறிப்பிட்டுள்ளார். தினமும் மாணவனுக்கு அறிவு புகட்டும் வகையில் சுண்ணாம்புத் தூளை உட்கொண்டாலும், அதனால் எங்கள் இதயம் வெந்து போனாலும் மாணவனின் முன்னேற்றமே முக்கியம் என்பதை ஒவ்வொரு ஆசிரியனும் கருத்தில் கொள்ள வேண்டுமென உணர்த்துகிறார்.

**தேர்வுத்தாள்**

மாணவனின் ஓராண்டுக்குரிய கல்வி மதிப்பை மதிப்பிட்டுத் தருவது தேர்வுத்தாள். அது பாரபட்சமில்லாமல் அனைத்து மாணவர்களுக்கும் சமமாகத் திருத்தப்பட வேண்டும். மாணவனின் கருத்துக்களுக்குத் தகுந்த மதிப்பெண் இடப்பட வேண்டும்.

"என்னுடைய தேர்வுத்தாள்
எவரங்கே திருத்துவது
முழுமையாய் வாசித்து
முடிவுக்கு வருவீரா.....
மதிப்பெண்ணைக்
குத்து மதிப்பாகக்
கூட்டிக் கழிப்பீரா?"[76]

எனத் தேர்வுத்தாள் நல்லமுறையில் திருத்தி அமைக்கப்பட்டு மதிப்பெண் இடவேண்டும். பாரபட்சம் பார்க்கும் நிலையை விட்டொழிக்க வேண்டும். அனைத்து மாணவ மாணவிகளுக்கு நடுநிலைமை கொண்டவராக இருப்பவரே சிறந்த ஆசிரியராக இருக்க முடியும்.

**வேலை நிறுத்தம்**

மாணவர்கள் சில நேரங்களில் வேலை நிறுத்தம் செய்வர். அவர்களின் வேலை நிறுத்தத்திற்கான காரணங்களை என்ன என்று கேட்காமலேயே சக மாணவர்களும் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவர்.

"எங்களில் சிலர்
வேலை நிறுத்தம் செய்வர் காரணமின்றி
நாங்கள் அவர்களைப் பின் தொடர்வோம்
செம்மறி ஆடுகள் போல"[77]

ஏன் எதற்கு என ஆராயாமல் செயல்படுகின்ற பண்பு பல மாணவர்களிடம் இன்றும் காணப்படுவதை எடுத்துக் காட்டி அச்செயலை கைவிட வேண்டுமென அறிவுரை கூறுகிறார்.

**நூலகம்**

நூலகம் என்பது பல்வேறு துரைசார்ந்த நூல்கள் அடங்கிய புத்தகங்களின் தொகுப்பாகும். அது அறிவுக் களஞ்சியம். அனைத்துலக சான்றோர்களின் அறிவுப் பசிக்குத் தீணி போடக்கூடிய இடம் நூலகம். 'புத்தகங்களின் சிறைச்சாலை; கைதிகளாய் புத்தகங்கள்' என்பர் க.மோகன்.

> "இங்கே
> நேற்றின் சுவடுகளும்
> இன்றின் நிகழ்வுகளும்
> நாளையின் சரித்திரமும்
> பதிக்கப்பட்டிருக்கும்....."[78]

அனைத்து விதமான நூல்களையும், பல நூற்றாண்டு காலத் தகவல்களும் வரலாற்றுச் சான்றுகளும், சமூக ஆதாரங்களும் கிடைக்குமிடம் நூலகமாகும்.

> "பனிமுத்து பரிதிமுன்னே அழிதல் போல
> பகுத்துணரா படிப்புன்னில் பதிந்திடாது
> நனிமுத்தாய் ஒளிவீச நாளும் நாளும்
> நல்லநூலை ஆழமாகப் படிக்க வேண்டும்!
> .........................................................
> ஏழையவன் செல்வத்தைச் சேர்க்க எண்ணும்
> ஏக்கம்போல் படித்தால் தான் அறிவு சேரும்."[79]

நாம் படிக்கும் நூல் நம் மனதில் நீங்காத இடம் பிடிக்க வேண்டும். நூலை ஆழமாக ஊன்றிப் படிக்க வேண்டும். வறியவன் செல்வம்

சேர்க்க விருப்பம் கொள்வது போல, விருப்புடன் படிக்க வேண்டும். மேலே கண்டதுபோல பல்வேறு பாடுபொருளை விளக்குகிறது.

**குடும்பம்**

மக்கள் ஒரே குழுவாகக் கூடிவாழும் முறை குடும்பம் எனப்படும். குடும்பம் பற்றிய ஒவ்வொரு கருத்தை ஆய்வது இவ்வியலின் நோக்கம். குடும்பம் என்பது கணவனும் மனைவியும் நம் குழந்தையோடு (சில சமயம் தங்கள் பெற்றோரோடு அல்லது உடன் பிறந்தவரோடு) கூடிவாழும் சமூக அமைப்பாகும்.[80]

குடும்ப உறுப்பினர்களுக்கு நல்லொழுக்கம் நற்பண்பு போன்ற சமூக ஒழுக்கலாறுகளைக் கற்பிப்பதன் மூலமும் சமூகக் கட்டுப்பாட்டை ஏற்படுத்த முயலும் ஒரு நிறுவனமாகக் குடும்பம் செயல்படுகிறது. இவ்வகையில் சமூக மயமாதலின் மூலம் குடும்பம் தனது பங்கினைச் சரிவரச் செய்கிறது.[81]

**கணவன் மனைவி உறவு**

கணவன் மனைவி உறவு முறையைப் பற்றி வாழ்வியற் களஞ்சியம் பின்வருமாறு கூறுகின்றது. “மனவாழ்க்கையைத் தொடர்ந்து குழந்தைகள் பிறக்கிறபோது, குடும்பத்தின் அளவு மட்டுமின்றி, குடும்ப உறுப்பினர்களின் எண்ணிக்கை, வகைகள் ஆகியவையும் கூடுகின்றன. கணவன் மனைவி என்ற உறவோடு பெற்றோர் மக்கள் என்ற நேர்வரை உறவும், உடன் பிறந்தோர் என்ற இணைவரை உறவும் முகிழ்கினறன. இந்த உறவுகள் குடும்பத்தை முழுமைப்படுத்துகின்றன. முழுமையான நிலையில் குடும்பம் என்பது

கணவன் மனைவி என்ற உறவு, பெற்றோர் மக்கள் என்ற நேர்வரை உறவு ஆகிய பல உறவுகள் பின்னிப் பிணைந்திருக்க தொகுதியாக அமைகிறது. இத்தகைய உறவுகளின் பின்னலில் இணைந்தவர்களே அடிப்படையில் குடும்ப உறுப்பினர்களாக ஆகின்றனர்."[82]

கணவன் மனைவி உறவு என்பது புனிதமான ஒன்றாகும். இருமனங்கள் கட்டுண்ட பந்தம். இம்முறையில் மனக்கசப்பு, பிரிவு என்பதற்கே இடம் கொடுக்காமல் இருக்க வேண்டும்.

"கணவன் மனைவியைக்
கனவில்கூட பிரிக்காதீர்கள்
மனைவியைக் கணவன்
மனதில் முடிஞ்சுவைக்கட்டும்"[83]

கணவன் மனைவியை விவாகரத்து என்னும் துன்பத்தில் சிக்க வைத்து அவர்களை பிரிப்பது பெரும் பாவமாகும் என வழக்கறிஞர்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறார் கவிஞர்.

**தாய்மை சிறப்பு**

தாய்மை என்பது பெண்ணுக்குக் கிடைத்த பெரும்பேறாகும். "தாயிற்சிறந்ததோர் கோவிலுமில்லை எனும் கூற்று தாயின் சிறப்பையும் தாயானவள் ஒரு குடும்பத்தின் ஆதாரம், ஆணிவேர் என்னும் முக்கியத்துவத்தையும் விளக்குகிறது. மனிதனை ஆக்குவதும் அழிப்பதும் அவனது சூழ்நிலை, அந்தச் சூழ்நிலையை அமைத்துத்தருவது பெண்ணின் கடமை."[84]

*“கருணை உருவாக்க உருவை உயர்வாக்க*

*கருணைக் குணத்தோடு மடியில் சுமந்தவளே!*

*பெருமை, பொறுமைகளை உன்னுள் வளர்த்தவளே*

*அருமை தாய்மனமே தலை தாழ்ந்து வணங்குகிறேன்”*[85]

தாய் என்னும் உறவு மிகவும் புனிதமானது, எந்தப் பிரதிபலனும் எதிர்பாராமல் அன்பும் அரவணைப்பும் தருவது, தன்னலம்பாராமல் தன் குழந்தை நலமே பெரிதென நினைக்கும் பரந்த மனதினள். தன் பிள்ளையைச் சான்றோனாக்க அல்லும் பகலும் ஓயாது உழைத்திடுவாள்.

*“எதிரே*

*இடது தோளிலும்*

*வலது தோளிலும்*

*இருப்பினும்*

*மாற்றி மாற்றி*

*வைத்த தன்றி*

*தன் குழந்தையைக் கீழே*

*இறக்கி வைக்காத*

*தாயைப் பார்த்துத்*

*தலை குனிந்தான்!”*[86]

தாய் தன் குழந்தையை மார்பிலும் தோளிலும் போட்டு கண்ணெனக் கருதி வளர்ப்பாள். எத்தனை சுமை தன் கையில் இருந்தாலும் அவற்றை இரக்கி கீழே வைத்து விடுவாள். ஆனால் தன் பிள்ளையை சுமையாகக் கருதி கீழே இரக்கி வைக்கமாட்டாள். குழந்தைகளின் தேவைகளை தாய்மை உணர்வோடு நிறைவு செய்வாள். வயிற்றில்

சுமந்த தன் பிள்ளையை நெஞ்சில் சுமக்கிறாள் என்னும் தளர்வறியா தாய்ப்பாசம் பற்றி இக்கவிதையில் அழகாக விளக்கியுள்ளார். அப்படிப்பட்ட அன்னையை நாமும் நேசிக்க வேண்டும்.

"மண்ணில் இருப்பின்கூட
அன்னைமேல் அன்புவைத்து
விண்ணைத் தொடலாம்
கண்ணிமைக்கும் பொழுதுகூட
உன்னைவிட்டு பிரியாதவள
அவள்தான் அன்னை"[87]

கண் இமைக்கும் பொழுதுகூட தன் குழந்தையை விட்டுப் பிரியாதவள் அன்னை. அந்த அன்னையைக் கடுஞ்சொல் கூறாமல் அன்போடு பேணிப்பாதுகாக்க வேண்டும். அன்னை மீது அன்பு வைத்து, அவளைப் போற்றினாள் விண்ணைத் தொடலாம்.

**தந்தையின் சிறப்பு**

குடும்பத்தில் தந்தைக்கும் சிறப்புண்டு. அன்பு காட்டி வளர்ப்பது தாய் என்றால், அறிவூட்டி வளர்ப்பது தந்தையாகும். அவர் நண்பனைப் போலப் பழக வேண்டும். கண்டிப்புடன் கூடிய கனிவும் இருக்க வேண்டும். அவரே சிறந்த தந்தையாவான்.

"தந்தையென்று நீ
தள்ளிப்போய் நிற்காமல்
என்னை
நண்பனைப் போன்றோ
நடத்தினாய்....."[88]

சிறுவயது முதலே தன்னை சீராட்டிப் பாராட்டி வளர்த்து ஒவ்வொரு நிலையிலும் தான் உயரும் நிலையைப் பார்க்க வேண்டும் என ஏங்கிய தன் தந்தையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் கவிஞர் மு.மேத்தா.

**உறவு முறை**

சமூக நிறுவனங்களில் குடும்பத்திற்கு அடுத்தபடியாக, உறவுமுறைகள் (Kinship Relations) சமூகக் கட்டுப்பாட்டை ஏற்படுத்தும் ஒரு முக்கிய காரணியாக விளங்குகின்றன. உறவுமுறைகள் சமூகக் கட்டுப்பாட்டை ஏற்படுத்திச் சமுதாயத்தின் ஒழுங்கையும் நிலைத் தன்மையையும் நிலைபெறச் செய்கின்றன.[89]

குடும்பத்தின் மற்றொரு அங்கம் உறவுகள். அவை நாம் நல்ல நிலையில் வாழவும் வழிவகுக்கும், தாழவும் வழி வகுக்கும். நல்ல உறவுகள் நம் முன்னேற்றத்திற்கு கைகொடுத்து உதவும். தீய உறவுகள் நம்மை பாதாளத்தில் தள்ளி இன்புறும்.

> "உறவுகளின்
> உள்வேஷ
> உள்ளாடை பிரித்தால்
> நிர்வாணம் தெரியும்
> அதன் நிரந்தரம்
> பொய்யென
> பின்புதான் புரியும்"[90]

பழகப் பழக பாலும் புளிக்கும் என்பார்கள். அதுபோல் ஒருவரிடம் பழகப் பழகத் தான் அவர்களின் சுயரூபம் தெரியும். தனக்கென்று

ஒரு துன்பம் வந்தால் தான் உறவினர் நம் மீது உண்மையான நட்பா? இல்லையா? என்பது புரியும்.

“சொத்தில் பங்கு பெறச்
சூழும் சுற்றத்தார்
கடன் பட்டால் வருவரோ?
பங்கு கொள்ள?”[91]

சொத்து சுகமிருந்தால் கூடி இருக்கும் சுற்றம், அதில் தானும் பங்கு கொண்டு அனுபவிக்கும். துன்பப்பட்டால் துன்பத்தில் பங்கு கொள்ளாது தூரத்தில் ஓடிவிடும்.

ஒரு குடும்பத்திறகு வருபவள் சிறந்தவளாக இருந்தால் தான்அந்தக் குடும்பமும் சிறப்புடையதாக விளங்க முடியம். அவள் குடும்ப உறவுகளிடம் நற்பெயர் பெறுவாள்.

“வெட்டித் தனமாய்த் திரிவார் - அவர்
வேலை முறுக்கைப் புரிவாய்
கெட்டி கார அண்ணி - நமக்குக்
கிடைத்த பேற்றை எண்ணி - அண்ணி”[92]

குடும்பத்தில் பொறுப்பாக இருக்கும் அண்ணியை மிகவும் கெட்டிக்காரியாகக் குறிப்பிட்டுள்ளார். பொதுவாக எல்லாக் குடும்பங்களுக்கிடையே மாமியார் மருமகள் என்றால் எதிர் எதிர் துருவங்களாகவேப் பார்க்கும் மனப்பான்மை வளர்ந்துள்ளது.

“மாமி மருகி சண்டையை
மாறி மாறிக் கண்டுளோம் நம்

மாமி மருகி இருவரும்

தாயும் மகளும் போன்றுளார்"[93]

மாமி மருமகள் என்றாலே நினைவுக்கு வருவது சண்டை. ஆனால் இங்கு மாமியும் மருமகளும் தாயும் மகளும் போலுள்ள உறவு முறையைச் சுட்டிக் காட்டியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

**சகோதரர்கள்**

அண்ணனும் தம்பியும் ஒரே வயிற்றில் பிறந்து, ஒரே வீட்டில் வளர்ந்தவர்கள். வீட்டில் உள்ள உடமைகள் அனைத்திற்கும் இருவருமே உரிமையாளர்கள். ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் எதிரிகளாக இரு திசைகளாய் நிற்கின்றனர். இருவரிடையேயும் அன்பில்லாது விட்டுக் கொடுக்கும் தன்மை இல்லாதது தான் காரணம்.

"அண்ணன்

தம்பி

நிலத்தகராறு

கோர்ட் ஏறிபாகம்

பிரிந்தது!

தற்சமயம்

இரண்டிலும்

வக்கீல் மாடுகள்"[94]

இருவரிடமும் ஒற்றுமை இல்லாததால் அவர்களின் சொத்தை மற்றொருவன் அனுபவிக்கிறான். குடும்பத்தில் விரிசல்கள் ஏற்பட்டால் நஷ்டம் அக்குடும்ப அங்கத்தினருக்கே, மற்றவர்

வேடிக்கைப் பார்த்துவிட்டுச் சென்றுவிடுவர். குடும்பம் என்பது அனைவரும் கூடிவாழும் கூட்டமைப்பு இதில், இன்பம் நிலவ வேண்டும் என்பதை தமது கவிதையில் பாடுபொருளாக்கியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

**பெண்**

**பெண்ணியம் – விளக்கம்**

பிரித்தானியக் கலைக் களஞ்சியம். பெண்ணியம் என்ற சொல்லுக்குப் "பெண்மை மீட்டெழுச்சி இயக்கம்" என்று பொருள் கூறுகிறது. மேலும் பெண்ணியம் என்ற சொல் மிகவும் அண்மைக் காலத்தில் தோன்றியது. அது பெண்ணுரிமைக்காகப் போராடுவது அதோடு, பெண்களின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையிலும், அவர்கள் ஆண்களுக்கும் சமமானவர்கள் என்னும் உயர்நெறியை நிலை நாட்டும் நோக்கத்தைக் கருவாகக் கொண்டு இயங்கி வருகிறது என்றும் விளக்கம் தருகிறது.[93]

பெண்கள் ஆண்களின் அடக்குமுறைக்கு உட்படாமல் அடிமை நிலையில் வாழாமல், எல்லா நிலையிலும் தன்னைக் காத்துக்கொள்ளும் ஒரு அமைப்பே பெண்ணியமாகும்.

சமூகத்தில் பெண்களுக்கு எண்ணற்ற கொடுமைகள் இன்னல்கள் விளைகின்றன. அவை வரதட்சணைக் கொடுமை, பாலியல், விலைமகளிர், முதிர்கன்னி, விதவைத் துன்பம் போன்றக் கொடுமைகளால் அல்லல்படுகின்றனர். பெண்களுக்கென பாதுகாப்பு இருப்பதில்லை. சங்க காலத்தில் பெண்கள் வீட்டைவிட்டு வெளியே செல்லக்கூடாது. கணவனைத் தவிர வேறொருவர் முகத்தைப்

பார்க்கக்கூடாது என்ற நிலை இருந்தது. கணவன் எத்தகைய தவறைச் செய்தாலும் அதனைத் தட்டிக் கேட்காது ஊமைகளாகவே வாழ்ந்தனர்.

பாரதி பெண்களுக்கு சுதந்திரம் வேண்டுமென முழங்கினான். அதனால் தான், வீட்டுக்குள்ளே பெண்களைப் பூட்டிவைத்த விசித்திரமான மனிதன் தலையைக் குனிந்தான் எனப் பாடினான். பாரதி நினைத்த சுதந்திரம் பெண்களுக்கு கிடைக்கவில்லை. சில நிலைகளில் இன்றும் அடிமைகளாகவே வாழ்ந்து வருகின்றனர்.

முதற்காப்பியமான சிலப்பதிகாரம் கணவனைக் கேள்வி கேட்கமல் பின்பற்றும் மனைவியைப் படைத்து, பெண்களுக்கு முன்மாதிரியாக்கிக் காட்டுகிறது. மணிமேகலை பெண்களுக்கு விதிக்கப்பட்ட கற்பைப் பாகுபடுத்த நுணுக்கம் கூறுகிறது. கல்லானாலும் கணவன் எனும் கொள்கைக்கு மாறானதால் குண்டலகேசி வழக்கிழந்து போயிற்று. அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலான குணங்கள் பெண்களின் சுய சிந்தனைக்குக் கடிவாளமாகப் புகுத்தப்பட்டன.[96] இப்படியே சங்ககாலம் முதல் இன்று வரை அடக்குமுறைக்கு உட்பட்டவர்களாகவே வாழ்கின்றனர்.

**ஆணாதிக்கம்**

ஆணாதிக்கம் என்பது பெண்களைவிட ஆண்கள் மேலானவர்கள், பெண்கள் ஆண்களைச் சார்ந்திருப்பவர்கள் என்ற

ஆண்களின் ஆதிக்க மனப்போக்கு (Male chouvinism) [97] எனத் தமிழ் அகராதி மொழிகிறது.

“அப்பாவிற்கு
அறுபதாயிரம் மனைவிகள் இருந்தும்
சந்தேகம் இல்லை
ராமனுக்கு
ஒரு மனைவி
ஆயிரம் சந்தேகங்கள்”[98]

தசரத மன்னனுக்கு அறுபதாயிரம் மனைவிமார்கள் இருந்தனர். ஆனால் அவர் அப்பெண்களின் மீது சந்தேகம் கொள்ளவில்லை. இராமனுக்கு ஒரு மனைவி அவள் மேலே அவன் சந்தேகம் கொண்டான் என்பதை உணர்த்துகிறார். ஒரு ஆண் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் மணக்கலாம் என்ற நிலை நிலவியதே இதற்குக் காரணமாகும்.

**வரதட்சணையின் பாதிப்புகள்**

இன்று சமூகத்தில் நிலவிவரும் மிகப்பெரிய நோய் வரதட்சணையாகும். இதனால் பெண்கள் மனம் உடைந்து துயர நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள்.

வரதட்சணை என்பது திருமணத்தின் போது பெண் வீட்டார் மணமகனுக்குத் தரும் தொகை,

“பெண்களே
நீங்கள் சருகுக் குப்பைகள்
இல்லையென்றால் மணமகன் உங்கள் வீட்டில்

நகைகளைக் கேட்டபோது புன்னகை

புரிந்திருப்பீர்களா? தாலி கட்ட

ஒப்புவிப்பு தந்திருப்பீர்களா?"[99]

பெண்கள் குடும்பத்திற்குச் சுமையாக இருக்க வேண்டாம் என நினைத்து திருமணத்திற்கு ஒப்புதல் கொடுக்கின்றனர். ஆனால் திருமணம் முடிந்த பின்னர் பெற்றோர் வீட்டில் போய் பணம், நகை வாங்கிவா என அடித்தும், சூடு வைத்தும், பட்டினி போட்டும், குழந்தையைப் பறித்துக் கொண்டு வெளியே விரட்டியும் பல்வேறு விதமான வரதட்சணைக் கொடுமைகளுக்குப் பெண்கள் ஆளாகிறார்கள்.

**விலைமகளிர் பிரச்சினை**

விலைமகள் என்பவள் விலைக்காக இன்பம் கொடுப்பவள். பல ஆண்களுக்கு விலைபோகக் கூடியவள். பிறப்பிலேயே யாரும் விலைமகள் ஆவதில்லை பொருளாதார நிலையின் காரணமாக இந்நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள்.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலையில் வாழாமல் ஒரு பெண் பல ஆணுடன் உடலுறவு கொள்பவரே விலைமகளிர் எனப்படுவர்.

"எனக்குள் முள்

குத்திய போது

நிறைய பேருக்கு

நான் மெத்தையாயிருந்தேன்"[100]

பலருக்கு சுகத்தைக் கொடுக்கும் அப்பெண்ணின் நிலை முட்படுக்கையாகிவிட்டது. விலைமகளின் நிலையைப் பற்றி கவிஞர்

சிற்பி தம் கவிதையில் மிகவும் தெளிவாக விளக்கியுள்ளார். எந்தப் பெண்களும் தாங்களாகவே விரும்பி இத்தொழிலை மேற்கொள்ளவில்லை. அவளின் குடும்பச் சூழலும் சமுதாயச் சூழலும் தான் பெண்ணின் இந்நிலைக்குக் காரணம். சாக்கடைகளும் தான் இன்னும் வற்றிவிடவில்லை.....! என்னும் கவிதையில் பங்களாதேஷ் அகதியாகிய ஒரு பெண்ணிடம் ஆண்கள் கையாண்ட ஒரு மிருகத்தனமான பாலியல் கொடுமையை தன் கவிதையில் கூறியுள்ளார்.

கனி கொய்கிறேன் என்று பெண்ணின் மார்பகத்தை கத்தியால் கிழித்து, அவளின் அலறல் ஓலத்தைக் கேட்டு மகிழ்ந்தான் ஓர் ஆடவன், எந்த இறைவனும் என்னைக் காப்பாற்ற வரவில்லை என்ற பரிதவிப்பும் இப்படிப்பட்ட துயரத்திற்கு ஆளான பெண் தெய்வத்தையே வெறுக்கிறாள். பொருளாதாரத்திற்காக இந்த சாக்கடையில் தள்ளப்பட்டதை எண்ணி வெட்கித் தலை குனிகிறாள் அப்பெண்.

> "அறை விளக்கின் வெளிச்சமே ஆடையாக
> அவளைத் துகிலுரிந்தேன்...
> கோதுமை நிறம்
> எனக்குப் பசியின் வெறி!
> குடிக்கத் தண்ணீர் கேட்டாள்!
> நான் துகிலுரிந்தேன்...செவிடனாக!
> எனக்கு உடல்... உடல்
> அந்தக் குங்கும உடல் வேண்டும்"[101]

பெண் வயிற்றுப் பிழைப்பிற்காக இத்தொழிலைச் செய்து இழிவான நிலைக்குத் தள்ளப்படுகிறாள்.

"நாங்கள் நிர்வாணத்தை
விற்பனை செய்கிறோம்
ஆடை வாங்குவதற்காக"[102]

பொருளாதார சிக்கலால் ஏற்படும் பிரச்சனை உண்ண உணவும், உடுக்க உடையும் இல்லாத நிலையில், வசதியாக வாழவேண்டும் என்பதற்காக தங்கள் உடலை விற்பனை செய்கின்றனர். புதிய பொருள் பெற்றுக் கொள்வதற்காக, தங்கள் உடலை வருத்திக் கொண்டு இந்நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். சமூக அமைப்பினாலும் பொருளாதாரச் சூழ்நிலையாலும் இந்நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள்.

**போகப்பொருள்**

பெண்கள் போகப் பொருளாகவே மதிக்கப்படுகிறார்கள். ஆண்களின் தேவை பூர்த்தியானவுடன் தூக்கி எரியும் எச்சில் இலையாகவும், மன்னர்களின் அரண்மனைகளில் அலங்கார பொம்மைகளாக நிற்பவர்கள் பெண்கள். பணவசதி படைத்தவர்களின் அலங்கார வீடுகளில் புதுவித ஓவியமாகவும், சில வீடுகளில் வாயிலை மறைக்க உதவும் திரை சீலையாகவும் குடிசைகளுக்கு அடுப்பாகவும் பயன்படுகிறர்கள். குடும்பத்திலும், சமூக அமைப்புகளிலும் துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் பெரிதும் ஆளாக்கப்படுபவர்கள் பெண்கள் ஆவார்கள்.

"சில அரண்மனைகளில்

அலங்கார பொம்மையாகவும்

சில பங்களாக்களில்

நவீன ஓவியமாகவும்

சில வீடுகளில்

திரைச் சீலையாகவும்

சில குடிசைகளில்

எரியும் அடுப்பாகவும்

பெண்....."[103]

வீட்டுக்குள்ளே வெளியுலகமே தெரியாதவர்களாக பெண்கள் அடக்கப்படுகிறார்கள்.

**முதிர்கன்னியர் நிலை**

திருமண வயதைக் கடந்து திருமணமாகாமல் இருக்கும் பெண்ணை முதிர்கன்னி என அழைப்பர். பல காரணங்களால் முதிர்கன்னி நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள். மாப்பிள்ளை வீட்டார் கேட்ட வரதட்சணை கொடுத்து திருமணம் செய்ய முடியமை, மனதிற்குப் பொருந்திய மணாளன் கிடைக்காமை, காதலில் ஏற்பட்ட தோல்வி காரணமாக திருமணம் செய்து கொள்ளாமை, தனக்கு இணையான கல்வித் தகுதியில் மணாளன் கிடைக்காமை போன்ற பிறவும் முதிர்கன்னியர் நிலைக்கு காரணமாகும்.

"பூக்களிலே நாணுமொரு

பூவாய்த்தான் பிறப்பெடுத்தேன்

பூவாகப் பிறந்தாலும்

பொன் விரல்கள் தீண்டலையே

பொன் விரல்கள் தீண்டலையே நான்

பூமாலை யாகலையே"[104]

எல்லாப் பெண்களும் போல் தான் நானும் பிறந்தேன். ஆனால் என்னை மணாளன் கை தீண்டலையே, இன்னும் திருமணம் ஆகவில்லையே என்ற ஏக்கம் ஒரு முதிர்கன்னியின் தொனியாக ஒலிக்கிறது.

"முதுமையில் துணை வேண்டாமா

என்று கேட்டிருந்தாய்

எனக்குக் கைத்தடி போதும்"[105]

மற்ற பெண்கள் திருமணம் செய்து கொண்டு கணவன், மனைவி, குழந்தை என வாழும்போது முதிர்கன்னிகள் நிலை பரிதாபமானதாகும். வயதான காலத்தில் கணவன் மனைவி ஒருவருக்கொருவர் உதவியாக இருப்பர். ஆனால் முதிர் கன்னிகளோ முதுமைக்கு துணைவேண்டாம் கைத்தடி போதும் என்கின்றனர் என மு.மேத்தா தன் கவிதையில அழகுபடக் கூறியுள்ளார்.

**விதவைத் துன்பம்**

கணவனை இழந்த பெண் விதவை என அழைக்கப்படுகிறாள்.

குடும்ப வாழ்வில் கணவன் மனைவியை இழப்பதும், மனைவி கணவனை இழப்பதும் இயல்பு. கணவன் இழந்த பெண் தான் துன்ப நிலைக்கு ஆளாகிறாள், துன்பப்படுத்தப்படுகிறாள். முற்காலத்தில் கணவனை இழந்த பெண் உடன்கட்டை ஏறவேண்டும்

என்ற நிலை இருந்தது. கணவனை இழந்தவள் கைம்மை நோன்பு மேற்கொள்ள வேண்டும்.

கைம்பெண் பொட்டுவைத்தல் கூடாது, பூசூடக்கூடாது, மங்கள காரியங்களில் கலந்து கொள்ளக்கூடாது. வேறொரு ஆடவனையும் மணம்புரியக்கூடாது போன்ற சட்டதிட்டங்கள் பெண்களுக்கு மட்டுமன்றி ஆண்களுக்குக் கிடையாது.

"சமூகம்
ஒரு விதவைக் கூந்தலின்
பூக்களை மட்டுமே
புறக்கணிக்க முடியும்!
அவள் கண்ணிலிருந்து
இதயத்திற்குள் சொட்டும்
கண்ணீருக்கு யார்
காவல் நிற்க முடியும்"[106]

கணவனை இழந்த பெண்ணுக்கு பல சட்டதிட்டங்களை வகுக்கிறது சமூகம். ஆனால் அவளது மனம் நொந்து, கண்ணில் இருந்து வரும் கண்ணீரை யாரால் தடுத்து நிறுத்த முடியும்.

"இந்தப்பூ மலர்ந்து
மணங்கமழும் நேரத்தில்
உலர்ந்து விட்டது
உதிர்ந்து விட்டது"[107]

திருமணம் செய்து கொண்டு வாழவேண்டிய வயதில் கணவனை இழந்து துன்பப்படும் பெண்ணை உதிர்ந்த பூவாக சித்தரிக்கிறார் கவிஞர்.

**பெண்ணுக்கு பாதுகாப்பின்மை**

சமூகத்தில் பெண்களுக்குப் பாதுகாப்பு கிடையாது. பெண்கள் தனியாக நடக்க முடிவதில்லை. பிறரைக் காக்கும் உயர் பதவிகளில் பெண் இருந்தாலும் அவர்களுக்கு பாதுகாப்பு கிடைப்பதில்லை. அவர்களைப் பாதுகாக்கவும் ஆள் வேண்டியுள்ளது.

"பெண் காவலர்
இரவுப் பணிக்கு சென்றாள்
பாதுகாப்புக்கு
அவள் பாட்டி....."[108]

பெண்ணுக்கு இன்னும் முழுமையான சுதந்திரம் கிடைக்கவில்லை. ஒரு பெண் கழுத்து நிறைய நகைகளை அணிந்து தனிமையில் சென்று, எந்தவிதமான பாதிப்பும் இன்றி வீடு திரும்புகிறாளோ அன்று தான் இந்தியாவிற்கு உண்மையான சுதந்திரம் கிடைக்கும் எனக் காந்தி கூறியது இங்கு நினைவுகூறத்தக்கது.

**பெண் சிசுகொலை**

சமூகத்தில் நடக்கும் அநீதிகளுள் முக்கிய இடம் வசிப்பது சிசுக்கொலையாகும். ஆண் பிள்ளை என்றால் அரவணைக்கும் சமூகம் பெண் பிள்ளைகளை ஏனோ? பேணி வளர்க்கத் தவறுகிறது.

சமூகம் அதற்குச் சொல்லும் காரணம். பெண் பிள்ளைகள் என்றால் பிறப்பு முதல் இறப்பு வரை அதற்கு செலவு செய்ய வேண்டியிருக்கும். பூப்புநிலை அடைந்தால் செலவு, பின்னர்

மணாளனைக் கைப்பிடிக்கும் நேரத்தில் அதிகமான வரதட்சணை போன்றவற்றை மனதில் கொண்டு பெண் குழந்தைகளை கள்ளிப்பால் ஊற்றி கொள்ளும் வழக்கமும், நெல்லை வாயில் போட்டு கொள்ளும் பழக்கமும் இருந்து வருகிறது.

"பரமன் வீட்டு பசுமாடு
பொட்டக்கன்னு போட்டிருக்கா
இந்தா, சீம்பாலு
அவன் பொண்டாட்டிக்கு
பொட்டப்புள்ள பொறந்திருக்கா
எடு கள்ளிப்பாலு"[109]

மாட்டினது கன்றை ஒத்துக் கொள்ளும் சமூகம், பெண் பிள்ளையை ஏற்றுக் கொள்ள மறுக்கும் நிலையை மிகவும் அழகான பாடுபொருளால் புனைந்திருப்பது ஆராயத்தக்கதாகும்.

**காதல்**

காதல் என்பது (இனக்கவர்ச்சி அடிப்படையில்) ஆண் பெண் இருவரிடையே ஏற்படும் அன்பு, நேயம்.[109]

ஆண் பெண் இருவரிடையே ஏற்படும் கண்களின் ஈர்ப்பு சக்தியே காதலாகும். இது எல்லா ஆணிடத்தும் எல்லாப் பெண்ணிடத்தும் வருவதில்லை. ஏதாவதொரு குறிப்பிட்ட தன் மனதுக்கு ஒத்த ஒரு ஆணைக் கண்டால் அப்பெண்ணிடத்தும், அத்தன்மையுள்ள ஒரு பெண்ணைக் கண்டால் ஆணிடத்தும் வருவதாகும்.

அனைத்து உயிர்களுக்கும் இன்பம் என்பது பொதுவானது. இது ஒருவனுக்கு ஒருத்தி என்னும் கற்பு சார்ந்த இன்பமாக இருக்க வேண்டுமென தொல்காப்பியர் கூறியுள்ளார்.

அன்று முதல் இன்று வரை காதல் இலக்கியங்களில் போற்றப்பட்டு வருகிறது. சங்க இலக்கியத்தை எடுத்துக் கொண்டால் அகப்பாடல்களே அதிகம் காணப்படுகின்றன. குறுந்தொகைப் பாடல் ஒன்றில் தலைவன் தலைவியின் காதல் நெஞ்சங்களை அறியலாம்.

"யாயும் ஞாயும் யாரா கியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயர்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"[111]

என் தாயும் உன் தாயும் எம்முறையில் உறவினர்? என் தந்தையும் உன் தந்தையும் எம்முறையில் சொந்தபந்தம்? நீயும் நானும் முன்பு ஒருவரை ஒருவர் அறிந்திருந்தோமா? சிவந்த நிலத்தில் பெய்த மழைநீர் அந்நிலத்தில் நன்றாகக் கலந்து அந்நிலத்தின் நிறத்தைப் பெற்றதைப் போல, எந்தவித முன்பழக்கமும் இல்லாத நாம் ஒன்றாகப் பழகி காதல் கொண்டோமே என தலைவன் தலைவியிடம் கூறும் கூற்றாக அமைந்துள்ளது. சங்க இலக்கியம் தொட்டே காதல் முக்கிய இடம் வகித்து வருகிறது என்பதை அறியலாம்.

**புதுக்கவிதையில் காதல்**

புதுக்கவிதைகளில் 'காதல்' எம்முறையில் கவிஞர்களால் கையாளப்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

"நான்கு கண்களின்
இழையோட்டத்தில்
சேர்த்து நெய்த
சித்திரச் சோலை"[112]

காதல் என்பது நான்கு கண்களும் இணைவது மட்டுமல்ல, அதனுடன் இருவரின் மனமும் இணைய வேண்டும்.

"இலக்கியத்தில் இல்லாததை
இவளிடம் கண்டேன்
மொழியால் பேசுவதைவிட
விழியால் பேசிய விதம்"[113]

இலக்கியங்களில் பெண்களைப் பற்றிய வருணணை ஆதிமுதல் அந்தம் வரை இடம் பெற்றிருக்கும். காதலியின் விழி ஒரே ஒரு பார்வையிலேயே காதலனுக்கு ஆயிரம் அர்த்தங்களை கற்பிக்கின்றன. தன் காதலின் கடைக்கண் பார்வை பட்டாலே உயர்ந்த மலை போன்ற காரியமும் ஒரு கடுகளவாகிவிடும் என்றார் பாரதிதாசன்.

**காதலுக்கு எதிர்ப்பு**

பண்டைக் காலம் முதல் இன்றைய காலம் வரை காதலுக்கு எதிர்ப்பு இருந்து கொண்டு தான் இருக்கிறது. சங்க இலக்கியங்களில் 'உடன்போக்கு' இருந்தமையை அறியலாம். தலைவன் வீட்டாரும்

தலைவி வீட்டாரும் காதலுக்கு எதிர்ப்பு தெரிவிப்பதால் இருவரும் உடன்போக்கு மேற்கொள்கின்றனர். இன்று இம்முறை 'கூட்டிப்போதல்' என்றழைக்கப்படுகிறது.

எதிர்ப்பு என்பது பல விதங்களில் அமையலாம். அவை சாதிமுறை, தகுதி, இணையான கல்வியின்மை, வேலையின்மை, தவறான பழக்க வழக்கம் போன்ற நிலையைக் காரணம் காட்டி எதிர்ப்பைத் தெரிவிக்கின்றனர்.

> "கண்கள் காதலின்
> கட்டிலென்றால்
> சாதி காதலின்
> சமாதி யாகும்"[114]

நான்கு கண்களும் கட்டிய வீட்டை சாதி என்னும் அமைப்பைக் காட்டி சமாதியாக்கிவிட்ட நிலையை கவிஞர் ஏக்கமுடன் எடுத்துரைக்கிறார்.

காதலின் எதிர்ப்பைத் தாங்க முடியாத காதலி காதலனின் கடிதங்களை எரிக்கிறாள். காதலன்,

> "நீ
> எரிக்க வேண்டியது
> என்னுடைய கடிதங்களை
> அல்ல
> நம்முடைய சாஸ்திரங்களை!"[115]

காலங்காலமாகப் பின்பற்றப்படும் சாத்திரமுறைகளைத் தான் எரிக்க வேண்டுமென காதலின் விரத்தியில் கூறுகிறார்.

**காதலின் சிறப்பு**

'காதல்' உலகம் உள்ளளவும் நிலை பெற்று இருப்பது. அதற்கு அழிவு என்பதே கிடையாது. காதலனுக்கும், காதலிக்கும் மரணமுண்டு, காதலுக்கு மரணமில்லை.

"காதலர்களுக்கு மரணமுண்டு
காதலுக்கு மரணமில்லை
காதலை அழிப்பதற்கு
காலன் பிறக்கவில்லை"[116]

மனிதர்களுக்கு பிறப்புமுண்டு இறப்புமுண்டு. ஆனால் காதல் புதிது புதிதாகப் பிறக்குமே தவிர இறப்பதில்லை. எனக்கு காதலை சிறந்த பாடுபொருளாக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**காதல் சின்னம்**

காதலர்கள் தம் நினைவாக உருவாக்கிக் கொண்ட அடையாள முத்திரையே காதல் சின்னம். இவை உலகம் முழுவதும் காதலர்களால் போற்றிப் பாதுகாக்கப்படுகின்றன. அம்பிகாபதி அமராவதி, ரோமியோ ஜூலியட், லைலா மஜ்னு எனக் காதலுக்காகவே வாழ்ந்து மறைந்த உயிர்களுக்கு மண்டபம் இருப்பதைக் குறிப்பிடுகிறார்.

"ஆசையின் மடியில்
ஷாஜகான் கொட்டி
அள்ளி இறைத்த
வெள்ளிக் காசு"[117]

எனத் தாஜ்மகாலைக் குறிப்பிடுகிறார். காதலர்கள் இறந்து

விட்டார்கள்; காதல் சாகவில்லை இன்னும் வாழ்கிறது என்பதை இக்கல்லறைச் சான்றைக் கொண்டு புலப்படுத்துகிறார்கள்.

**இயற்கை**

இயற்கை என்பது (மனிதனால் உண்டாக்கப்படாமல்) தானாகவே காணப்படும் மலை, நீர் மழை, காற்று, இடி போன்றவற்றைக் குறிக்கும்.

மனித குலத்தின் பயனுக்காக இயற்கையில் பரந்து கிடக்கும் மூலப்பொருள்கள், வன விலங்குகள், மற்றைய கனிமப் பொருள்கள், காடுகள், நீர்வளம், மீன்வளம், பறவை ஆகிய அனைத்தும் இயற்கை வளங்கள் ஆகும்.[118]

உயிருக்கு உரமூட்டிக் கொண்டிருக்கிற மண்ணை மாசுபடுத்தினால் மனித உயிர் வகைகளும் உரமின்றி உயிரை விட்டுவிடும். வானத்தின் மாசுபாடு அண்டத்தையே கேள்விக்குறியாக்கிவிடும். இயற்கை அமுதம் போன்றது. இந்த அமுதத்தை முறைப்படிப் பருகினால், மனித வாழ்க்கை நலமாக நீடிக்கும். இயற்கை உள்ளளவும் மனித குலமும் இருக்கும். இயற்கை அமுதத்தில் இன்று மனிதன் விஷம் கலந்து வருகிறான். இந்த விஷக்கலப்பை விஞ்ஞானம் என்று விற்பன்னர்கள் விதந்தோதிக் கொண்டிருக்கிறார்கள். எனவே விஞ்ஞானத்தை ஒரு கட்டுக்குள் வைத்தால் இயற்கையை அழிவிலிருந்து காப்பாற்ற முடியும்[119] என இயற்கைப் பொருள அனைத்துமே பாடுபொருளுக்கு உரியவை.

**மின்னல்**

இயற்கைப் படைப்பில் ஒன்று மின்னல். மேகங்கள் ஒன்றுடன் மோதும்போது ஏற்படக்கூடிய ஒலியே மின்னல். இது மனிதனுக்கு பெரும் துன்பத்தை விளைவிக்கக்கூடியது.

"மின்னல்
ஆகாயத்தில்
யார்
ஆட்டோ கிராஃப்
வாங்குகிறார்?[120]

இயற்கையாக நடைபெறும் நிகழ்வைக் கவிஞர் மிகச்சிறப்பான பாடுபொருளாக்கியுள்ள தன்மை குறிப்பிடத்தக்கதாகும்.

**மழை**

இயற்கை மக்களுக்கு அளிக்கும் மிகப்பெரிய கொடை மழையாகும். மனித உயிர் வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாதது மழை. தேவைக்கு அதிகமாகிவிட்டால் மக்களுக்கு துன்பத்தை விளைவிக்கும்.

"வைகாசி மாதம் மதிகுறைந்த நாலாம்நாள்
பெய்யுமே ஆயின் பெருமழையாம் பெய்யாட்டால்
ஏரிகுளம் எழில் கிணறும் நீர்வற்றும்
பாரில் மழை இல்லை பார்."[121]

அந்தப் பருவத்தில் மழை பொழிந்தால் ஏரி, குளம், கிணறு போன்ற நீர்நிலைகளில் நீர் நிறையும். மழை பெய்யாது பொய்த்துவிட்டால் நீரோடையின் அழகே குறைந்து வற்றிவிடும்.

"ஒரே நேரத்தில்

எல்லா வீட்டுக்குள்ளும் நுழைந்த

அதிசயத் திருடன் மழை."[122]

ஒரே நேரத்தில் எல்லா வீட்டினுள்ளும் நுழைந்துவிடுவான் என்று மழையின் பெருக்கைப் பாடுகிறது ஒரு கவிதை.

**வானவில்**

மழைக் காலத்தில் வானில் தெரியும் வர்ணகோலம்.

"வானம்

விரிந்த

மயில்தோகை

உலகம்

நெய்திடாத

ஆடை"[123]

வானில் வில் போன்ற தோற்றத்தில் வர்ணஜாலம் இருப்பதால் வானவில் என்பர். இதனை மயிலுக்கு உவமைப்படுத்தி பாடுபொருளாக்கியுள்ளமை குறிப்பிடத்தகுந்ததாகும்.

**மரம்**

மரம் உலகமக்களை செழுமையுடன் வாழவைப்பது, மழை மனிதனின் உயிர் வாழ்க்கைக்கு உயிர்நாடியாக விளங்குகிறது. இதனை மையமாகக் கொண்டு இந்தியாவில் எண்ணற்ற குடும்பங்கள் வாழ்கின்றன. அதனால் தான் தமிழக அரசு வீட்டுக்கொரு மரம் வளர்ப்போம் என்கிறது.

"நாங்கள்
சூடு படுகின்ற
சொந்தக்காரர்களுக்காக
விரித்தே வைத்திருக்கும்
வெண்கொற்றக் குடைகள்!"[124]

நல்லவர் தீயவர் என்ற பாகுபாடு இல்லாமல் அனைவருக்கும் நிழல் கொடுக்கும் வள்ளல் தன்மை கொண்டது.

**கடல்**

நிலப்பரப்பில் பரந்து விரிந்ததோர் எல்லையைக் கொண்டது கடல். எண்ணற்ற உயிரினங்களின் தாயகம். பல குடும்பங்கள் பசியின்றி வாழ வழிவகுக்கும். இயற்கை தந்த கொடைகளுள் வருணிக்க முடியாத வரப்பிரசாதமாக விளங்குவது. உலக உயிர்களுக்குத் தாய் போன்றது. அன்பும் இருக்கும். கோபமும் இருக்கும்.

"நீந்தத் தெரிந்தோர்
நிறைய ரசிக்கலாம்
அழகிய பாறைகள்"[125]

கடலுக்குள் பல்வேறு வகையான இயற்கை வளங்களும், உயிரினங்களும் இருக்கின்றன. கடலுக்குள் சென்று மீண்டுவரும் நம்பிக்கை இருந்தால் அனைத்தையும் ரசித்து இன்புறலாம்.

**அருவி**

அருவியின் தோற்றம் எங்கு என்பதே தெரியாது. மேலே இருந்து கீழேவிழும் அழகைப் பார்க்க கண்கள் கோடி வேண்டும்.

இதன் நீர் மருத்துவ குணம் கொண்டது. பிணி தீர்க்கும் தன்மை அருவி நீருக்கு உள்ளது.

"தனிமையாக மேலிருந்து
தாவி விழுகுது அது
இனிமையாகப் பாட்டுப்பாடி
இறங்கி வருகுது"[126]

என அருவி விழும் அழகை பாடுபொருளாக்கி தான் கண்டு ரசித்த இயற்கை அழகை பிறரும் ரசிக்க கவிதை வரிகளாகத் தீட்டியுள்ளார்.

**சூரியன்**

சூரியன் சுட்டெரிக்கும் தன்மை கொண்டது. இதனை வானில் தோன்றும் நெருப்புப் பிழம்பு என அழைப்பர். கிழக்கில் தோன்றுவதும் மேற்கில் மறைவதும் இதன் அன்றாடப் பணியாகும்.

"ஒளிவலை பின்னும்
நெருப்புச் சிலந்தி
சுடர் விளைகின்ற
சூரிய நிலம்
சூடு ததும்பும்
சூரியப் பொய்கை
காலமுணர்த்தும்
கடிகாரப்பாட்டன்
பனித்துளி பருகும்
பகலவப் பறவை"[127]

என அதன் தோற்றம் பற்றியும், அது தோன்றிய பிறகு பூமியில் நிகழும்

மாற்றம் பற்றியும் கூறியுள்ளார். இயற்கையின் அழகுணர்வுகளை எல்லாம் கண்டுணர்ந்து பாடியுள்ள திறம் போற்றுதற்குரியதாகும்.

**தத்துவம்**

தத்துவம் என்னும் சொல் 'ஒன்றின் மெய்த்தன்மை' என்னும் பொருளைத் தரும் 'அது' என்னும் சுட்டுச் சொல் சமயந்தோறும் வேறு வேறு பொருளைக் குறிக்கும். ஆகவே தத்துவம் என்னும் குறியீடு பொருள்களின் தன்மையை ஆராய்ந்து மெய்மையினை நிலைநாட்டும் அறிவுக் கலையைக் குறிக்கும். இச்சொல்லுக்கு இணையாக மெய்ப்பொருள், சமயக் கணக்கு என்ற குறியீடுகள் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன என வாழ்வியற் களஞ்சியம் பொருள் குறிக்கின்றது.[128]

தத்துவம் என்னும் சொல்லுக்கு உண்மைப் பொருள் என்பது கருத்து. உண்மைப் பொருளிலிருந்து உண்டாகும் காரியங்களிலும் உண்மைப் பொருள் வியாமித்து நிற்பதால் அக்காரியங்களையும் தத்துவம் என்று அழைக்கிறார்கள்[129] என்று தத்துவம் பற்றிய பல்வேறு இலக்கியங்களின் கருத்துக்களைக் கண்டோம்.

**வாழ்க்கைத் தத்துவம்**

வாழ்க்கைக்கு அடிப்படையான ஒழுக்க நெறிகளே தத்துவம். இவை காலங்காலமாகப் போற்றப்படும் தன்மை கொண்டது. இது எந்த சாஸ்திரத்திலும் எழுதி வைக்கப்பட்டதல்ல. வாழ்க்கையை அனுபவப் பூர்வமாக வாழ்ந்து அறிந்த அறிஞர்களின் உண்மை நிலையே தத்துவம்.

"இளமை ஒருவனை

ஒருவனுக்கு விருந்தாக்குகிறது

முதுமை ஒருவரை

ஒருவருக்கு மருந்தாக்குகிறது

இளமை நினைத்ததை

நடத்தும்

முதுமை நடந்ததை

நினைக்கும்"[130]

இளமையில் வீண் காரியங்களில் ஈடுபடாமல் ஒருவருக்கு உதவியாக இருக்க வேண்டும். முதுமையில் தான் வாழ்ந்த அனுபவத்தோடு கூடிய வாழ்வை, பிறர் சிறப்புற வாழ எடுத்துக்கூற வேண்டும்.

"விலங்குகளைப் பார்த்து

அதை இதை

கற்றுக் கொண்டது

மனிதனின் வெற்றி!

மனிதனைப் பார்த்து

எதையும்

கற்றுக் கொள்ளாதே

விலங்குகளின்

வெற்றி."[131]

நாம் வாழ்க்கையில் வெற்றியடைய தேவையான நல்ல விசயங்களை மனிதனிடம் இருந்து தான் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதல்ல. யாரிடமிருந்தும் கற்றுக் கொள்ளலாம். விலங்குகளிடமிருந்தும் கற்றுக் கொள்ளலாம். கூடிவாழும் பழக்கம் காக்கையிடம்

இருப்பதை அறியலாம். இது போன்று நல்ல விசயங்கள் விலங்குகளிடமும் இருக்கின்றன என்பதை சிறப்பான பாடுபொருளாக்கியுள்ளார்.

**அறிவியல்**

அறிவியல் என்பது மனிதனின் ஆக்க சக்தியால் விளைந்ததாகும். ஒவ்வொரு துறையிலும் விஞ்ஞானிகள் பல்வேறு சாதனைகள் நிகழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். அறிவின் வளர்ச்சிப்படிநிலையே அறிவியலாகும். மனிதனின் பல்வேறு கண்டுபிடிப்புக்களின் நிலையிலே தான் மனித வளர்ச்சியும் நடைபெறுகின்றது.

நம் முன்னோர் வானத்தைப் பார்த்தே இயற்கைச் சீற்றங்களையும் அவற்றின் அளவுகளையும் கண்டறிந்தனர். இதனைப் பாரதியார்,

> "உம்பர் வானத்துக் கோளையும் மீனையும்
> ஓர்ந்தளந்ததோர் பாஸ்கரன் மாட்சியும்...
> தேர்கிலர்"[132]

என குறிப்பிடுகிறார். அறிவியலின் வளர்ச்சி வரவேற்கப்பட வேண்டியவை என்றாலும், அது தீய வழியில் பயன்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இன்று விண்வெளிப் பயணம் பக்கத்து ஊருக்குச் செல்வது போன்று எளிதாகிவிட்டது. இலக்கியங்களில் வானூர்தி, மயிற்பொறி, புஷ்பக விமானம் போன்றவை இடம் பெற்றுள்ளன என்பது அறியமுடிகிறது.

சீவக மன்னன் தன் மனைவி விசையையை மயிற்பொறியில் அனுப்பி வைத்தார் என்றும், இராவணன் சீதாதேவியை புஷ்பக விமானத்தில் தூக்கிச் சென்றான் என்பதையும் காப்பியங்கள் மூலம் அறியலாம். திருவாசகத்தில் மாணிக்கவாசகர் புல்லாய், பூடாய் என ஒவ்வொரு பொருளும் பிறப்பெடுப்பதைப் பற்றிக் கூறியுள்ளார். இதுபோலவே டார்வினின் உயிரியல் கோட்பாடு முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

"அமீபா செல்லிலிருந்து
குரங்காய்
பரிணாமம் எய்தி
இன்று மனித அவதாரம்
எடுத்ததாய்
அப்ரூவர் ஆன
டார்வின் சாட்சியம்"[133]

அமீபா என்னும் வடிவமற்ற ஒரு உயிரியிலிருந்து மனிதன் என்று ஆறறிவு கொண்ட உயிர் உருவாயின்று, அறிவியலில் அணு முக்கியமான ஒன்றாகும் இது ஆக்கவும் அழிக்கவும் பயன்படுகிறது என்னும் அறிவியளல் வளர்ச்சி நிலையை அறியமுடிகிறது.

**அகப்போராட்டம்**

வில்லியம் ஜேம்ஸ் 1890ல் உளவியல் முறையில் ஆளுமை (personality) பற்றி விளக்கம் செய்ய வழிகோலினார். புலனுடன் தொடர்புடைய அகம் என்பதில் மனிதனுடையது என்று கூறப்படும் அனைத்தும், அதாவது அவனுடைய உடலும் உள்ளத்தின் சக்திகளும்

மட்டுமன்றி அவனுடைய உடை, உறையுள் போன்றவையுங்கூட அடங்கும் என்று கூறுகின்றார்.[134]

ஒரே சமயத்தில் ஒன்றுக்கொன்று முரணான தேவைகள் (Needs) ஆசைகள் (Desires) உள்துடிப்புகள் (Impulses) ஆகியன ஒன்றேடொன்று மோதுவதால் உளப்போராட்டங்கள் (Mental Conflicts) உண்டாகின்றன. இவை ஒவ்வொரு மனிதனிடமும் அவனுக்கு உள்ளே நடைபெறும் போராட்டங்களாகும்.[135]

மனம் பொருள் தன்மை (Immaterial) அற்றது. அது செயல் தன்மை (Functional) உடையது. மூளையின் உதவியால் சிந்திக்க முடிகிறது. சிந்தனையில் உருவான எண்ணங்கள் ஒன்று சேர்ந்து மனமாகின்றன. எண்ணங்களைத் தவிர, கவனம், உணர்ச்சி மனவெழுச்சிகள், மறதி, நினைவாற்றல், நுண்ணறிவு, கற்பனை போன்ற வேறு விதமாகவும் மனச் செயல்கள் வெளிப்படுகின்றன.[136]

மனிதனின் மனதுக்கள் நடக்கும் போராட்டம் அது. எதைப்பற்றி வேண்டுமானாலும் இருக்கலாம் குடும்பம் சம்பந்தமாகவும், வெளியுலகு சம்பந்தமாகவும் இருக்கலாம். தன் மனதில் போட்டு புழுங்கிக் கொண்டே இருக்கும் நிலை. சிலவற்றை பிறரிடம் கூறி அதில் இருந்து விடுபட்டுக் கொள்ளலாம். சிலவற்றை யாரிடமும் கூறமுடியாத நிலையில் இருக்கும். அதனால் ஒரு முடிவுக்கு வரமுடியாமல் மனமுறிவு எற்படுகிறது. போராட்டத்திற்கு தீர்வு கிடைத்துவிட்டால் மனம் அதிலிருந்து விடுபடுகிறது.

"உழுது உழுது
அலுத்துப் போன

புத்தகப் புழுக்களின்
பிஞ்சு இதயங்கள்
இனி
எங்கே போகிறோம்
என்ற
விடிவுபெறாத
வினாக்களால்
கனத்துக் கொண்டிருந்தன"[137]

எந்தவிதமான துன்பமும் இல்லாமல் சிறகடித்துப் பறக்கும் பருவம் மாணவப்பருவம். புத்தகம் தான் உலகம் எனப் புத்தகத்தையே சுற்றி வந்த இதயங்கள் படித்து முடித்த பிறகு வெளியில் போய் இச்சமுதாயத்தில் ஒரு அங்கம் பிடித்து எப்படி வாழப் போகிறோம். நல்ல வேலை கிடைக்க வேண்டும். வீட்டில் உள்ளவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற நினைப்பில் செய்வதறியாது திகைக்கும் மனம்.

"உலையில் அரிசிதான்
பொங்க வேண்டுமாம்
ஊரில் எவரும்
பொங்கக் கூடாதாம்"[138]

தான் வாழும் ஊரில் கடக்கும் அநீதிகளைத் தட்டிக்கேற்க முடியவில்லை. போராட்டம் நடத்தலாம் என்றால் முடியவில்லை. இதற்கு வழி என்ன என்று தெரியாமல் மனம் தவிக்கிறது. தன் மனம் முடிவுக்கு வராத நிலையை நினைத்து வருந்துகிறான். பிறரிடம் சொல்லலாம் என்றால் மனமில்லை. அதனால் தான் உலையில்

இருக்கும் அரிசி மட்டும் தான் பொங்க வேண்டுமா? ஏன் நான் பொங்கி எழக்கூடாதா? என ஒருவனின் அகப்போராட்டத்தைப் பாடுபொருளாக்கியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

**தகவல் ஊடகங்கள்**

இன்றைய கால கட்டத்தில் தகவல் ஊடகங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன. சமுதாயத்தில் பல சோதனைகளையும் சாதனைகளையும எதிர்க் கொள்ளும் போது தகவல் சாதனங்கள் தான் அன்றைய நிழ்வுகளை எடுத்துரைக்கும் கண்ணடியாக விளங்குகின்றன. இவை மட்டுமல்லாமல் கலை இலக்கியம், பண்பாடு போன்றவற்றின் வளர்ச்சிக்கும் தகவல் சாதனங்கள் தம் பங்களிப்பை வழங்கி வருகின்றன.

பத்திரிகை, வானொலி போன்ற ஊடகங்கள் அற்றைச் செய்திகளை இல்லங்களுக்கு கொண்டு வருவதன் மூலம், இலக்கிய வளர்ச்சிக்கு தொண்டாற்றுகின்றன. எங்கோ ஒரு மூலையில் நடக்கும் நிகழ்வுகளை தம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தும் தன்மை ஊடகத்திற்கு உண்டு.

தொலைக்காட்சி, கணினி, இணையம் போன்ற தகவல் சாதனங்கள் இளைய தலைமுறையினரை வெகுவாகக் கவர்ந்துள்ளன. இதில் கணிணி, இணையம் போன்றவை விரைவான தகவல்களைத் தருகின்றன. இவை பள்ளி, கல்லூரியில் படிக்கும் மாணவ, மாணவிகளுக்கு சிறந்த ஆசானாக விளங்குகின்றன. இவற்றைத் தவறான முறையில் பயன்படுத்தும் எதிர் விளைவுகளை ஏற்படுத்துகின்றன. இளைஞர்களிடையே சமூகச் சீர்கேட்டை

உருவாக்கவும் இந்நவீன தகவல் ஊடகங்கள் வழிவகுக்கின்றன. அவற்றை சிறந்த முறையில் நன்மை தருவதாக கையாளும் பொறுப்பு இளைஞர்களிடம் தான் இருக்கிறது.

**பத்திரிகை**

செய்திகள், கதைகள், கட்டுரைகள் போன்றவற்றைத் தொடுத்து அச்சிட்டுத் தினந்தோறும் அல்லது ஒரு குறிப்பிட்ட கால இடவெளியில் வெளியிடப்படுவது பத்திரிக்கையாகும்.

இன்றைய செய்தித்தாள்களில் செய்திகள் மட்டுமன்றி பல்வேறு பிரிவினருக்கும் பயன்படக்கூடிய பல பகுதிகள் காணப்படுகின்றன. விளையாட்டு, விளம்பரம், மாணவர் பகுதி, மகளிர் பகுதி, சிறுவர் பகுதி, நகைச்சுவை பகுதி, வேலைவாய்ப்புப் பகுதி, செய்தி, கட்டுரைகள், தலையங்கம், சுவரொட்டி, விளம்பரங்கள் போன்றவை பிரச்சாரக் கருவிகளாகவே காணப்படுகின்றன.

“பணக்கார வீட்டுப் பெண்களைப் போல
நாளுக்கொரு புடவைகட்டும்
நகரத்துச் சுவர்கள்!
அந்தச் சுவரொட்டிகளில்
கசாப்புக் கடையில் தொங்கும்
உரிக்கப்பட்ட ஆடுகளாய்
உல்லாச நடிகைகள்”[139]

டீக்கடைகளில் தொங்கும் செய்தித்தாள்களில் நடிகைகளின் ஆபாசப் படங்கள் தொங்கவிடப்பட்டிருப்பதை சுட்டிக் காட்டியுள்ளார்.

போற்றிப் பாதுகாக்க வேண்டியதை வெளிச்சம் போட்டுகாட்டும் தன்மையை உரிச்சகோழி எனப் பாடுபொருளாகப் புனைந்துள்ளார்.

**திரைப்படங்கள்**

அறிவியலின் வியத்தகு ஆற்றலின் ஒன்று திரைப்படக்கலை. மனிதன் அழகியல் உணர்வுக்கு விருந்தாக இதனைக் கண்டு பிடித்தான்.

எழுபத்தைந்து ஆண்டுகளாகத் திரைப்படத்துறையில் படங்கள் மட்டுமின்றி கலைகளும் வளர்ந்துள்ளன.

கதைகள், புராணங்கள், வழிவழியாகச் சொல்லப்பட்டு வந்த இராசாராணிக் கற்பனைக் கதைகள் போன்றவையே 1947 ஆம் ஆண்டு வரை தமிழ்த் திரைப்படங்களாக வெளிவந்தன. அவற்றில் பல மேடையில் நாடகங்களாக நடிக்கப்பட்டு வந்த கதைகளாகவும் இருந்தன. முதன்முதலாக 1935 ஆம் ஆண்டில் கற்பனைக் கதைகள் திரைப்படங்களாகத் தயாரிக்கப்பட்டன.[140]

நாட்டு விடுதலைக்குப் பின்னர் திரைப்படத் துறையில் ஏற்பட்ட மாற்றம் அதிர்ச்சி தரத்தக்கது. இந்திய சினிமாவில் ‘பகட்டு’ நுழைந்த பின்னர் இந்தத் துறையானது “கட்டண வசூல் இலாபப் பொருளாதாரத்தையே” அடிப்படையாகக் கொண்டது என்ற அழுத்தம் கொடுக்கப்பட்டுவிட்டது.[140]

தமிழ் திரைப்படத்துறை காலூன்றிக் கொண்டதையும் அது மக்களிடம் பெற்றுள்ள மாபெரும் செல்வாக்கையும் கண்ட பின்னர்

இலக்கியம், பத்திரிகை, அரசியல், அரசுப்பணி போன்ற பல்வேறு துறைகளில் பங்கேற்றிருந்தோர் திரைப்படத்துறைக்கு வந்தனர்.[141]

அன்றையத் திரைப்படங்கள் கருத்துக்கள் நிறைந்தும் கண்ணுக்கு விருந்தாகவும் இருந்தன. குடும்பத்துடன் கண்டு ரசிப்பனவாகவும், புராணக் கதைகளையும் திரைப்படமாக்கினர். இன்று திரைப்படங்களில் ஆபாசக் காட்சிகள் குடும்பத்துடன் இருந்து மகிழத்தக்கதாகவும் இல்லாத நிலை, புகைபிடித்தல், குடிப்பழக்கம் போன்றவை இல்லாத திரைப்படங்களே இல்லை என்று சொல்லுமளவுக்கு பல்கிப் பெருகியுள்ளன. பொழுதுபோக்கை மையமாகக் கொண்டே இன்றைய திரைப்படங்கள் இருக்கின்றன. அன்றைய திரைப்படத்தில் கதை இருந்தது; பின் உதை இருந்தது; தற்போது சதை மட்டுமே உள்ளது என்ற நிலையில் இருக்கிறது.

"நாங்கள் கூத்தாடிகள்
ஆம்
நாங்கள் கூத்தாடிகள்
கூத்தடிப்பதற்காய் வந்த
கூத்தாடிகள் அல்ல...
கூத்தடிப்பவர்கள் குலுங்கச்
செய்ய வந்த கூத்தாடிகள்"[143]

நடிகர் நடிகைகள் தங்களைக் கூத்தாடிகள் எனக் கூறிக் கொள்கின்றனர். பிறரை மகிழ்விப்பதற்காகத் தான். நாங்கள் இத்தகைய தொழிலைச் செய்கின்றோம் என திரைப்படத்துறையை புதுக்கவிதையின் பாடுபொருளாக்கியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

**கணிப்பொறி**

அறிவியலின் அசுரவேக வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாக கணிப்பொறியைக் குறிப்பிடலாம். இன்று எல்லாத் துறைகளிலும் கணிணி சிறப்பான வளர்ச்சியைப் பெற்றுள்ளது. மனிதன் செய்ய வேண்டிய செயல்கள் அனைத்தையும் கணிப்பொறியே செய்து முடிக்கின்றது. கணிப்பொறி இல்லாத துறையே இல்லை. என்னுமளவுக்கு மனிதனின் வேலையை எளிமையாக்கிவிட்டது. நேரமும் குறைந்த அளவே எடுத்துக் கொள்கிறது. ஆதலால் மனிதத் தேவைகள் குறைந்து எந்திரத் தேவைகள் அதிகமாகிவிட்டன.

அனைத்துவித தகவல்களையும் கணினி மூலம் பெறலாம். மாணவர்களுக்குச் சிறந்த ஆசிரியராகவும் விளங்குகிறது. உலகச் செய்திகள் அனைத்தையும் கண்முன் நிறுத்தும் எந்திரம் கணிணியாகும்.

"இயந்திரம் இன்று
மனிதனின் உழைப்பையும்
மனிதனின் மூளையையும்
வேலை செய்யவிடாமல்
சூதாகச் சூறையாடுகிறது."[144]

என கணினி மனிதனின் உழைப்பைச் சூறையாடுகிறது. கணினியே அனைத்து வேலைகளையும் செய்து வருவதால் மனிதன் அந்த வேலையைச் செய்தால் தவறு ஏற்பட வாய்ப்புள்ளது. ஆதலால் தான்,

"அனுப்பி வைத்தால்

கோளாறு நடக்கலாம்

அந்த

அலுவலகத்தை

எந்திரங்களே நிர்வாகம் செய்யட்டும்"[145]

என மனிதனைவிட எந்திரங்களையே வேலை செய்ய அனுமதிக்கின்றனர். மனிதன் கவனக் குறைவால் வேலையில் பிழை ஏற்படுத்தலாம். ஆனால் எந்திரத்தில் அந்தப் பயம் கிடையாது. ஆதலால் தான் அலுவலகத்தை எந்திரங்களே நிர்வாகம் செய்யட்டும் எனக் குறிப்பிட்டுள்ளார். தகவல் ஊடகங்களில் இவற்றின் பங்களிப்பால் மனிதனின் தேவை குறைந்துள்ளதை அறியமுடிகிறது.

**அனைத்துலகப் பார்வை**

ஒரு கவிஞனுக்கும் சாதாரண மனிதனுக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. மனிதன் தன் மனைவி, குடும்பம், வீடு என குறுகிய வட்டத்துக்குள்ளேயே அவன் பார்வை செல்லும். ஆனால் கவிஞனின் பார்வை 'அனைத்துலகப் பார்வை' உலகையே உற்று நோக்கும் தன்மை கொண்டஃது.

பல்வேறு தலைவர்களின் சிறப்புகளையும் பாடுபொருளாக்கி உள்ளனர். பெரியாரைப் பகுத்தறிவுப் பகலவன் எனவும்,

"அறியாமையை அகற்றியவர்

மானுடத்தை உயர்த்தியவர்

சடங்குகளைச் சாடியவர்

சரித்திரத்தில் இடம் பிடித்தவர்

அவர்தான் பெரியார்"[145]

எனப் பெரியாரின் சிறப்புகளைப் பாடுபொருளாக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**ஒற்றுமை**

ஒற்றுமை மனித வாழ்வில் முக்கியமானதாகும். ஒற்றுமையாய் இருந்தால் உலகை நம் கைவசம் கொள்ளலாம். ஆதலால் தான் நம் முன்னோர் 'கூடி வாழக் கத்துக்கணும்' என்றனர். ஒற்றுமையாக, கூட்டமாக வாழ்ந்தால் நம்மை எதிரிகள் நெருங்கமாட்டார்கள்.

"எத்தனை உயரமாய்

எழுந்தாலும்

அலைகள்

அடங்கிப் போவது

கரைகளின் ஒற்றுமையைக்

கண்ட பிறகுதான்"[146]

அனைவரும் கூடி ஒற்றுமையாக இருந்தால் எவ்வளவு பெரிய காரியத்தையும் சாதித்துவிடலாம். ஒற்றுமைக்கு இமயத்தையும் புரட்டும் நெம்புகோல் உள்ளது. 'ஒற்றுமையே பலம்' என்பதைப் பாடுபொருளாக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

**தேசப்பற்று**

இந்திய மண்ணில் பிறந்த ஒவ்வொருவருக்கும் தம் நாட்டுப்பற்று இருக்க வேண்டியது அவசியமான ஒன்றாகும்.

நாட்டுப்பற்று இல்லாதவன் தாய், தந்தை பாசம் இல்லாதவனாகக் கருதப்படுகிறான். பற்று இருப்பதால் தான் இராணுவ வீரர்கள் எல்லைப் பாதுகாப்பு பணியில் தம் உயிர் இழக்கின்றனர். அன்றைய தாய் தன் மகனைப் போருக்குப் போய் வா! என வாள் கொடுத்து அனுப்பி வைத்தமையைக் காண்கிறோம்.

"நாம் பிறந்த மண்ணின் மீட்பிற்கு
மரணமே விலையானால்
வாழ்வின் ஆரம்பம்
எமக்கு அதுவே"[148]

நாட்டிற்காகத் தன் உயிரையும் தரும் இளைஞன், தீய சக்திகள் மண்ணில் புகாமல் தீங்கிலிருந்து நாட்டைக் காப்பாற்றத் துடிக்கிறான்.

இந்தியராய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் நாட்டுப்பற்றுத் தன் இரத்தத்தில் ஊறி இருக்க வேண்டும். தான் பிறந்த கிராமத்தை நேசித்து அதன் இயற்கையழகில் திளைத்த சிற்பி, தன் நாட்டையும் தன் உயிர் போல் போற்றியதால் தனது முதல் நூலான 'நிலவுப்பூ' தொகுப்பில் முதல் கவிதையாகத் தன் தாய் நாட்டைப் போற்றுகிறார்.

"உரையுலவு பாவணர் உணர்வுயவு கிவியமுதம்
ஊற்றெனப் பொழிந்த நாடு
ஒளி பெருகு மதலையர்தம் களிதவமு மழலை மொழி
உள்ளத்தை ஈர்க்கும் நாடு"[149]

என நாட்டில் இல்லாத செல்வங்களே இல்லை எண்ணுமளவிற்கு மிகுந்த செல்வமுடைய நாடாகக் காட்டியுள்ளார்.

**சுதந்திரம்**

நாட்டை முன்னர் ஆங்கிலேயர் அடிமைப்படுத்தினர். இன்று ஆங்கிலேயர் இல்லை. ஆனாலும் அடிமை நிலை ஓயவில்லை, பெண்ணுரிமை மறுக்கப்படுதல், பேச்சுரிமை, எழுத்துரிமைகளில் தானே முடிவெடுக்கும் நிலை மறுக்கப்படுகிறது. ஏதோ ஒரு வகையில் அடிமைகளாய் வாழும் நிலை இருக்கிறது. நுகத்தடிக்குப் பழக்கப்பட்ட மாடுகளாய் இன்னும் மனிதர்கள் இருப்பதைச் சாடுகிறார்.

> "என் இனிய கவிஞனே!
> பகலில் வாங்கினால் மட்டும்
> பசுமையா படரும்?
> குருடன் தூங்கினால் என்ன?
> விழிந்திருந்தால் என்ன?
> எல்லாமே இருள் தானே?
> கண்தானம் செய்வர்கள் தான்
> நாட்டை இனிக் காப்பாற்ற
> வேண்டும்"[150]

இன்றுள்ள இளைஞர்கள் கண்களை குருடாக்கிக் கொண்டு இருக்கிறார்கள். அநீதிகள் நடந்தால் அவற்றைத் தட்டிக் கேட்பதில்லை. எல்லோருமே நமக்கென்ன என்று கண்டு கொள்ளாமல் இருந்தால் யார் கேட்பது. ஆகவே இனி நாடு கண்தானம் செய்பவர்கள் கையில் தான் உள்ளது. அவர்கள் தான், தன் நாட்டைக் காப்பாற்ற வேண்டும். சுதந்திரம் பெற்றால் மட்டும் போதாது. பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காக்க வேண்டும். போர்

பூமியாக மாற்றாமல் பொன் விளையும் பூமியாக மாற்ற வேண்டும் என இளைஞர்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறார் ஆசிரியர்.

**தொகுப்புரை**

★ பாடுபொருள் என்பது கவிஞன் பாடுவதற்கான காலமும் களமும் உருவாக்கிக் கொடுப்பதாகும்.

★ அன்றாடம் மனித வாழ்க்கையில் நடைபெறும் சிக்கல்களும் போராட்டங்களும் புதுக்கவிதையின் பாடுபொருளாகின்றன. சமகால நிகழ்வுகளும், அனுபவங்களும், கேட்ட நிகழ்வுகளும் பாடுபொருளாகி உள்ளன.

★ சமூகத்தில் நடைபெறும், பிரச்சினைகளும், சிக்கல்களும் புதுக்கவிதையாளர்களின் பாடுபொருளாகின்றன. மதக்கலவரம், ஏழை, பணம் படைத்தவன் என்ற பாகுபாடு, வேலையின்மை, தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை போன்றவை சமுதாயத்தில் அன்றாடப் பிரச்சினை போன்றவை தற்கால கவிஞர்களின் பாடுபொருளாக அமைந்துள்ளன.

★ அரசியல் என்பது மனித வாழ்வில் முக்கியம். அதில் ஏற்படும் பிளவுகளும், பின்னடைவுகளும், முக்கிய பங்கு வகிக்கின்றன. அரசியல்வாதிகள், வாக்காளர்கள், அரசியல் வாதிகளின் வாக்குறுதிகள் போன்றவற்றைப் பாடுபொருளாக்கி அரசியலின் அந்தரங்கம் பற்றியும் விளக்கியுள்ளமை அறியமுடிகிறது.

★ பொருள் தான் அனைத்து செயல்களுக்கும் மூலகாரணம். வறுமை, விலைவாசி உயர்வால் ஏற்படும் அவலம், குழந்தைத்

தொழிலாளர் நிலை போன்றவற்றைப் பாடுபொருளாகக் கையாண்டுள்ளனர்.

★ இன்று மனிதன் வாழ கல்வி அவசியம் கல்வியின் முக்கியத்துவம், மொழியுணர்வு, கல்வி கற்பிக்கும் ஆசிரியர், தேர்வுத்தாள் திருத்தும் முறை, மாணவர்களின் வேலை நிறுத்தம், அறிவுக்கு துணை நிற்கும் நூலகம் போன்றவை சிறப்பான பாடுபொருளைக் கொண்டு புனைந்து கல்வியின் முக்கியத்துவத்தை உணர்த்தியுள்ளனர்.

★ குடும்பம் என்னும் அமைப்பில் கணவன் மனைவி பெறுமிடம் பிள்ளைகளின் பங்கு, பிள்ளைகளை வளர்க்கும் தாயின் சிறப்பு, தந்தையின் கண்டிப்பு, உறவுமுறைகளில் ஏற்பட்டுள்ள நெருக்கம், விரிசல் போன்றவற்றை மையமாகக் கொண்டு சிறப்புற பாடுபொருளைப் புனைந்துள்ளனர்.

★ பெண்களுக்கு ஏற்படும் இன்னல்களான வரதட்சிணைக் கொடுமை, விலை மகளிர் பிரச்சினை, ஆணாதிக்கம், பாலியல் பிரச்சினை, பெண்ணை மோகப் பொருளாக நினைத்தல், முதிர்கன்னியர் நிலை, விதவைப் பிரச்சினை போன்றவற்றைப் பாடுபொருளாகக் கையாண்டுள்ளனர்.

★ காதலையும், காதலினால் பெற்றோர் எதிர்ப்பும், ஆதரவும், காதல் அழியாத தன்மை கொண்டது காதல் என்ற கருத்தையும் பாடுபொருளாக்கியுள்ளனர்.

★ இயற்கையின் அன்றட நிகழ்வுகளான வானவில், அருவி, மழை,

மின்னல், மரம், கடல், சூரியன் போன்றவற்றின் செயல்களைப் பாடுபொருளாக்கிப் புனைந்துள்ளனர்.

★ மனிதன் நல்வாழ்க்கை வாழ்வதற்குத் தேவையான தத்துவக் கருத்துக்களைப் பாடுபொருளாகக் கையாண்டுள்ளமை போற்றத்தக்கதாகும்.

★ அறிவியலின் ஆழ அகலங்களைக் கண்டறிந்து அவற்றால் ஏற்படும் நன்மை தீமைகளையும் புனைந்திருப்பது பாடுபொருளின் சிறப்பாகும்.

★ ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் நடக்கும் உள்ளுணர்வு பற்றிய போராட்டத்தையும் அதைத் தீர்வு காண முடியாமல் தவிக்கும் நிலையையும் பாடுபொருளாக்கியுள்ளனர்.

★ தகவல் ஊடகங்கள் இன்று நம்மை எப்படி கட்டி இழுத்து ஒரு கட்டுக்குள் வைத்துள்ளன என்பதை, இணையம், தொலைகாட்சி, பத்திரிகை, வானொலி போன்ற பாடுபொருளாக உலவவிட்டு அவற்றை விளக்கிக் கூறியுள்ளனர்.

★ கவிஞர்களின் கூர்த்த நோக்கல், உலக நிகழ்வுகள் அனைத்தையும் பாடுபெருளாக்கித் தங்கள் கவிதைகளில் புனைந்திருப்பதை இவ்வியல் விளக்குகிறது.

## சான்றெண் விளக்கம்


1.அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப,932.

2.ஆசிரியர்குழு, Tamil Lexicon,vol II, part I, ப.749.

3.அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.357.

4.சி.ஆர்.ரவீந்திரன் (தொ.ஆ), கவிஞர் கண்ணதாசன் கவிதைகள், ப.83.

5.அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.544.

6.மேலது, ப.588.

7.கொளஞ்சி, சமுதாயக் கடலில் வைரமுத்து, ப.46.

8.கொளஞ்சி, சமுதாயக் கடலில் வைரமுத்து, ப.47.

9.ஆசிரியர்குழு, வாழ்வியல் களஞ்சியம், தொகுதி 8, ப.590.

10.மேலது, ப.519.

11.நாலாயிர திவ்வியப் பிரபந்தம், திருவாய்மொழி, ப.5:2:10

12.சி.ஜேசுராஜ், புதுக்கவிதையில் புதிய மானுடச் சிந்தனைகள், ப.131.

13.வா.மு.சேதுராமன், விடுதலைச் சுவடுகள், ப.57.

14.அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.1223.

15.மாணிக்கசண்முகம், எனக்கும் சிறகுகள் முளைக்கும், ப.69.

16. சிற்பி, பாலா, (தொ.ஆ.) மு.மேத்தா கவிதைகள், ப.33.

17.ஆசிரியர் குழு, வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 8, ப.568.

18. மு.மேத்தா, ஒரு வானம் இரு சிறகு, ப.13.

19.சிற்பி, பாலா (தொ.ஆ.), மு.மேத்தா கவிதைகள், ப.40.

20.ச. இலக்குமிபதி, கல்மரம், ப.95.

21.சி.ஜேசுராஜ், புதுக்கவிதைகளில் புதிய மானுடச் சிந்தனைகள், ப.288.

22.அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.214.

23.கொளஞ்சி, சமுதாயக் கடலில் வைரமுத்து, ப.71.

24.எழிலவன், மரவடியில் போதிமரம், ப.49.

*25.இரா.மோகன், புதுக்கவிதைத்திறன், ப.140.*

*26.கவிதாசன், நாற்றாங்கால் காற்று, ப.35.*

*27.அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.681.*

*28.வ.ஜெயதேவன் (தொ.ஆ.) ஈரோடு தமிழன்பன் கவிதைகள் தொகுதி-3, ப.247.*

*29.ச.சந்திரசேகரன் (தொ.ஆ.) தலித்தியக் கவிதைகள், ப.2.*

*30. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.535.*

*31.வைரமுத்து, சிகரங்களை நோக்கி, ப.110.*

*32.அருச்சுன, தட்சிணாமூர்த்தி, தமிழ்ப் புதுக்கவிதைகளில் அரசியல் கருத்துக்களின் தாக்கம், ப.33*

*33.ஆசிரியர்குழு, கலைக்களஞ்சியம், தொகுதி 1, ப.155.*

*34. அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.688.*

*35.பாலா (தொ.ஆ.) சிற்பியின் கவிதை வானம், ப.472.*

*36.ஆசிரியர் குழு, வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 8, ப.563.*

*37.கபிலன், மழைக்கு ஒதுங்கிய கவிதைகள், ப.28.*

*38.கவிதாசன், நாற்றாங்கால் காற்று, ப.33.*

*39.சிற்பி, பாலா (தொ.ஆ.) மு.மேத்தா கவிதைகள், ப.272.*

*40.பிரதாப், சந்தங்கள், ப.197.*

*41.பாலா (தொ.ஆ.) சிற்பியின் கவிதை வானம், ப.471.*

*42.கலைக்களஞ்சியம், தொகுதி 7, ப.683.*

*43.கலைக்களஞ்சியம், தொகுதி 7, ப.683.*

*44.க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.1035.*

*45.கலைக் களஞ்சியம், தொகுதி 7, ப.683.*

*46.க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.1222.*

*47.கொளஞ்சி, புதிய குறிஞ்சி மலர், ப.48*

*48.மு.முருகேஷ், என் இனிய ஹைக்கூ, ப.64.*

*49.தமிழ்க்குடிமகன், பத்தாண்டுத் தமிழ்க கவிதைகள், ப.5.*

*50.பாலா (தொ.ஆ.) சிற்பியின் கவிதை வானம், ப.479.*

51.புவியரசன், இதற்குப் பெயர் இதுவன்று, ப.78.

52.தமிழ்நாடன், தமிழ் நாடன் கவிதைகள், ப.64.

53.எஸ்.விஜயன, வழி தொலைந்த பரிசில்கள், ப.12.

54.மு.மேத்தா, ஊர்வலம், ப.46.

55.மு.மேத்தா, கண்ணீர்பூக்கள், ப.35.

56.இரா.மோகன், புதுக்கவிதைத்திறன், ப.105.

57.க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.371.

58.பாரதியார் கவிதைகள், ப

59. சிங்கை தமிழ்ச் செல்வன் (தொ.ஆ.) கீழைநாட்டுக் கவிதை மஞ்சரி பாகம் 2, ப.187.

60.ச.இலக்குமிபதி, கல்மரம், ப.109.

61.மு.பாலசுப்பிரமணியன், வாழப்பிறந்தோம், ப.39.

62.கலைக்களஞ்சியம் தொகுதி, ப.297.

63.மேலது, ப.297.

64.பதிப்பாசிரியர் குழு, பதிணென்கீழ்க்கணக்கு (முதல் தொகுதி) ப.44.

65.கொளஞ்சி, சமுதாயக் கடலில் வைரமுத்து, ப.83.

66.கொளஞ்சி, புதிய குறிஞ்சி மலர், ப.113.

67. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.133.

68. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.1171.

69. பிரதாப், சந்தங்கள், ப.57.

70. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.23.

71.வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 2, ப.282.

72.வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 2, ப.284.

73.கொளஞ்சி, புதிய குறிஞ்சிமலர், ப.20.

74.வெ.தி.சந்திரசேகரன், முற்றுப்புள்ளி சற்றுத்தள்ளி, ப.73.

75.மு.மேத்தா, என்னுடைய போதிமரங்கள், ப.61.

76.பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள், ப.34.

77.ஆ.ஆத்மநாதன், சாமரம், ப.72.

78.கருமலைத் தமிழாழன், வேரின் விழுதுகள், ப.70.
79.க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.433.
80.வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 8, ப.591.
81.வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 8, ப.519.
82.மேலது, ப.591.
83.கொளஞ்சி, புதிய குறிஞ்சிமலர், ப.65.
84.கலைக்களஞ்சியம், தொகுதி 4, ப.7.
85.மு.தமிழ்நிலவன், பூவிலே தேன்விழா, ப.1.
86.சிற்பி, பாலா (தொ.ஆ.) மு.மேத்தா கவிதைகள், ப.300.
87.கொளஞ்சி, புதிய குறிஞ்சிமலர், ப.24.
88.சிற்பி, பாலா (தொ.ஆ.)மு.மேத்தா கவிதைகள், ப.65.
89.வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 8, ப.519.
90.இராம.திருவுடையான், பொன் மகூலம், ப.124.
91.வீ.சுந்தர மகாலிங்கம், கவிதைக் காதல், ப.44.
92.இரா.இளங்குமரன், தேனருவி, ப.42.
93.மேலது, ப.43.
94.ஜே.மஞ்சுளாதேவி, மானுடம் பாடிய வானம் பாடி, ப.166.
95.கொளஞ்சி, சமுதாயக்கடலில் வைரமுத்து, ப.136.
96.ச.விஜயலெட்சுமி, தமிழ்க் கவிதைகளில் பெண்ணுரிமை, ப.30.
97.க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.104.
98.த.மோகன்தாஸ், இன்றைய தமிழ்க் கவிதைகளின் பாடுபொருள், ப.107.
99.தமிழமுதன், தமிழமுதன் கவிதைகள், ப.96.
100.சந்திரசேகரன் (தொ.ஆ.), தலித்தியக் கவிதைகள், ப.14.
101.பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.338.
102.மீரா.எதிர்காலத் தமிழ் கவிதை, ப.66.
103.பாலுமணிவண்ணன், பெண்ணியக் கவிதைகள், ப.20
104.இரா.சம்பத், இலக்கியமும், இலக்கியக் கோட்பாடும், ப.152.

105. போ.மணிவண்ணன், தமிழ்க் கவிதைகளில் பெண்ணியம், ப.121.
106. கொளஞ்சி, சமுதாயக் கடலில் வைரமுத்து, ப.69.
105. கொளஞ்சி, புதிய குறிஞ்சிமலர், ப.100.
108. தமிழமுதன், தமிழமுதன் கவிதைகள், ப.72.
109. பாலுமணிவண்ணன், பெண்ணியக் கவிதைகள், ப.15.
110. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.396.
111. சி.பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.41.
112. இரா.சம்பத், இலக்கியமும், இலக்கியக் கோட்பாடும், ப.118.
113. கொளஞ்சி, புதிய குறிஞ்சிமலர், ப.86.
114. சிற்பி, பாலா (தொ.ஆ.) மு.மேத்தா கவிதைகள், ப.75.
115. கவிதாசன், நாற்றாங்கால் காற்று, ப.16.
116. கொளஞ்சி, புதிய குறிஞ்சிமலர், ப.16.
117. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.222.
118. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 3, ப.842.
119. மேலது, ப.31.
120. சிற்பி, பாலா (தொ.ஆ.) மு.மேத்தா கவிதைகள், ப.156.
121. அ.சிவபெருமாள், இலக்கியங்களில் வானியல், ப.9.
122. கபிலன், மழைக்கு ஒதுங்கிய கவிதைகள், ப.48.
123. மாணிக்க சண்முகம், எனக்கும் சிறகுகள் முளைக்கும், ப.39.
124. மு.மேத்தா, கண்ணீர் பூக்கள், ப.37.
125. அமுத பாரதி, ஐக்கூ அருவிகள், ப.68.
126. மு.தமிழ்குடிமகன், பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள், ப.182.
127. இரா.சம்பத், இலக்கியமும் இலக்கியக் கோட்பாடும், ப.119.
128. வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 9, ப.501.
129. கலைக்களஞ்சியம், ப.454.
130. எஸ்.இராதாகிருஷ்ணன், கனவின் பெயர் கவிதை, ப.83.

131. பொன்.செல்வகணபதி, ஞாபகப்பிசகு, ப.81.
132. பாரதியார் கவிதைகள், ப.5.
133. சு.முத்து, கவிதைகளில் அறிவியல், ப.91.
134. கலைக்களஞ்சியம் தொகுதி 1, ப.12 – 13.
135. வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 1, ப.431.
136. வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 1,ப.373.
137. கவிதாசன், நாற்றங்கால் காற்று, ப.19.
138. சிற்பி பாலா (தொ.ஆ) மு.மேத்தா கவிதைகள், ப.190.
139. போ.மணிவண்ணன், தமிழ்க் கவிதைகளில் பெண்ணியம், ப.66.
140. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 10, ப.598.
141. மேலது, ப.598.
142. மேலது, ப.598.
143. தமிழமுதன், தமிழமுதன் கவிதைகள், ப.85.
144. கொளஞ்சி, புதிய குறிஞ்சி மலர், ப.34.
145. ஆ.வ.ஜெயதேவன் (தொ.ஆ) ஈரோடு தமிழன்பன் கவிதைகள் தொகுதி 1, ப.207.
146. கொளஞ்சி, நெருப்புக் கவிதைகள், ப.81.
147. சிற்பி, பாலா (தொ.ஆ.) மு.மேத்தா கவிதைகள், ப.48.
148. மு.பஷ்பராஜன், மீண்டும் வரும் நாட்கள், ப.52.
149. பாலா (தொ.ஆ) சிற்பியின் கவிதை வானம், ப.17.
150. சக்திகனல், கனகாம்பரமும், டிசம்பர் பூக்களும், ப.60.

## இயல் - 3

## சிற்பியின் கவிதைச் சிறப்பு

**கவிதையின் நடை**

**உவமைச் சிறப்பு**

மாந்தர் பற்றிய உவமைகள் - குழந்தை, பெண், ஆண்

செயல் பொருள் உவமைகள் - செயல் பற்றிய உவமைகள்

இயற்கை பற்றிய உவமைகள்

மரம், செடி, கொடி பற்றிய உவமைகள்

நீர் நிலைகள் பற்றிய உவமைகள்

உயிரினங்கள் பற்றிய உவமைகள்

பறவைகள் பற்றிய உவமைகள்

**உருவகச் சிறப்பு**

மாந்தர் பற்றிய உருவகம்

இயற்கை பற்றிய உருவகம்

**குறியீடு**

**படிமச் சிறப்பு**

வியட்நாம் போராட்டம்

சிலுவை பற்றிய படிமம்

வேளாண் தொழில் பற்றிய படிமம்

விலைமகள் பற்றிய படிமம்

சூரியன் பற்றிய படிமம்

மழை பற்றிய படிமம்

பிற படிமங்கள்

**உத்திகள்**

புராண உத்தி, புதுமை உத்தி, - நஞ்சு, வழக்கு மன்றம்,

சிறைச்சாலை வருணனை உத்தி, முரண் உத்தி, சிறுகதை உத்தி,

நாடக உத்தி, உருவக உத்தி.

**பழமொழி ஆளுமை**

**நம்பிக்கைகள்**

**நகைச்சுவை ஆளுமை**

**பிறசொற்பயன்பாடு**

**தொகுப்புரை:**

சில இலக்கியங்கள் காலங்கடந்தும் கருத்துக்களைக் கடந்தும் சிறப்புற வேண்டுமெனில், அதற்குக் காரணம் அவ்விலக்கியங்கள் பெற்றுள்ள தனிச்சிறப்புக்களே ஆகும். கருத்தால் இலக்கியம் சிறப்படைவதில்லை. உணர்த்தும் முறையாலே ஓர் இலக்கியம் சிறப்படைகிறது எனலாம். "ஒரு கவிஞன் தான் பெற்ற உணர்ச்சிகளைப் பிறர் பெறுவதற்கு சில உத்திகளைக் கையாளுகின்றான். கற்பனை, சொல்நயம், ஒலிநயம், யாப்பு, அணி அழகுகள், குறிப்பு சுவைப் பொருட்கள் போன்ற அத்தகைய உத்திகள். இவற்றில் சிலவேனும் பொருந்தி அமைந்துள்ள இலக்கியத்தையே அனைவரும் பாராட்டுவர். இத்தகைய உத்திகள் ஒன்றுடன் ஒன்று இணைந்து இழைந்தும் விளங்கினால் தான் செய்யுள் நெறிசெய்யுள் நடைநலம் பெறும்."(1) மேற்கூறிய உத்திகளுள் எது முதன்மையானது எனப் பகுத்து பார்த்து கவிஞன் தன் நடையை அமைத்தல் இயலாது. தன் படைப்பில் ஒன்றை மட்டும் பிரிந்து இதுதான் கவிஞனின் நடை என எடுத்துரைக்க இயலாது என நடையியலாலர்கள் கருதுகின்றனர்.

இன்றைய காலச்சூழலில் கருத்துக்கள் மக்களைச் சென்றடைய வேண்டுமென்றால் கவிஞர்கள் சில உத்தி முறைகளை மேற்கொள்ள வேண்டும். அப்போது தான் இலக்கியம் தனித்தன்மை பெற்று சிறப்புறும், ஒவ்வொரு கவிஞனுக்கும் நடை முக்கியமான ஒன்றாகக் கருதப்படுகிறது. நடை என்ற சொல்லாட்சியை வடமொழியாளர்கள் 'ரீதி' என்றும், ஆங்கிலேயர் Style என்றும் பயன்டுத்துகின்றனர். தமிழில் நடை என்பதற்கு 'இயக்கம்' என்னும் அடிப்படை

ஒருமைப்பாட்டுடைய பல சொற்கள் உள்ளன. 'நட' என்பது எல்லாச் சொல்லுக்கும் பகுதியாக விளங்குகிறது. தொல்காப்பியர் 'நடை' என்ற சொல்லாட்சியைப் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

"உரைவகை நடையே நான்கென மொழிய"

(தொல்.சொல்.485)

"ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை
வெண்பா நடைத்தே கலியெனை மொழிய"

(தொல்.சொல்.420)

எனத் தொல்காப்பியர் நடையைப் பற்றிக் குறிப்பிடுகிறார். நடையின் சிறப்பிற்கு சொல்லமைப்பும் உணர்த்தும் முறையும் அவசியம் என்பதை ஆலன்வார்னர் குறிப்பிடுகையில், "எண்ணங்களையும் மனத்தில் எழும் உணர்வுகளையும் உரிய சொற்களால் வடித்துக் கொடுக்கும் கலைத்திறனையே நடை"(2) என்று நடையின் சிறப்பைப் பற்றிக் கூறிப்பிடுகிறார்.

**கவிதையின் நடை**

இலக்கியத்தை ஆராயும் முறைகளுள் நடை முக்கியமானதொன்றாகும். கவிஞன் தன் கருத்தை எடுத்துக் கூறுவதற்கு பல்வேறு உத்தி முறைகளைக் கையாளுகின்றான். அம்முறைதான் படிப்போரின் மனதில் ஒரு தூண்டுதலை ஏற்படுத்துகின்றது. அத்தூண்டுதல், கருத்து, கற்பனை, சொல்லாட்சி, உவமை, உருவகம், படிமம், குறியீடு, வருணனை போன்றவைகளினால் அமையும். கவிதைக்கு உருவம், உள்ளடக்கம்

உணர்த்தும் முறை ஆகியவை எந்த அளவிற்கு முக்கியமோ அதுபோன்றே கவிதையில் மொழிநடை முக்கியமானதாகும்.

"கவிஞன் தான் எண்ணும் பொருளை எடுத்துணர்த்தக் கையாளும் மொழிப் போக்கே நடை எனப்படும். நடை என்பது உருவத்தில் இடம் பெறத்தக்கது. எனினும் உணர்த்தும் முறைபோல் கவிஞனுக்கு மிகவும் அணுக்கமானது"(3) என அறவாணன் குறிப்பிட்டுள்ளார். ஒரு கவிஞனை இனம் காண அவனின் கவிதை நடையே போதுமானது. அதனைக் கொண்டு, இக்கவிஞன் இம்முறையில் தான் கருத்தை வெளிப்படுத்துவான் என்று அனைவரும் உணரும் வண்ணம் அவனின் நடையே அவனை அடையாளம் காட்டிவிடும். "நடை என்பது ஆசிரியனின் தன்மையை வெளிப்படுத்தும் மொழி. உள்ளத்தின் திட்பம் நடையின் திட்பமாகும். உள்ளத்தின் தெளிவு நடையின் தெளிவாகும். ஆசிரியனின் நடையே அவருடைய இயல்பைக் காட்டும்"(4) என்று இ.சுந்தரமூர்த்தி கூறியுள்ளார்.

சங்க காலப் புலவர்கள் இயற்றிய கவிதை நடைக்கும், இக்கால கவிஞர்கள் எழுதும் கவிதை நடைக்கும் அதிக வேறுபாடுகள் உண்டு. காலத்தால் நடையமைப்பில் மாற்றம் நிகழ்வது இயல்பாகும். சங்க காலத்தில் அகவற்பாவும், இடைக்காலத்தில் விருத்தப்பாவும், தற்காலத்தில் மறுமலர்ச்சிக் கவிதைகளும் மாற்றமடைந்து வந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். மக்களுடைய இடத்திற்கும் விருப்பத்திற்கும் ஏற்றவாறு கவிதை உணர்த்தும் முறை அமையும்.

இவ்வகையிலேயே நடையமைப்பு ஆய்வு செய்யப்பட்டு நடையமைப்பின் வேறுபாடுகள் உணர்த்தப்படுகின்றன. இவ்வேறுபாடுகளைக் கண்டறிவதிலும் சில சிக்கல் உண்டு என நடையியலாலர்கள் கருதுகின்றனர். ஏன் எனில் ஒவ்வொரு கவிஞனும் தனித்தனி நடையைக் கையாள்வது கிடையாது. ஒரே கவிஞனே தமது படைப்புக்களில் பல்வேறுவிதமான நடையினைக் கையாளக்கூடும். இளங்கோவடிகள் சிலப்பததிகாரத்தின் இடை இடையே குன்றக்குரவை ஆய்ச்சியர் குரவை போன்றவற்றைப் பயன்படுத்தியுள்ளமை நோக்கத்தக்கதாகும். இக்கருத்தைக் கொண்டே மொழிநடை பற்றிய ஆய்வை மேற்கொள்ள வேண்டுமென ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

கவிஞர் சிற்பி தமது கவிதையில் பல்வேறு நடையமைப்பைப் பின்பற்றியுள்ளார். கருத்து கூறும் முறைக்கேற்பவும் இடத்திற்கேற்பவும் இவர்தம் நடையமைப்பு மாற்றமடைந்துள்ளது. தான் விரும்பிய கருத்தைக் சிறந்த முறையில் எடுத்துக்கூற சில முறைகளை மேற்கொண்டுள்ளார். சிற்பி அவர் கவிதைகளில் உவமை, உருவகம், குறியீடு, படிமம், உத்தி, பழமொழி, நம்பிக்கைகள், கிராமியக்கூறுகள், நகைச்சுவை, பிறமொழிச் சொற்பயன்பாடு போன்றவற்றை எவ்வாறு பயன்படுத்தியுள்ளார் என்பதை ஆய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**உவமைச் சிறப்பு**

உவமை என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல் எனப் பேராசிரியம் கூறுகின்றது. ஒன்றிலிருந்து

மற்றொன்றை கூற, நான்கு வகை உருபுகளின் அடிப்படையில் பிறப்பது உவமை எனத் தொல்காப்பியர்,

"வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகை பெறவந்த உவமைத் தோற்றம்"

குறிப்பிடுகிறார். ஒரு பொருளை மற்றொரு பொருளுடன் ஒப்பிட்டுக் காட்டும் கலையே உலகில் முதலில் தோன்றிய கலையாகும். ஒன்றை மற்றொன்றுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போதுதான் அதன் உண்மைத் தன்மை புலனாகும். உவமை என்ற சொல்லுக்கு ஒப்பு, ஒப்புமை, உவமாலங்காரம் என்றும் பல பொருள்கள் உள்ளன. உவமை என்னும் சொல் 'உபமா' என்ற வட சொல்லின் திரிபு என்பர்.

"உவமை என்னும் தவலரும் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறி மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே"[5]

என மாறனலங்காரம் உவமை பற்றிக் கூறுகின்றது. உவமை கூற வேண்டிய பொருள் இதுவாகத்தான் இருக்க வேண்டும் என்ற கட்டுப்பாடில்லை. எதைப் பொருளுடனும் உவமைப்படுத்தலாம். கவிஞர் சிற்பியின் கவிதைப் படைப்புகளில் எண்ணிலா உவமைச் சொற்களைக் காணலாம். உவமைகளை அடுக்கிக் கொண்டே போதல் இவரின் கவிதைச் சிறப்பாகும்.

**மாந்தர் பற்றிய உவமைகள்**

மனிதர்களை பிறவற்றுடன் ஒப்பிட்டு உவமை கூறுதல் மனிதர்கள் பற்றிய உவமையாகும்.

**குழந்தை**

குழந்தையைப் பிறவற்றோடு ஒப்பிட்டு உவமை கூறுகிறார் கவிஞர்.

"தாய்மடி மீதிலோடித்

தவழ்ந்திடும் குழந்தை போலப்

பாய்ந்திடும் ஓடை"(6)

எனக் குழந்தை போலத் தவழும் ஓடையை குறிப்பிட்டுள்ளார். பாரதியின் படைப்புக்கள் வெளிவரக் கூடாது என ஆங்கில அரசு எண்ணிய போது,

"பச்சைக் குழந்தை போல்

நான் பெற்ற இலக்கியங்கள்"(7)

குழந்தை போன்ற என் படைப்புகள் சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டேனும் இவ்வுலகைப் பார்க்கட்டும் என விரும்பினர் பாரதியார்.

"கருவியைப் பார்த்துக்

குழந்தைபோல் குதூகலம்

மகரிஷிக்கு"(8)

என மகரிஷியின் மகிழ்ச்சியை குழந்தையின் மகிழ்வோடு ஒப்பிடுகிறார். ஒரு குழந்தையின் சிரிப்பு எப்படி இருந்தது எனக் குறிப்பிடுகையில்,

"நீக்ரோக் குழந்தையின்

வெள்ளரிச் சிரிப்புப் போல்

ஆதிச் சூரியனின்

ஒளித் திவலைகள்"[9]

எனக் குழந்தையை ஓடை, இலக்கியங்கள், மகரிஷி, சூரியத்திவலை போன்றவற்றுடன் உவமைப்படுத்தியுள்ளார்.

**பெண்**

பெண்கள் இலக்கியம் வருணிக்கும் ஒரு பொம்மை. பெண்களைப் பாடாத கவிஞர்களே இல்லை எனலாம். கவிஞர் சிற்பி பெண்களை எவ்வாறு உவமைப்படுத்துகிறார். வாழ்க்கைச் சுதந்திரம் வேண்டும் என நினைக்கும் பெண்கள் திருமணம் வேண்டாம் எனக் கூறுவதைப் போல கன்னியாகுமரி! நீ எப்போதும் கன்னியாகவே இருக்கிறாயா? எனக் குறிப்பிடுகிறார்.

பெண்கள் மென்மையானவர்கள். ஆதலால் அவர்கள் செய்யும் செயலும் மென்மையானது. ஒரு குழந்தைக்கு தாயின் அரவணைப்பு முக்கியமானதொன்றாகும். அம்மா தன் குழந்தைக்குக் கொடுக்கும் முத்தம் போல் குளிர்ச்சி பொருந்தியது அத்திமரநிழல் தரும் சுகம் எனக் கூறி தம் இளம் பருவ முத்தத்தை நினைத்து மெய்சிலிர்த்துப் போகிறார் சிற்பி.

"கருக் கொண்ட பெண்கள் போல்"[10]

தாய்மை சூழ் கொண்ட பெண் பொதுவாக அசைந்து நடப்பதைப் போல இளங்காற்றில் மரங்கள் அசைந்தன என்கிறார். பெண்ணின் மானத்தைக் காக்க மூடியிருந்த மார்புச் சோலை போல மூவர்ணக்

கொடி அசைந்து கொண்டிருந்தது நம் தேசத்தைக் காக்க எனத் தாய்த் திருநாட்டின் கொடி தாயின் மார்புச் சேலை என உவமைப்படுத்தி மகிழும் ஒரு தமிழன் கவிஞர் சிற்பி என்பதை அறியலாம்.

ஒரு விலைமகளின் நிலையைக் கூறுகையில், காமக் கொடூரனிடம் சிக்கிய பெண்ணின் மனநிலையை

"அவள் மனம்போல்

சுருண்டு கிடந்த

'மானம்' பார்த்த சேலை!"(11)

என 'சிநேகலதா சிரித்துக் கொண்டிருக்கிறாள்' என்னும் கவிதையில் உவமைப்படுத்தியுள்ளார். பருவப் பெண் தனக்குத் தகுந்த ஆடை மற்றும் அணிகலன்களுடன் தம்மை அழகுபடுத்திக் கொள்வதைப் போல அழகான மலர் பூத்த பூஞ்சோலை அமைந்திருந்தது எனப் பெண்ணின் தோற்றத்திற்கு பூந்தோட்டத்தை உவமித்திருக்கிறார்.

விலைமகள் தன்னைக் காணவந்த ஆடவனிடம் பெண்ணுக்கு உரிய நாணத்தில் தலைகுனிந்து நிற்கும் காட்சியை 'தந்தையிடம் மகளைப் போல்' அவள் பேசிக் கொண்டிருந்தாள் எனக் கூறுவதிலிருந்து அப்பெண்ணின் நிலையை விளக்கிக் காட்ட முட்படுகிறார் என்பதை அறியலாம். கண்ணகியின் கூந்தலை,

"அந்தப் புகார் நகரத்துப் பெண்ணின்

கலைந்த கூந்தலைப்போல்

ஆலவாய் நகரம்

புகை மண்டிக் கிடக்கிறது"(12)

என கூந்தலின் பரந்து விரிந்த தன்மையைப் புகைக்கு ஒப்பிட்டு

கூந்தலின் நீட்சித் தன்மையை மிகைப்படுத்தியுள்ளமை போற்றத்தக்கதாகும். இதைக் கொண்டு நோக்கும் போது பெண்ணின் கூந்தலை வருணிக்காத இலக்கியங்களே இல்லை எனலாம்.

**ஆண் பற்றிய உவமைகள்**

ஆண்கள், ஆண்களின் செயல்கள் போன்றவற்றைப் பற்றிய உவமைகளை காணலாம். கழுகு செத்த பிணத்தை தூக்கிப் புரட்டி புரட்டி கொத்துவதைப் போல, அலைகடல் ஆடவரின் உடலைப் புரட்டிப் போட்டது எனக் குறிப்பிடுகிறார் கவிஞர். மேலும் கடலில் முத்தெடுத்த தலைவன் தன் பணி முடிந்ததும் தலைவியைப் பார்க்க ஆவல் கொள்ளும் நிலையை 'காவலனும் ஏவலன் போல் தாவலானான்' எனக் காவலனின் மனநிலையைக் உவமைப் படுத்தியுள்ளார் கவிஞர்.

கவிஞர் பாரதியார் தன் மனைவி செல்லம்மாள் மேல் கொண்டக் காதலைக் கூற வந்த கவிஞர் சிற்பி,

“ 'வட்டங்கள் இட்டுக்
குளம் அகலாத
மணிப் பெருந் தெப்பம்' போல
குளிரக் குளிரக் காதல்”(13)

என உவமைப்படுத்தியுள்ளார். மேலும் ஓர் ஆடவனின் குரல் கத்தி போல் குருரமாய் இருந்தது எனக் குரலுக்கு கத்தியை உவமை கூறுகிறார். இதன் மூலம் ஆடவனின் தன்மையை காட்டுகிறார்.

'பழையனூர் நீலி' என்னும் கவிதையில் பயன்பாடு இழந்த ஒரு கந்தைத் துணி எப்படி உணர்விழந்து கிடக்கிறதோ அதுபோல் பெண்ணுக்கு துரோகம் செய்த ஓர் ஆடவன் உணர்விழந்து கொண்டிருந்தான் என துரோகம் செய்தவரின் நிலையை கந்தைத் துணியாக உவமைப்படுத்தியுள்ளார்.

ஒரு ஞானியின் காலை நேர செய்கையைக் குறிப்பிடுமபோது,

"தண்ணீரை

முத்தமிடக் குனிவது போல்

சாய்ந்திருந்த மரத்தின்

இலைகளை விருடிவிட்டபடி

அடி மரத்தில்

கை கோத்து நின்றார் ஞானி"(14)

எனக் கூறுகிறார். குருவின் முதுமை நிலையை சருகுடன் உவமைப்படுத்தியுள்ளார். மேனி சருகு உதிர்வது போல் சாய்ந்து கொண்டிருந்தது என காய்ந்த சருகுக்கு, தேய்ந்த முதுமை நிலையை உவமைக்கிறார். நோய்பட்டிருக்கும் ஒருவனின் நிலையை உவமை கூறுமிடத்து, வெட்டுவதற்குத் தயாராக இருக்கும் ஆட்டின் தலையில் உள்ள கண்கள் எப்படி வெறித்துப்பார்க்குமோ அப்படி இருந்தன அவன் கண்கள் என மிரட்சியின் தன்மையை உவமை மூலம் புலப்படுத்துகிறார்.

"உயிரற்ற கண்களிலிருந்து

ஒழுகும் ஜீவனைப் போல்

கண்ணீர்க் கோடுகள்"(15)

அவன் கண்களில் இருந்து வழியும் கண்ணீரை ஜீவனாக உவமைப்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

தன்னைக் கவர்ந்த ஒரு கவிஞனைப் பற்றி ஆசிரியர் எடுத்துரைக்கும் போது மலைக் குறத்தி வரும் அழகை மலையாளக் கவிஞன் கடமளிட்ட தவில் பகர்வது போல் அதிர்ந்த பாடலால் இயற்கையே தன்னிலை மாறியது எனக் குறிப்பிடுகிறார். மேலும் அறுபது ஆண்டுக்கு முன் வில்லிபாரதத்தில் உள்ள கிருஷ்ணன் தூது பாடலை தன் சித்தப்பா பாடிய தன்மைக் குறிப்பிடும் போது,

"புல்லாங் குழலில் ஒரு
புன்னாக வராளி போல்
சிற்றப்பா பாடிய போது
ஆழியாற்றுப் பாறைகள் உருகி
வாழைப் பழம் போல்
வழுக்கிக் கரைந்த ஞாபகம்"(16)

எனத் தான் சின்ன வயதில் கேட்ட பாடலின் அனுபவங்கள் எப்படி இருந்தன என்பதனை தன் கிராமியப் பாணியில் உவமைப் படுத்தியுள்ளார். திருக்குறளின் பெருமையைக் கூற நினைத்த கவிஞர் தருமதேவதை எப்படி புன்னகைத்திருப்பாளோ அது போல புன்னகைத்துத் தழைத்து வளர்ந்தது என மொழிகிறார்.

லால்பகதூர் சாஸ்திரியின் உயர்வைப் பற்றிக்கூறப் புகுந்த கவிஞர். இமயமலை போல் உயர்ந்து நின்றார் என அவரின் புகழை இமயமலைக்கு உவமைப்படுத்தியுள்ளார்.

உயிர் உடலைவிட்டுச் செல்லும் நிலையை தனக்கே உரிய நடையில் சிறப்புற உவமிக்கிறார்.

"காற்றில் மெல்ல உயிரைக் கரைத்து
மேற்கில் மறைகிற வெங்கதிர் போல"[18]

உடலை விட்டு மெல்ல மெல்ல உயிர் நீங்கும் நிலையைத் தம் கண்முன் காட்சியாக உருவாக்கிக் காட்டுகிறார் என மனிதர்களைப் பற்றி ஏராளமான உவமைகளை அள்ளித் தெளிக்கிறார். காணும் இடம் எங்கும் மனிதன் பற்றிய உவமைகளும், உவமையடுக்குகளும் மிகுந்து படிப்போரின் உணர்வுகளை சுண்டி இழுக்கின்றன. கவிஞரால் உவமை கூறப்படாத பொருளே இல்லை எண்ணுமளவிற்கு உவமைப் பூக்கள் கொட்டிக் கிடக்கின்றன. இவை தான் சிற்பியின் கவிதைக் காட்டில் மணம் பரப்புகின்றன.

**செயல், பொருள் உவமைகள்:**

உயிர்கள் செய்யும் ஒவ்வொரு செயலும், கவிஞனுக்குரிய உவமைப் பொருளாகின்றன. அன்றாட பயன்பாட்டுக் கூறுகளும், பயன்படுத்தும் பொருள்களும் பிறவற்றின் உவமைப் பொருளாகின்றன. அவற்றைச் சிற்பி தம் படைப்புகளில் பலவாறு பயன்படுத்தியுள்ளார்.

**பொருள் பற்றிய உவமைகள:**

மழை காலங்களில் காளான்கள் எல்லா இடங்களிலும் இயற்கையாக தோன்றக்கூடியதாகும். அவை குடைகள் போலக்

காட்சியளித்தன என உவமைப்படுத்துகிறார். நாம் அன்றாடம் வாழ்க்கையில் பயன்படுத்தக்கூடிய நேரம் கணிக்கக்கூடிய மணிக்கூண்டு ரிப்பேர் என் மனக்கூண்டு போல என மனதைக் கூண்டாக உருவகம் செய்து, அது மணிக்கூண்டு போல் பழுதடைந்ததைக் குறிப்பிடுகிறார். மக்கள் தொகைப் பெருக்கத்தினால் மக்களின் எண்ணிக்கை அதிகரிப்பதை 'நெய்க்கிண்ணம் போவது போல்' மனித வெள்ளம் வழிந்தோடும் என்று நெய்வடிந்தோடுவதைப்போல பேருந்துகளில் மக்கள் கூட்டம் நிறைந்திருப்பதை உவமைப்படுத்தியுள்ளார். நிலப்பரப்பின் தன்மையை விளக்க வந்த கவிஞர்,

"ஒரு ராட்சதக் கப்பல்போல்
நிலப்பரப்பு ஒன்று
கடல் முதுகு நெறிந்தலைய"[19]

என நிலம் நடுக்கத்தால் பிளக்கும் தன்மையை உவமையாக்குகிறார். ஒருவனின் மனது பற்றிக் குறிப்பிடுகையில்,

"மாடிக்கதவு
மூடியே கடந்தது
என் மனசு போல"[20]

என உவமைப்படுத்தியுள்ளார் கவிஞர். பாரதியார் தன் மனைவி செல்லம்மாளின் தாய்மை நிலையை உவமை கூறும் முறையை ஆசிரியர், தங்கம் சுமந்த வைரப்பேழை போல தாய்மை கொண்டிருந்தாள் எனக் குறிப்பிடுகிறார். பாரதக்கதை படிக்க படிக்க மக்கள் நெஞ்சை உருக்கும் நிலையை, 'பாரதம் மக்கள் நெஞ்சில்

நீரில் உப்பு போல்' கரைந்து கிடக்கிறது என இலக்கியத்தின் மீது மக்கள் கொண்ட ஈடுபாட்டை உணர்த்துகிறார் கவிஞர். கத்தி எப்படி பளபளப்பாக இருக்குமோ அதுபோல கவிதை மொழி பளபளக்கும் எனக் கவிதையின் கருத்துவளக் கூர்மையை புலப்படுத்துகிறார். காந்தியடிகளின் மார்பில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்த நிலையை,

"வெண்ணெயில் பாயும் வேல்போல்
அண்ணலின் மார்பில்
துப்பாக்கிக் குண்டுகள்"[21]

என்று குண்டு உடலில் பாய்ந்ததன் மென்மைத் தன்மைக்கு வெண்ணெய்யை உவமையாக்கியுள்ளார் கவிஞர் சிற்பி.

ரயில் பயணிகளை உரிய இடங்களில் இறக்கிவிட்டு புறப்படும் போது, இரைதேடும் மண்புழுவாய் மெல்ல நகர்ந்தது என ரயிலுக்கு மண்புழுவை உவமைகூறியுள்ளார். காதலின் சின்னங்களைப் பற்றிக கூறிக் கொணடே வந்த கவிஞர் 'காதல் கோயில்' என்னும் கவிதையில்,

"குங்குமச் சிமிழ் போல்
இதழ்கள் திறந்திருக்க"[22]

எனச் சிமிழுக்கு இதழ்களை உவமை கூறி நிறத்தை விளக்குகிறார். கவிஞர் சிற்பி தாலாட்டில் தன்மையே மறந்து நிற்கும் நிலையைக் கூறும்போதும், 'தத்தளித்த முல்லைக்கு பாரி தந்த தேர் போல' அப்படியே நின்றிருந்தேன் எனக் கூறுகிறார். இன்று அத்தகைய தாலாட்டுகள் இல்லாத நிலையை எண்ணி வருந்துகிறார்.

‘ஆதிரை’ என்னும் கவிதையில் வீரர்கள் தாங்கள் புக நினைத்த நகருக்குள் எந்தவித சேதமும் இல்லாமல் நுழையும் போக்கை, ‘பென்னூசி பழத்தில் புகுவது போல’ எனக்கூறும் விதம் நோக்கத்தக்கதாகும். ‘தங்கத் தகடு போல் திருக்குறள் சுவடி’ அவிழ்ந்து கிடந்தது எனத் திருக்குறளின் பெருமையை தங்கத்திற்கு உவமிக்கிறார். தஞ்சை பெருவுடையார் கோயில் வரலாற்றில் உயர்ந்த இடத்தைப் பிடித்துள்ள நிலையைக் குறிப்பிடும் போது

“ஆச்சரியக் குறிபோல்

பெருவுடையார் ஆலயம்”[23]

என எல்லோரும் கண்டு வியப்புறும் வண்ணம் கோயில் இருந்தது என உவமைப்படுத்தியுள்ளார். தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒருவன் தனக்குத் தேவையான பொருளை பிறரிடம் யாசகம் கேட்டுப் பெறும்போது, அவளின் தோற்ற அமைப்பை உணர்த்தப் புகுந்த கவிஞர் ‘ஆணி அடித்தாற்போல் அசையாது நின்றவன் வாய் மட்டும் முணுமுணுத்துக் கொண்டிருந்தது’ எனக் குறிப்பிடுகிறார். அவன் உடல் அணிபோல் அசையாமல் நின்றது. ஆனால் வாய் மட்டும் ஏதோ முணுமுணுத்தது என உவமை கொண்டு விளக்குகிறார்.

இராமனின் காலடி பட்டவுடன் அகலிகை சாப விமோச்சனம் பெறுகிறாள். அந்நிலையைக் கூறிய கவிஞர் அவள் எதைப்போல் இருந்தாள் என உவமிக்கும் விதம் சிறப்பானதாகும்.

"பொன்னைப் போல் அகலிகைப்

பெண்"[24]

என உவமைப்படுத்தியுள்ளார். 'கம்பங்கள் அசைபடாமல் நின்றது போல் பனங்காடு' இருந்தது எனக் குறிப்பிடுகிறார். சலசலத்துக் கொண்டிருக்கும் பனங்காடு அவனின் வரவைக் கண்டதும் சலசலப்பை நிறுத்திக் கொண்டது எனத் 'தேவசிக்குட்டி' எனும் கவிதையில் குறிப்பிடுகிறார். தேவகி துயில் கொள்ளும் அழகை உவமைப்படுத்த விரும்பிய கவிஞர் 'வெள்ளிக் குத்து விளக்கு போல் படுத்திருந்த தேவகி' எனக் குறிப்பிடுகிறார்.

காந்தியடிகளை சிறை கொண்ட நளில் வாயில் வந்தேமாதரமும், கையில் கொடியும் கொண்டு புறப்பட்ட போர்ப்படை அணி வகுப்பை கவிஞர்.

"பூகம்பப்பொழுதில்

பொங்கிய அலைகள் போல்

அறப்போர் படைகள்

அணிவகுத் தெழுந்தன"[25]

எனக் குறிப்பிடுகிறார். குமரன் கொடியை விடாமல் பிடித்திருந்த தன்மையைக் கூறும்போது, 'தங்கத்தில் போட்ட பூண்போல் கொடியில் குமரன் கைப்பிடி' எனக் கையில் பிடித்த கொடியின் நெகிழாத் தன்மையை உவமிக்கிறார். ஒரு பெண்ணின் கண்ணிலிருந்து வரும் கண்ணீர் விளக்கு வெளிச்சத்தில் கவிஞரின் பார்வைக்கு 'கல் நகை போட்டது போல் மின்னியது' என கண்ணீர்

மின்னிய தன்மையை உவமிக்கிறார். மனிதன் பிறந்து பூமியில் விழுந்த போது அவனது உள்ளம் 'கறந்த பால் போல்' இருந்தது எனக் கூறும்போது, அதன் பிறகு அவனது செயல்கள் அனைத்தும் அநீதியின் பால் சென்று அவன் மனம் குப்பைத் தொட்டியாகி விடுகிறது என்னும் நிலையை விளக்குகிறார்.

**செயல் பற்றிய உவமைகள்:**

மனிதன் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயலுக்கும் ஒவ்வொரு விதமான உவமைகளைக்கூறி அவற்றின் மூலம் அச்செயலை விளக்கிக் காட்டுகிறார். மகாகவி பாரதியாரிடம் தேசபக்தி எவ்வாறு கனன்று கொண்டிருந்தது என்பதை,

"செப்புக் கம்பியில்
பாய்ந்த மின்னரம் போல்
தேசபக்தி கனன்று கொண்டிருந்தது"[26]

என பாரதியார் தேசத்தின் மீது கொண்ட பற்றை உவமிக்கிறார். கால நேரம் தான் மனிதனின் ஒவ்வொரு செயலுக்கும் முக்கியமாகக் கருதப்படுகிறது. ஊழிக் காலத்திற்கு முடிவு ஏற்பட்டுவிட்டது என்பதை உணர்ந்த விரும்பிய கவிஞர் 'கள்ளிப்பால் குடித்த ஓணான் போல கவிழ்ந்து' கிடந்தது ஊழிக்காலம் என ஊழிக்காலம் முடிவு பெறும் நிலையை ஓணானின் முடிவு நிலையோடு உவமைப்படுத்துகிறார் கவிஞர்.

சொற்கள் இன்று எப்படி சுதந்திரமாகக் கையாளப்படுகின்றன என்பதைக் கூற விரும்பிய கவிஞர். முடமாகி

நொண்டியாகக் கிடந்த சொற்களுக்கு பாரதிப் புலவன் பிறந்து வந்ததால் 'சடாயுவின் தமையன் சம்பாதியைப் போல் சிறகுகள் முளைத்தன' என சொற்கள் சுதந்திரமாக கருத்துரிமை பெறுவதைக் குறிப்பிடுகிறார்.

கண்ணனின் குழலிசையைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'மாயன் குழல் ஒலிபோல் வழிந்தோடும் இசை' என இசைப்பெருக்கின் மகிமையைக் குறிக்கிறார். கடலில் மூழ்கி முத்தெடுக்கும் வீரர்களின் நிலையை, பேய்க்கூட்டம் சூழ்ந்ததைப்போல் பேராழி சீரும் கொடிய அலைகள் ஒன்றுடன் ஒன்று மோதும் கோர நிகழ்வை பேய்களுடன் உவமை கூறுகிறார். முத்தெடுக்கச் சென்ற தலைவனுக்கு பணி முடிந்ததும் தன் மனையாளின் நினைப்பு வருகிறது. அந்நினைப்பை கவிஞர் சிற்பி 'ஆவல் வந்து வெள்ளம் போல் சுற்றசுற்ற' எனக் குறிப்பிடுகிறார். வெள்ளம் தலைவனைச் சுற்றுவதைப் போல தலைவியின் நினைப்பு தலைவனைச் சுற்றுவதாக உவமைப்படுத்தியுள்ளார். ஒரு ஆடவனின் கண்ணில் தெரியும் அச்ச உணர்வை கவிஞர்

> "திரைப்பட அரங்கின்
> இடைவேளை விளக்குபோல்
> பளீரிட்டன என் கண்கள்"[27]

என விளக்குடன் உவமிக்கிறார். ஒரு மலையின் அடிவாரத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது குழந்தைகள் கதையில் வரும் மொட்டைத் தலைப் 'பூதம்போல் நெடிதுயர்ந்து நிற்கும்' மலையின் அடிவாரம் என மொழிகிறார். ஒரு எண்ணெய் விற்கும் பெண்ணை

இளவட்டங்களும் சிறுவர்களும் சுற்றி வரும் போது அவளின் செயல் எப்படி இருக்குமென கவிஞர் சிற்பி காட்சிப்படுத்துகிறார்.

"வேலமுள் தைத்தது போல்

வெந்து கருப்பானாள்"[28]

தேவாத்தக்கா? என்று அழைத்து சுற்றி வரும் போது தோன்றும் முகக் குறிப்பை உவமை மூலம் விளக்கியுள்ளார்.

ஒரு கும்பலில் அகப்பட்ட இளம் பெண்ணின் நிலை எப்படி இருக்கும் என்பதை தீப்பெட்டி மூலம் உவமிக்கிறார்.

"தீக்குச்சியும்

பெட்டியின் தோளும் உராய

நெருக்கடிக் கும்பலில்

அகப்பட்ட இளம் பெண்

யாரோ தொட்டதும்

சீறிச் சினத்தல் போல்

சிவந்து சுரீலெனச்

சீறியது தீக்குச்சி"[29]

எனப் பெண்ணும், நெருப்பு போல் பற்றிக் கொள்ளும் தன்மையை விளக்கியுள்ளார். வார்த்தைகள் சங்கிலித் தொடர்போல் வருவதை, கவிஞர் 'கடல் பறவைபோல் வார்த்தைகள் சிறகடித்தன' என உரைக்கிறார். கால அளவை மாத்திரை அளவோடு உவமிக்கும் விதம் சிறப்பிற்குரியதாகும்.

“கி.மு.கி.பி. என்பது போல்

சா.மு.சா.பி. என

(சாப்பாட்டுக்கு முன் / பின்)”[30]

எனக் குறிப்பிடுவதன் மூலம் இன்றைய மனிதர்களின் உடல்நிலையை நன்கு புலப்படுத்துகிறார் என்பதை அறியலாம். ஒரு குழந்தையின் மகிழ்வற்ற தோற்றத்தை பழந்துணிக்கு உவமை கூறுகிறார்.

“குழந்தையைப் போல்

அவள் மடியில்

குதூகலித்தான் அவன்

பழந்துணி போல் அவன் பிள்ளை

சுருண்டு கடந்தது இங்கே”[31]

ஒரு தந்தை செய்த தவறினால் குழந்தையின் மனநிலை எப்படி இருக்கும் என்பதை இவ்வுவமை மூலம் சமூகத்திற்கு உணர்த்துகிறார். அவன் செய்த தவறுக்கு அவனுக்கு தக்க தண்டனை வழங்கப்பட்ட பின், அவனது நிலையை அவன் மயங்கி ஒரு கந்தையைப் போல் மல்லாந்து விழி செருகி தன் உணர்விழந்து கிடந்தான் எனக் குறிப்பிடுகிறார். தவறு செய்வது மனித இயல்பு என்பதை உணர்ந்து அத்தவற்றைத் திருத்திக் கொள்ள வேண்டும். இல்லையெனில் தவறுக்கு தகுந்த தண்டனை கிடைக்கும் என குற்றம் செய்பவர்களுக்கு இம்மனிதனின் நிலை எடுத்துக்காட்டாக இருக்கும் என உவமை மூலம் அறிவுரை கூறுகிறார்.

தெருக்களில் வீடுகள் வரிசை முறையற்று அமைந்திருக்கும் நிலையை ‘தாடகைக்குப் பல் முளைத்தது போல் தாறுமாறாக

வீடுகள்' இருந்தன எனக் குறிப்பிடுகிறார். 'மின்னல் பாம்பு விசிறி மடிப்புப்போல் ஏறியும் இறங்கியும்' காட்சியளித்தன என உரைக்கிறார். வறியவனின் நிலையை ஆற்றின் நீர்பெருக்கு நிலையோடு ஒப்பிட்டு உவமிக்கிறார்.

"கொடுத்து கொடுத்து
ஏழ்மைப்பட்டவன் போல்
படுத்துக் கிடந்தது ஆறு"[32]

என்பதால், பிறருக்கு கொடுத்து வறியவனானவனின் நிலையைப் புலப்படுத்துகிறார். தாய்த் திருநாட்டின் மணிக்கொடியின் செயலை அழகிய அடுக்குவமைகளால் சொல்லும் பாங்கு வியப்பிற்குரியது

"குமரனின் கரத்தில்
அமர தாரகை போல்
அசைந்தது மணிக்கொடி
அவநம்பிக்கைத்
தூசுகள் தும்புகள்
அகற்றுவதைப்போல்
அசைந்தது மணிக்கொடி!
அடிமை அந்தகார
இருட்டைத்
துடைப்பது போல
அசைந்தது மணிக்கொடி
விடுதலைப் படைப்பில்

சேர வாரும் என

விடுத்த காந்தியின்

அழைப்புக் கரமென

¶ çÄÍ>m \è ÂØïV½ ”[33]

எனத் தீமைகள் அனைத்தையும் அழிக்கும் விதமாக பட்டொளி வீசி பறந்தது மணிக்கொடி என்கிறார். ஒருவன் கேட்க விரும்பிய கேள்விகள், கேட்கப்படாமல் மனதில் புதையுண்ட நிலையை, ‘விதைக்குள் முளை கருகுவது போல்’ என கேள்விகள் கருகின என உவமிக்கிறார். ஞானியின் முகக் குறிப்பை உவமை மூலம் உணர்த்த விரும்பிய கவிஞர் ‘சந்தனக்காடு தீப்பிடித்தாற்போல் ஞானியின் திருமுகம் சிவந்திருந்தது’ எனக் குறிப்பிடுகிறார்.

வயது முதிர்ந்த ஒரு மூதாட்டியின் முக அழகை வருணிக்கையில்,

“குழந்தை கிறுக்கிய

முதல் சித்திரம் போல்

கோடுகள் நிறைந்த முகம்”[34]

எனும் உவமையால் முதுமையினைக் குறிப்பிடுகிறார் என செயலாலும் பொருளாலும் பல உவமைகளைக் கூறியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

**இயற்கை பற்றிய உவமைகள்:**

மனிதனின் துன்ப நிலையை மாற்றி மனதில் மகிழ்ச்சி கொள்ள வைப்பவை இயற்கை. அத்தகைய இயற்கையின் நிகழ்வுகள்

ஒவ்வொன்றையும் சிறந்த உவமைப் பொருளால் மெய் சிலிர்க்க வைக்கிறார் கவிஞர் சிற்பி. தான் அனுபவித்த உணர்வையும், தான் கண்ட காட்சிகளையும் உவமைகளால் படைத்து, படிப்போரின் கண்களுக்கும், கேட்போரின் காதுகளுக்கும் விருந்தளிக்கிறார்.

**வானம்**

இயற்கைப் பொருள்களுள் நிலவைப் பாடாத கவிஞர்களே இல்லை. எல்லோர் மனதையும் கொள்ளை கொள்ளக்கூடியது நிலவு. நிலவுக்கு எண்ணற்ற பொருள்களை உவமை கூறியுள்ளார் ஆசிரியர்.

"புத்திளைஞர் உள்ளம் போல்
நிலவைப் பார் கண்ணால்"[35]

என அதன் கலங்கமற்ற தன்மையை விளக்குகிறார். ஒரு காதலி தன் காதலனிடம் எந்தவித பயனையும் எதிர்பார்க்காது மழை போல் முத்தம் தரவேண்டும் என வேண்டும் நிலையை கவிஞர் 'பருவ மழைபோலே பனி முத்தம் தருவானோ' எனக் குறிப்பிடுகிறார். வானில் பறந்து வரும் கொக்குகள் 'வெண்முகில் வருவது போல்' வந்தன என நிறத்தின் அடிப்படையில் உவமை கூறுகிறார். தமிழர் திருநாளாம் பொங்கலின் வருகையை 'பனித்திரை விலக்கி பகலவன் வருதல் போல' உழவர் மகிழ்ச்சி பொங்க வந்தாய் என மகிழ்கிறார். நாய்களின் நன்றியை கவிஞர், சூரியனைச் சுற்றிக்கொண்டு தம்மைத் தாமே சுற்றிக் கொள்ளும் கிரணங்களைப் போல நாய்கள் என கிரகத்திற்கு நாயை உவமிக்கிறார்.

அருகில் உள்ள மலைகள் கண்ணுக்குத் தெரியாதபடி முகில்கள் மூடியிருக்கும் காட்சியை,

"முகில்கள் மூடி மறைந்திருந்தன
கண்ணன் தனக்கே சொந்தமென்று
நப்பின்னைப் பிராட்டி
கட்டித் தழுவிக் கிடந்தாற்போல்"[36]

என உவமிக்கிறார். மேகத்தின் காட்சியை, 'மேகம் மலையைச் சுற்றி பாம்புச் சட்டை போல் படுத்திருந்தது' என அதன் சுற்றிவளைத்தத் தன்மையைக் குறிக்கிறார். ஞானி தன் சீடனிடம் இயற்கையைக் காட்டி பாடம் போதிக்கும் போது, 'நிலவைப் பார்த்தாயா அம்மாவின் முகம் போல் குளிர்ச்சியாய்' என கூறுகிறார். நிலவின் குளிர்ச்சிக்கு அம்மாவின் முகத்தை உவமையாக்கியுள்ளார். மேலும்,

"சூரியனைப் பார்த்தால்
அப்பா மாதிரி.....
கொஞ்சம் இதமாய் சூடாய்
நட்சத்திரங்களைப் பார்த்தால்
சுற்றத்தார் போல"[37]

என வான்வெளியில் உள்ள கோள்களைக் கொண்டே, மண்ணுலக உறவு முறைகளைப் படைத்துக் காட்டி உவமை கூறியுள்ளமை கவிஞர் சிற்பியின் வானளாவிய புலமைத் திறனைப் புலப்படுத்தும். வானத்துப் பொருளைக் காட்டி உறவுகளை வளர்க்கும் திறன் பெற்றவர் சிற்பி என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

பனிப்பொழிவை கண்ணுக்குத் தெரியாத சல்லாத்துணி போல் மூடுபனி என பனியின் பரப்பை துணி போல் இருப்பதாக உவமை கூறுகிறார். சித்தார்த்தரின் சிரிப்பொலியை, பூரண நிலவு பொங்கி எழுந்தது போல் சிரிப்பு வந்தது எனக் குறிக்கிறார். அங்கம்மா என்னும் பெண்ணின் முகத்தோற்றத்தைக் குறிப்பிடும் போது,

"முதல் மழைத் தூறல்
விழுந்த தரையாய்
அம்மைவடுக்கள் தூவிய முகம்"[38]

என உவமைப்படுத்தியுள்ளார் என வான்வெளி அழகை உவமைப் படுத்தியுள்ளமை ஆராயத்தக்கதாகும்.

**மரம், செடி, கொடி**

மரம், செடி, கொடி, இலை, பூ, காய், கனி என உவமைப் பொருள்களை அமைத்துள்ள விதம் ஆராயத்தக்கதாகும். இவைகளோடு மனித வாழ்க்கையும் இணைந்துவிட்டதால், இவையும் கவிஞனின் கருத்திற்கேற்ற உவமைகளாக உருவம் பெறுகின்றன.

மலர்களிடையே நிறைந்த 'அல்லி மலரின் குளிர்ச்சியைப்போல நிலவு' குளிர்ச்சியாக இருந்தது என உரைக்கிறார். படித்தவர்களின் நிலையை விளக்க வந்த கவிஞர் 'புயல்காற்றை எதிர்த்து நிற்க முடியாமல் சாயும் சாய்மரம் போல படித்தவர் கூட்டம் பகட்டில் சாய்ந்தது' என மொழிகிறார்.

பெண்ணில் உடல் அழகை 'தேனுறும் தாமரை போல் சிவந்திருப்பாள்' என நிறத்தை உவமைப்படுத்துகிறார். மேலும்

"குங்குமப் பூவைப்
பாலிலே போட்ட மாதிரி
இருப்பா சார்"[39]

என குங்குமப் பூவிற்கு உவமிக்கிறார்.

தன் கிராமத்தைச் சேர்ந்த பாட்டையாவின் அனுபவங்களைக் குறிப்பிடும் கவிஞர் 'மளமளவென உதிரும் வேப்பம் பூக்களைப் போல பாட்டையாவின் அனுபவக் களஞ்சியம்' என அனுபவத்தால் முதிர்ந்த பாட்டையாவின் பெருமைக்கு வேப்பம்பூவை உவமிக்கிறார். அங்கம்மாவின் 'சிவப்புக் கல் தோடு நாகரிஞ்சிப்பூவைப் பறித்துப் பதித்தது போல்' இருந்தது எனக் குறிப்பிடுகிறார். கிளையில் தொங்கும் குழந்தையை,

"கிளையில் ஒரு மாம்பழம் போல்
தொத்திக் கிடந்த குழந்தையுடன்"[40]

என மாம்பழம் தொங்குவதற்கு உவமையாகக் கூறுகிறார். 'செம்பருத்திப் பூக்கள் பூத்திருப்பதைப் போல செங்கொடிகள் பூத்திருந்தன' என ஒரு மைதானத்தின் அழகை உவமையுடன் எடுத்துரைக்கிறார்.

**நீர்நிலைகள்**

ஆறு, குளம், ஏரி போன்ற நீர் நிலைகளையும் அவற்றின்

செயல்களையும் உவமை கூறுவதில் சிற்பி அலாதி இன்பம் அடைபவர் என்பதை அவரின் படைப்பான 'ஒரு கிராமத்து நதி' என்னும் நூலால் அறியலாம்.

நீரற்று வரண்டு கிடக்கும் மணல் தடத்தை இருளற்று வெறுமையாய் கிடக்கும் மின்சாரக் கம்பிகளுக்கு உவமைப்படுத்துகிறார்.

"மணல் வீடு கட்டிக்
கலைத்து விளையாடும்
மழலைப் பிஞ்சுகள் போல்
வாழ்க்கையும் உனக்கொரு
விளையாட்டு"[41]

என வாழ்க்கையை மணல் வீடாக நினைத்தார் கவிஞர் கண்ணதாசன் எனக் குறிப்பிடுகிறார். திருவிக்ரமர், ஆதிரை இருவரின் திருமணத்திற்கு 'மக்கள் கூட்டம் வெள்ளம் போல் திரண்டது' என உரைக்கிறார். இயற்கையின் சீற்றத்தை, 'கடல் வீட்டுக்குள் வந்து விட்டது போல காற்றடித்தது' எனக் குறிக்கிறார். நெல்மணிகளுக்காக குருவிகள் துண்டுபட்ட அருவிகள் போல் குரலெழுப்பின எனக் குருவிகளின் குரலொலியை அருவி விழும் ஒலிக்கு உவமிக்கிறார்.

அருவியில் உள்ள நீர் வழுக்கி விழுவதைப் போல பாம்பு வழுக்கி மற்றொரு கிளைக்கு சென்றது. நீர் ஓட்டம் பாம்பு ஓட்டத்திற்கு உவமையாக்கப்பட்டுள்ளது. நதியின் அழகைக் கூறுகையில்,

"பளிங்குக்கல் பதித்து

அதன் மேல்

பட்டு விரித்தது போல்

ஓர் இளம் நதியை"[42]

எனக் குறிப்பிடும் விதம் ரசிக்கத்தக்கதாகும். 'நதி எப்படி ஓடிக் கொண்டிருக்கிறதோ அதுபோல காலமும்' என ஓடுகின்ற நதிக்கு காலத்தை உவமையாக்குகிறார்.

மடையினை உடைத்து வெள்ளம் மண்ணிடைப் பாய்வதைப் போல உடலில் உணர்ச்சி வெள்ளம் பாய்ந்தது என உரைக்கிறார். மீன்பிடிக்கச் செல்லும் படகுக் கூட்டம் அலைகடலில் ஆடுவது மதுக்குடித்தவன் தள்ளாடும் நடைபோல் உள்ளதாக உவமிக்கிறார். அலையில் இருந்து தெளிக்கும் துளி முத்துச்சிதறல் போல் இருந்ததாக மொழிகிறார். பாரதியாரின் கவிதையைப் பற்றிக் கூறப்புகுந்த கவிஞர் தெளிந்த அருவியை போல நீரோட்டக் கவிதை தந்தவன் என உரைக்கிறார். வள்ளுவன் செய்த திருக்குறளின் பெருமையைக் கூறிய கவிஞர்,

"குற்றால அருவியைப் போல்

கொட்டுகின்ற சொல் வன்மை"[43]

என திருக்குறளில் கையாளப்பட்டுள்ள சொற்திரத்தைக் கண்டு வியக்கிறார். கடலில் முத்தெடுக்கச் சென்றவனின் நிலையைக் குறிப்பிட்ட கவிஞர், 'நட்டாற்றில் மண்குதிரை கரைந்ததைப்போல் நடுக்காட்டில் நள்ளிரவில் ஒளிவிளக்கு அணைந்தது' என விளக்கு

அணைந்தவுடன் அடித்த சூறைக்காற்றில் 'ஏழைக்குடிசை விழுந்ததைப்போல்' படகு தூள் தூளாக நெருங்கியது என்று முததெடுக்கச் சென்ற தென்னனின் நிலையை உவமைகளால் அடுக்கிக் கொண்டே செல்கின்ற கவிஞனின் சொல்வன்மை சாலச் சிறந்ததாகும்.

**உயிரினங்கள் பற்றிய உவமைகள்:**

காட்டு விலங்குகளான சிங்கம், புலி, யானை, குரங்கு, மான், பாம்பு பற்றிய உவமைகளும், பறவைகளான புறா, அன்னம், பட்டுப்பூச்சி, மயில், அன்றில் போன்றவற்றைப் பற்றிய உவமைகளும் கவிஞர் சிற்பியின் கவிதைப் படைப்புக்கு மெருகூட்டுகின்றன எனலாம்.

**விலங்கு பற்றிய உவமைகள்:**

புல்வெளியில் 'மான்கள் துள்ளித் திரிவதைப்போல் விணைகளின் மேல் அப்துல்கலாமின் விரல்கள்' துள்ளித் திரிந்தன என உவமை கூறுகிறார். பச்சைப் பாம்புகள் போல் நீரில் பாசிகள் நீண்டிருக்கின்றன என உவமிக்கிறார். 'காட்டுயானையின் தந்தக் கூர்மை போல தத்துவக் கூர்மை' இருந்தது என்கிறார். பீடிக்கட்டிலிருந்து பீடியைத் திருடி ஊதும் மலையப்பசாமியின் செயலை,

"பச்சை நூல் பீடியை
பல்லியைப் போல் நாசூக்காய்ப்

பல்லில் பற்றிக் கொண்டு

யோகியைப் போல்

மூக்கு நுனியில் பார்வை குவித்து”[44]

என பீடி ஊதும் முறையை உவமைகளால் அடுக்கிக் கொண்டே செல்கிறார் கவிஞர். ஒரு கிராமத்து நதியில் குறிப்பிடப்படும் வள்ளியாத்தாள் என்னும் பெண்ணின் நிறத்தை, சிவலைப் பசு மாதிரி இருப்பாள். அந்தக் கிராமத்துக்கே அன்னியம் போல் அவ்வளவு சிவப்பு என அழகை உவமை கூறுகிறார். முதுமைநிலை எய்தி வீட்டில் ஓய்வெடுக்கும் பெரியசாமியை பட்டுப்பூச்சிக்கு உவமை கூறுகிறார் களைத்துப்போன பட்டுப்பூச்சி ஓய்வெடுப்பது போல் களைப்பால் கண்களை முடித் திறந்தார் என்று அவரின் செயலை உவமிக்கிறார். மனம் படும் பாட்டை,

“கல்லடிபட்ட பாம்பு போல்

உன் மனம் துள்ளித் துவளுகிறதே”[45]

என பயத்தினால் துடித்த மனதை பாம்புக்கு ஒப்பிடுகிறார். பொறுமையற்றவர்கள் சுற்றிக் கொண்டிருப்பதைப் போல சருகுமான் சுற்றிக் கொண்டே வந்தது எனக் குறிப்பிடுகிறார். ஞானியின் அருகில் நின்ற சருகு மானைப் பற்றிக் கூறுகையில்,

“மான்போல் முகம்

காட்டுப் பன்றி போல் கால்கள்

முள்ளம் பன்றி போல்

முதுகில் அடர்த்தி”[46]

என உவமைகளால் அடுக்கிக் கொண்டே செல்கிறார் கவிஞர். தமிழ்மொழியின் பெருமையையும் அதன் அழியாத கன்னித் தன்மையையும் இளந்தமிழே என்னும் கவிதையில்,

> "கூண்டினை உடைத்தெழுந்த சிங்கம் போலக்
> குளிர்பொதிகைத் தென்தமிழே! சீறி வா, வா!"[47]

என எத்தடைகளையும் உடைத்து தளைக்கும் மொழி தமிழ் என்று கூறி அதன் பெருமையை நிலைநாட்டுகிறார். பெண்ணின் அழகை வருணிக்கையில் 'இளமானைப் போல் சதிமித்தாடி நின்றாள்' எனக் குறிக்கிறார். 'பூனையில் விழிகள் இருளில் புதையுண்டதைப் போல விண்மீன்களும் மின்னி மறைந்தன' என உரைக்கிறார்.

'மரக்கிளையில் இருக்கும் செங்கனியை மந்தி கவர்ந்து உண்ணுதலைப் போல மாயத்தேவன் உயிரைக் கவர்வான்.' கனி அப்பருவம் எய்தியவுடன் பறிக்கப்படுவதைப் போல அவ்வேளை வந்தவுடன் உயிரும் பறிக்கப்படும் எனத் தோன்றும் உயிர் மறைவது நிச்சயம் என்னும் தன்மையைப் புலப்படுத்துகிறார். 'வேங்கைப் புலிகள் பல ஒன்று கூடி ஒரு மான் கன்றை அறைந்து கொல்லுதலை மண்ணைக் கிளப்பிக் கொண்டு பேரலைகள் வந்தன' என மொழிகிறார். உடல் சிலிர்த்து எழுந்து பெருமூச்சுவிடும் நாகம் போல் பெருமூச்சு விட்டாள் அல்லி என்று சீறுவதையே தொழிலாகக் கொண்ட நாகத்தோடு ஒப்பிடுகிறார். ஒரு விலைமகள் தன் பரிதாபமான நிலையைக் கூறுமிடத்து, 'குருவியின் அலகுப் புழுப்போல் கொத்தி குதறினான்' எனப் புனைகிறார். குருவியின்

வாயில்பட்ட புழு படும் நிலை தான் ஆடவனிடம் சிக்கிக் கொண்ட என் நிலையும் என அப்பெண் எண்ணி வேதனைப்படுவதாக மொழிகிறார் ஆசிரியர்.

**பறவைகள் பற்றிய உவமைகள்**

பறவைகளை பிறவற்றுடன் ஒப்பிட்டு உவமை கூறுகின்றனர் கவிஞர்கள். அதைப் போல கவிஞர் சிற்பியும் பிறவற்றுடன் ஒப்பிட்டு சிறப்பான உவமைகளை எடுத்துக்கூறும் தன்மையை இவ்வாய்வால் அறியலாம். ஒரு சகோதரியின் மரணச் செய்தியை அறிந்த சகோதரனின் நிலையை கவிஞர் சிற்பி குறிப்பிடும்போது, 'கூடுவிட்டுத் திரும்பிய பறவையைக் குறிபார்த்த கவண் கல் போல்' எனக் குறிக்கிறார். பொன்னி ஆற்றின் ஓட்டத்தைக் 'அசைந்து அசைந்து அன்னம் போல நடக்கும் பொன்னி' என மொழிகிறார். மலைச் சாரலில் ஏற்படும் மேக மூட்டத்தைக் கண்டு மயில் தோகை விடுத்தாவது நீல மலர் போல காட்சியளிப்பதாக உவமிக்கிறார்.

நம் தாய் நாடு பிறரிடம் அடிமைப்பட்டு நடுங்கிக் கிடக்க வேண்டாம். முன்னர் அடிமைப்பட்டுக் கிடந்ததை நினைத்தால் இதயமே நடுங்குகிறது.

> "ஒருங்கு குறிபார்க்க ஒடுங்கிய புறாப்போல்
> நடுங்கிக் கிடந்ததே நமது தாயகம்"[48]

என ஆதிரையில் திருவிக்ரமனின் நாட்டைப் பற்றிக் கூறுகிறார்.

புன்னகையை உவமித்த கவிஞர் ‘புறாவின் சிறகுபோல் மெத்தென்ற புன்னகை’ என்கிறார். திருவிக்ரமனும் ஆதிரையும் அன்றில் பறவைகளைப் போல நன்றாக கூடி வாழும் நாளை எதிர்பார்த்து வரவைக் காத்திருந்தனர் என்கிறார். என புறா, அன்னம் போன்ற பறவைகளை உயர்வான உவமைகளால் குறிப்பிட்டிருப்பது கவிஞரின் புலமைத்திறனைக் காட்டுகின்றது.

**உருவகச் சிறப்பு**

ஒன்றிலிருந்து மற்றொன்றை உருவகப்படுத்துவது உருவகமாகும். கவிதைகளில் உருவகம் சிறப்பிடத்தைப் பெறுகிறது எனலாம். மாந்தரின் உடலை பிறவற்றொடு உருவகப்படுத்துவது சிற்பியின் படைப்புகளில் பரவிக் கிடக்கின்றன. பெண்ணின் உடல் உறுப்புகளை உருவகப்படுத்தும் உருவ வருணனையை அறியமுடிகிறது.

**மாந்தர் பற்றிய உருவகம்:**

பெண்ணின் ஒவ்வொரு உறுப்பையும், மலர்விழி, மயிலொருத்தி, கொவ்வையிதழ், பொன்முகம், பொன்மேனி, மாங்கனியின் கன்னம், இருட்கூந்தல், அடை மழைக் கூந்தல், விரலெனும் காந்தள், கவிதைப்பெண், மனவண்டு, மணிவிரல், மலர்க்கை, தாமரைப்பூ மேனி, கார்குழல், மணிவயிறு, சங்குக் கழுத்து, புனலாய் விழும் கூந்தல், மலர்முகம், தாமரை இதழ்கள், வாழ்க்கைப் புத்தகம், சடையூஞ்சல், விழிகடல், கொடிக்கரம், மாதுளைம் பூ நாக்கு, நிலாக்கிழவி, தங்கத் தட்டு வயிறு,

குத்துவிளக்குத் தண்டு கால்கள், வனபுஷ்ப விழிகள், சிற்பமேனி, வாழைப்பூமேனி, ஆராமீன்கால்கள், ரப்பர் உதடுகள், கோதுமை நிறப்பெண், சொல் மழை, உயிர்ப்பறவை, ஈட்டிப்பார்வை, வார்த்தை சாட்டை மதிமுகம் என மனிதர்களைப் பற்றிய உருவகத்தைச் சொற்களால் தீட்டியுள்ளார்.

**இயற்கை பற்றிய உருவகம்:**

இயற்கைப் பொருட்களை பிறவற்றொரு உருவகப்படுத்தியுள்ளமை பற்றிக் காணலாம். கடல் அலையை, அலை நாய், அலைக்குதிரை எனவும் குறிப்பிடுகிறார். கவிதை மரம், மலர்க்கவிதை, இசைமழை, நிலவுத் தொட்டில், மேகக் குதிரை என உருவகப்படுத்தியுள்ளார். மனிதர்கள் பற்றியும் இயற்கைப் பொருள் பற்றியும் மிகுதியான உருவகங்களைப் பயன்படுத்தியுள்ளார் கவிஞர் சிற்பி.

**குறியீடு:**

கவிஞர் தான் கூறக் கருதிய கருத்தை ஏதேனும் ஒரு குறிப்புப் பொருள் கொண்டு விளக்குகிறான். அதுவே குறியீடு ஆகும். கவிதைக் குறியீடு குறிக்கப்படும் பொருளை நேரடியாகவோ மறைமுகமாவோ உணர்த்தும். "புதுக்கவிதைத் துறையில் மிகுதியும் வழங்கி வந்த சிம்பல் (Symbal) என்னும் சொல்லுக்குத் தமிழ்ச் சொல் தேவைப்பட்டபோது ஆளப்பட்ட சொல்லே குறியீடு என்பது இச்சொல் முன்பே தமிழில் வழங்குவதாயினும், பெயர், பெயரிடுதல்

என்னும் பொருளிலேயே ஆளப்பட்டு வந்தது. எழுத்து இதழின் கால கட்டமாகிய அறுபதுகளில் தான் குறியீடு, இலக்கிய உத்தியைக் குறிக்கும் கலைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டது"[49] இன்று புதுக்கவிதைத் துறையில் குறியீடு என்னும் உத்தி சிறந்த வரவேற்பைப் பெற்று பரவலாக எல்லாக் கவிஞர்களாலும் கையாளப்படுவதைக் காணலாம். குறியீட்டு முறையில் சொல்லப்படும் கவிதை படிப்போருக்கு அக்கருதை அக்குறிப்பொருளுடன் அறிய இயல்பாக உள்ளது.

"சிம்பல் என்னும் ஆங்கிலச் சொல், ஒன்றுசேர் (to put together) என்னும் பொருளுடைய சிம்பலேன் (symballein) என்னும் கிரேக்க வினைச் சொல்லிலிருந்தும் 'சின்னம்' (Mark) அடையாளம் (token), குறி (sigh) என்னும் பொருளுடைய சிம்பலன் (symbolen) என்னும் பெயர்ச் சொல்லிலிருந்தும் தோன்றிய சொல்லாகும்"[50] எனக் குறியீடு என்பதற்குப் பல்வேறுபட்ட பொருள் விளக்குவர் ஆய்வாளர்கள்.

கவிஞர் சிற்பியின் குறியீட்டுக் கவிதைச் சிறப்பை அவரின் 'சர்ப்ப யாகம்' என்றும் பெயரிலேயேக் காணலாம் 'சர்ப்பயாகம்' என்பது குறியீட்டுப் பெயர். சிற்பியின் இக்குறியீட்டுத்திறன் போற்றத்தக்கதாகும். பரமபதம் விளையாடும் வரைபடம் தான் நம் தேசம் என்றும் அதில் கட்டங்கள் தோறும் காத்துக்கிடக்கும் நச்சுப் பாம்புகளான ஆதிசேஷன், கார்க்கோடகன், கண்ணாடி விரியன், கொம்பேறி மூர்க்கன், சாரைகள், வாசுகிப்பாம்புகள் என நாட்டைக்

கெடுத்து பொருள் தேட நினைக்கும் எத்தர்களையும், இலாபத்தையே நோக்கமாகக் கொண்டு தீய செயல்களில் ஈடுபடுபவர்களையும், ஏழையின் கண்ணீரில் வாழ நினைக்கும் துரோகிகளையும், நியாயமான வழியில் பொருள் சேர்த்து முன்னேர நினைப்போரின் முன்னேற்றத்தைத் தடுக்கும் திருட்டுச் சாரைகளையும் தம் கவிதையில் அநீதியின் குறியீட்டுப் பொருளாக்கியுள்ளார்.

'சிகரங்கள் பொடியாகும்' என்னும்தலித்தியக் கவிதையில் சிறந்த குறியீட்டு முறையைப் பயன்படுத்தியுள்ளார்.

"ஏதுடா பேச்சு ஒரு மாதிரியா இருக்கு
உதட்டுக்கு மீறின பல்லுமாதிரி
ஏளனக் கூர்மை தீட்டிய
பாளைக் கத்தியாய்ப் பாய்ந்தது
ஒரு சொல்"[51]

தன் தகுதிக்கு மீறிய சொல்லுக்கு உதடுக்கு மீறிய பல் என்பதை குறியீட்டுப் பொருளாக்கியுள்ளார்.

"இரவு... தன் மேனி முழுதும்
கதகதப்பான
மருதாணியிட்டுக் கொண்டது
நட்சத்திரங்கள்"[52]

என்று இரவின் நிறத் தன்மையை மருதாணிக்கு குறியீடாக்கியுள்ளார். காட்டில் ஓங்கி உயர்ந்து அடர்ந்து வளர்ந்திருக்கும் மரங்களின் தன்மைகளை,

"அந்தக்காடு

தேக்குகள் தோள் உயர்த்தும்

வாகைகள் வாள் நிமிர்த்தும்

காடு!

அங்கு நிழல்கள்கூட நிஜங்கள் ஆகும்

புயல்கள் உருவாகும்"[53]

குறியீட்டுப் பொருளாக்கியுள்ளார்.

'மௌனமயக்கங்கள்' என்னும் தொகுதியில், விலைமகளின் நிலையை

"நீ என்னையே பார்த்தபடி

'மோனாலிசா'

ஓவியமாக அமர்ந்திருந்தாய்"[54]

என்று அப்பெண்ணை மோனாலிசா ஓவியத்திற்கு குறியீடாக்கியுள்ளார். கற்பை விலைபேசி விற்றுவிட்டு வந்த விலைமகளைப் பார்த்து வானம் கண்ணைச் சிமிட்டியதென, கூறுகையில்,

"நான் வீடு திரும்புகையில்

கற்பு வானத்து அருந்ததியாய்

கண்ணைச் சிமிட்டிக் கொண்டிருக்கும்"[55]

பெண்ணின் கற்பிழந்த நிலையை அருந்ததிக்கு குறியீடாக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். 'புன்னகை பூக்கும் பூனைகள்' என்பது குறியீட்டுத் தலைப்பாகும். நாட்டில் நீதிகளை அழித்து அநீதிகளைப் பெருக்கும் அக்கிரமக்காரர்களை பூனைக்கு குறியீடாக்கியுள்ளார்.

இவற்றை கறுப்புப் பூனைகள் மேனி செழித்து வளமாய் வளரும் எனக் குறிப்பிடுகிறார்.

தான் ஆசையாய் வளர்த்த செடி இயல்பாய் தலைகுனிவதை மூக்குத்தி போட்ட நகரப் பெண்ணுக்கு குறியீடாக்கியுள்ளார்.

“மூக்குத்தி போட்ட
நகரத்துப் பெண்ணாய்
மெல்ல முகம் மறைத்து
நாணிச் சிணுங்கும்”[56]

இயல்பாக வளர்ந்து பணியும் செடியை நாணத்தின் குறியீடாகக் குறிப்பிட்டுள்ளார். காட்டில் தான் மனிதன் முதல் முதல் வாழ்ந்து அனைத்தையும் பழகிக் கொண்டான் என்பதை,

“இயற்கை வனைந்த
இந்தக் காடுதான்
எழில் மிகு மனிதனின்
ஆதிக் கருப்பை”[57]

எனக் காடுதான் மனிதனின் ‘கருப்பை’ எனக் குறிப்பிட்டுள்ளார். காட்டில் இயற்கையாக வளர்ந்திருக்கும் பனைமரத்தை மனிதனின் மயிர்கால்களுக்குக் குறியீடாக்கியுள்ளார்.

“முடிவெட்டிக் கொண்ட
கோலத்தில்
ஒரு ஒற்றைப் பனைமரம்”[58]

எனக் குறியீட்டுப் பொருளாக்கியுள்ளார் கவிஞர். மனிதனின் இன்ப, துன்பம் நிறைந்த வாழ்க்கைக்கு பலாப்பழத்தை குறியீடாக்கியுள்ளார்.

"மானிட வாழ்க்கை போல்
இல்லையா பலாப்பழம்?
முள்போல் துயர்கள்
பசின்போல் பற்றுக்கள்
சடைபோல் தசைகள்
கொட்டைபோல் ஆணவம்
சுளை போல் குணம்"[59]

வாழ்வின் ஒவ்வொரு அம்சத்தையும், பழத்தின் ஒவ்வொரு உறுப்பிற்கு ஒப்பிடுகிறார். முருங்கை மரம் இயற்கையாகக் காற்றில் அசையும். அதை, இடிந்து சிதைந்து கொண்டிருந்த வீட்டில்

"இடிந்து சிதைந்து கொண்டிருந்த வீட்டில்
ஒரு கொல்லைப் புறம்
அடிதடிக்கு வருவது போல்
முருங்கைமரம் ஒன்று பிசாசாய் ஆடும்"[60]

முருங்கை மரம் பேயாட்டத்திற்கு குறியீடாக்கப்பட்டுள்ளது.

காற்று செய்யும் அற்புதங்களை,

"பச்சைக் கிளிகளைப் போல்
பலா இலைகள் பறக்கவும்
மஞ்சள் கிளிகளைப் போல்

தாழம்பூக்கள் சிறகடிக்கவும்

விந்தைகள் செய்யும் மோகினி வா"[61]

எனக் காற்றை மோகினியாகக் குறிப்பிடுகிறார். நதியின் முடிவிலாத் தன்மையையும் உணர்த்தவும், அது மக்களுக்கு எவ்விதம் பயன்பாடு உடையதாய் இருக்கிறது என்பதை உணர்த்தவும்,

"மரியாதைக்குப் போட்டிருக்கும்

மாராப்பு சேலையே

இந்த நதிதானே?"[62]

என மானம் காக்கும் குறிப்புப் பொருளாக நதியைக் குறிப்பிடுகிறார். இரத்தத்தின் குறியீடுகளாக காதல் சின்னமான தாஜ்மகாலும், உலக அதிசயமான பிரமீடும் இருக்கின்றன என்பதை,

"ஏழைகளின் கண்ணீரையும்

இரத்தத்தையும் குடித்த

எதேச்சாதிகாரிகளால் தான்

எகிப்து நாட்டின் பிரமீடுகளும்

யமுனை கரைத் தாஜ்மகாலும்

எழுந்தது என்பர்"[63]

எனத் துயரத்தின் குறியீடுகள் இவை என்கிறார். அவலத்தின் குறியீடாக அகலிகையைக் குறிப்பிடுகிறார்.

"தந்தைக்கு அவள் ஒரு

பந்தயச் சரக்கு

காமுகனுக்கு அவள்

இரவில் பாக்கு

கணவனுக்கோ அவள்

யந்திர உறுப்பு"[64]

என ஆண்கள் பார்வையில் பெண்கள் போகப் பொருளாவதால், ஆசிரியர்கள் பார்வையில் இவள் அவலத்தின் குறியீடாகவே குறிப்பிடப்படுகிறாள். 'தேவயாணி' என்னும் கவிதையில் தேவயாணி என்னும் பெண் அவலத்தின் குறியீடாகப் படைக்கப்படுகிறாள். தன் தந்தைக்கும், காதலனுக்கும் இடையில் சிக்கிக் கொண்டு, அன்பில் கட்டுப்பட்டு பரிதவிக்கும் அறியமுடியும்.

"அந்தி வரு முன்பே

அந்தக் கிராமம்

இருளத் தொடங்கியது"[65]

என கிராமத்தில் நடந்த கொடூர சம்பவங்களால் அக்கிராமமே தன்னிலை மறந்திருப்பதை இருள் என்னும் குறியீட்டால் குறிக்கிறார்.

**படிமம்:**

படிமம் என்பது தான் கண்ட பொருளை அப்படியே காட்சிப் படுத்துதல், கவிஞன் தான் கண்ட காட்சிகளையோ அல்லது எண்ணங்களையே அப்படியே எழுத்துருவம் கொடுத்து படிப்போர் மனக்கண் முன் படைத்துக் காட்டுதலே படிமம் எனப்படும். கவிஞன் ஒரு பொருளை காணுகின்ற பொழுது அவனுக்கு சில எண்ணங்கள் உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. அப்பொருளைத் தன் கவிதையில் படைக்கின்ற வகையில் கவிஞன் அடைந்த எண்ணங்களை,

உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கச் செய்கின்றான். அப்பிரதிபலிப்பே படிமம் எனப்படும்."[66]

"படிமம் என்பது குறியீடு, கருத்தை, கூட்டை, இணைவை இது குறிக்கும். காலப்போக்கில் அதன் ஒரு பகுதியைக் கண்ட அளவில் முழுவதையும் குறிக்குமளவு ஒன்று மற்றொன்றிற்குக் குறியீடாவதே படிமமாகும்."[67]

புதுக்கவிதையில் படிம வளர்ச்சி நிலையில் மூன்று கட்டங்களைக் காணமுடிகிறது. தொடக்க காலக் கவிஞரான நா. சுப்ரமண்யம், ஹீயுமின் படிமக் கவிதைகளை மொழி பெயர்த்தார். சி.சு.செல்லப்பா, எஸ்ரா பவுண்டின் படிமக் கவிதையை மொழி பெயர்த்தார். இதனால் மேலை நாட்டில் படிமவியல் அறிமுகம் இருந்ததை அறியலாம். முதல் கட்டத்தைச் சார்ந்த படிவியல் கவிஞர்களாக ந. பிச்சமூர்த்தி, தருமுசிவராமு, சி.மணி, எஸ்.வைத்தீஸ்வரன், பசுவய்யா, தி.சோ.வேணுகோபாலன், இரா.மீனாட்சி, துரை.சீனிச்சாமி, ஞானக்கூத்தன் போன்றோர்.

மரபுக் கவிதையில் ஈடுபாடு கொண்டு பின் புதுக்கவிதைத் துறையை நாடிவந்த கவிஞர்கள் இரண்டம் காலகட்டத்தில் மிகுதியாக இடம் பெறுகிறார்கள். நா. காமராசன், மீரா, சிற்பி, அபி, அப்துல்ரகுமான், புவியரசு, இன்குலாப், தமிழன்பன், மு.மேத்தா, வைரமுத்து போன்றோர் ஆவர்.

மூன்றாம் காலகட்டக் கவிஞர்களாக தேவதேவன், கலாப்ரியா, பிரம்மராஜன், கல்யாண்ஜி, அகல்யா, இந்திரன்,

இ.முத்துராமலிங்கம், வாலி, முருகுசுந்தரம், அறிவுமதி, தேனரசன், ஏ.தெ.சுப்பையன், அறிவுமணி, மேமன்கவி, ஆ.வே. முனுசாமி, ஆர்.எஸ்.மூர்த்தி, க.இளங்கோவன், தனஞ்செயன், கி.ஸ்டாலின், இந்திரன் போன்றோர் படிமங்களை மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர்.

சிறிதுநேரம் மகிழ்வைத் தந்து பின் தன் உடலையே கருக்கிக் கொள்ளும் சிகரெட்டை,

"ஒரு கணம் பழுத்து
மறுகணம் உதிரும்
சிறுசிறு சிவப்புக்
கனிகளின் தோட்டம்"[1]

என உதிரும் நெருப்புத்துண்டை சிவந்த கனிகளாகப் படிமப் படுத்துகிறார். கண்ணாடிப் பாத்திரத்தில் வைத்த பொருள் வெளியில் தெரிவதைப் போல சொல் தெளிவாகப் பளிச்சிடுகிறது என்று,

"கண்ணாடிச் சொல்
கிண்ணங்களில்
பளிங்குக்குள் ஒரு
பளிங்கான
திரவமாய்த் தெளிந்து"[68]

சொல்லைக் காட்சிப் படிமப்படுத்துகிறார் கவிஞர் சிற்பி. வேனில் கால வெப்பத்தால் தார்சாலை குழையும் தன்மையுடையதாக ஆக்கும் நிலையை,

"இலையுதிர் கால வானம்

சூர்ய ஊசிகள் பாய்ச்சும்

தொழுநோய் உடலாய்க்

குழையும் தார் ரோடு"[70]

என சூரியனின் பார்வையால் இழையும் தார்ரோடு எனக் காட்சிப் படிமப்படுத்துகிறார். மழைக்காலங்களில் தெருவெல்லாம் காளான் முளைக்கும் நிலையை,

"தெருவெங்கும்

கறுப்பு குடைக் காளான்"[71]

என காட்சிப்படுத்தியுள்ளார். வடிவங்களால் படிமம் அமைக்கும் முறை எழுதும் முறையால் உருவத்தைக் காட்ட முயல்வதாகும். இதைச் சித்திரகவி, மறைகவி என்று குறிப்பிடுவார்கள். சக்கரம், பாம்பு, முரசு முதலான வடிவங்களில் சித்திரகவி தமிழில் உள்ளன. இவை போன்று ஆங்கிலத்திலும் உள்ளன.

"தருப்பூசணிக் கீற்றுகளைச் சுற்றி

சிறகு முளைத்த விதைகளாய்

ஈ ஈ

ஈ ஈ"[72]

என்பதன் மூலம் ஈக்கள் பறப்பதாக படிமப்படுத்துகிறார் ஆசிரியர். உணவு இல்லாத வறுமை நிலையை, பத்தினிப் பெண்ணைப்போல ஒன்றிரண்டு பருக்கைகள் எனக் குறிப்பிட்டு, காரணம் தெரியாத பத்தினிப் பெண் விழிப்பதைப் போல அப்பருக்கைகள் வழித்ததை,

"வண்டிக் கூலிக்காரன்

அலுமினிய அட்சய பத்திரம் திறக்க

அடிவாரத்தில்

பத்தினிப் பெண்களாய்க் கண்சிமிட்டும்

பழைய சோற்றுப் பருக்கைகள்."[73]

என சில சோற்றுப் பருக்கைகளுக்குப் பத்தினிப் பெண்ணைக் காட்சிப்படுத்துகிறார் கவிஞர்.

"கொதிக்கும் வெயில்

கொப்பரை எண்ணெயில்

பொரிந்து சிதறும்

மனிதக் கடுகுகள்"[74]

இதில் வெப்பத்தின் மடியில் தவிக்கும் மனித வாழ்வு சித்தரிக்கப்பட்டுள்ளது. கொதிக்கும் எண்ணெய் கொப்பரையாகிறது. சூரிய வெம்மையில் அவதிப்படும் மனிதகுலம் எண்ணெயில் பொரிந்து சிதறும் கடுகாகின்றது. இயற்கையின் சீற்றத்தைத் தாங்கவியலா மனித வேதனை ஒரு சமையலறைக் காட்சியாக வடித்துக் காட்டப்பெறுகின்றது.

"சூரியக் கோப்பை கவிழ்ந்த

வெப்ப மதுத் திரவப் போதையில்

இறங்கித் துயிலும் உலகம்

வெயில் ஜரிகைப்

பொன்னாடை போர்த்துக் கொண்டு"[75]

இங்கு சூரியன் மதுக்கோப்பையாகிறது. அது கொட்டிக் கவிழ்ப்பது மதுத் திரவமாகிறது. அதை உண்டு உறங்கும் மனிதக்கூட்டம் போர்த்திக் கொள்வது, வெயில் ஜரிகைப் பொன்னாடையாகிறது. மதுவின் சுவையும், வெயிலின் நிறமும் புலன் உணர்வுகள் அடிப்படையில் அமைகின்றன. வெயிலின் கொடுமையைத் தாங்காத மனித இனம் கிறக்கத்தில் துயில்கிறது. அது தூங்குவது மதுவின் போதையில் அல்ல. ஒரு தாங்கவியலாத வெப்பத்தில் என்பதை அருமையாகக் காட்சிப்படுத்துகிறார். புதுக்கவிதைக்கு ஒப்பீட்டு வளத்தை உருவாக்குபவை இப்படிமங்களே

"அதிசயமாய் விரிந்த வனபுஷ்ப வழிகள்"[76]

என கண்களை மலர்களாகக் குறிப்பிடுகிறார். அழகுணர்வு காட்சிகளையும், இயற்கைக் காட்சிகளையும் கொண்டு படிம உத்தியை மேற்கொள்வதைவிட, ஒரு சமூக அவலத்தை வெளிக்கொணர படிமக் காட்சியை பயன்படுத்துவதன் மூலம், சரியான சமூக நோக்கத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

"எங்கோ சில சில
ஏணிகள் அவற்றில்
ஏறி நிமிர்ந்தவுடன்
சீறிய உங்கள்
விஷ நாக்குகளின்
ஈரத்தில் வழுக்குகிறோம்"[77]

முன்னேற வேண்டுமென்று முயற்சி இருந்தாலும் சமுதாயம் கீழே கொண்டு வந்து தள்ளிவிடுகிறது. ஏணிப்படிகளில் ஈரமிருப்பதால்

ஏறமுடியாது. வழுக்கும். சமூகத்தின் அநீதியை விச நாக்குகளாக்கிக் காட்டும் போது அவருடைய படிமக் காட்சியின் நோக்கம் சமூக இயல்பைக் காட்டவே பயன்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

'நிலா மதுச்சாலை' ஓர் அழகான படிமத் தலைப்பு. நிலாவைத் தங்க நாணயமாக்கி, ஒளியை வெள்ளை ஒயினாக்கி விண்மீன்களைச் சின்னஞ்சிறிய மின்னும் சில்லறைகளாக்கியுள்ள காட்சியை,

"அந்தியின்
சிவப்புக் கரத்தில்
ஒரு தங்க நாணயம்
வந்து விழுந்தது
அழகிய கண்ணாடிக்
கோப்பை யொன்றின்
வழிய வழிய
வைக்கப்பட்டது
வெள்ளை ஒயின்
விசிறப்பட்ட
மீதிச் சில்லறைகள்
மின்னுகின்றன
கறுப்பு மேஜை மேல்"[78]

என்று முழுவதும் படிமக் காட்சியில் பளிச்சிடும் கவிதையைப் படைத்துள்ளார். வானைக் கறுப்பு மேசையாக்கிக் கவிதை வடிப்பது அரிதான ஒன்றே.

**வியட்நாம் போராட்டம்**

வியட்நாம் என்ற பொதுவுடைமை நாடு மேற்கொண்ட போராட்டத்தில் எல்லோரும் நெஞ்சைப் பறிகொடுத்து உருகிய காட்சியையும், அமெரிக்க ஏகாதிபாத்திரத்தின் கொடுமையையும் வரலாற்றில் மறந்திருக்க முடியாது.

"மெகாங்நதி வண்டலிட்டோடும்
பட்டுப் பூச்சிகளின் பூமியில்
அரக்கப் பறவைகள் விதைத்த
உருக்குத் துணுக்குகள்
ஒருநாள் புறப்பெடுத்தன
கரிக்கரிவாளும்
சம்மட்டியுமாக"[79]

அமெரிக்க விமானங்கள் பொழிந்த குண்டு மழையை அரக்கப் பறவைகளாக்கி, குண்டுகளின் சிதைவுகளை உருக்குத் துணுக்குகளாக்கி ஒரு பொதுவுடைமை சின்னமாக, அந்நாட்டின் இலட்சிய உறுதிப்பாட்டை அச்சின்னங்களில் முடித்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**சிலுவை பற்றிய படிமம்**

ஏசுபிரானை அறைந்த சிலுவை மரத்தை கொடி மரமாகவும், கட்டுமரமாகவும், தூக்கி மரமாகவும், கைகாட்டி மரமாகவும், விளக்கு மரமாகவும் காட்டிய படிமக் காட்சியைக் காணும்போது,

"நாயகனார் பொன்மேனி
ஆணிகளில் தொங்க வைத்து
உயிர் பறக்க விட்டதால்
சிலுவை மரம்
கொடிமரம் ஆயிற்று
புவியில் கனத்த
பாவக் கட்டுகள்
தெறித்து விழுவதற்குப்
பூவுடலை சிலுவை தனில்
கட்டுப்படக் கொடுத்த காரணத்தால்
சிலுவை ஒரு
கட்டுமரம்"[80]

எனத் 'துயரச்சிலுவைகள்' என்னும் கவிதை முழுவதும் படிமத்தால் காட்சிப்படுத்துகிறார்.

**வேளாண் தொழில் பற்றிய படிமம்**

வேளாண் தொழில் பற்றிய அனுபவங்களிலிருந்து நிறையப் படிமங்கள் உருவாகியுள்ளன. இதில் இலக்கியங்களை கலப்பைகளாகக் காணுகிறார் சிற்பி.

"வாழ்க்கைச் சூரியனின்
கிரண அனுபவங்கள் பாயும்படி
அடிமன் கிளறி
மேல் மண் ஆக்கியும்

நசிவு இலக்கியக்

களைகளின் ஆணிவேர்

அடியோடு புரட்டி

அகழ்ந்து நீக்கியும்

புதுவெள்ளம் அலைகொழிக்க

விதவிதமாய்ச் சால்வடித்தும்

பசுமை மந்திரப்

பயிர்கள் செழிக்க

மனத் தரிசுகள் கீறும்

வனப்புடை வலிவுடைக்

கலப்பை இலக்கியங்கள்”[81]

என்பது வேளாண் முறையை இலக்கியத்தோடு பொருத்திக் காணும் படிமமாகும்.

**விலைமகள் பற்றிய படிமம்**

விலை மகளிர் என்பவள் சுயம்பு அல்ல; ஆண்கள் தங்களின் திணவைத் தீர்த்துக் கொள்வதற்காக ஏற்படுத்தியது நிலை.நிர்வாணத்தை விற்று ஆடை வாங்குபவர்களாகத் தான் விலைமகளிர் காணப்படுகின்றனர். விலைமாதும் ஒரு பெண் தான். அவளுக்கும் மனசு உண்டு என்பதை அறிந்து அவளின் மென்மையான உணர்வுகளுக்கு மதிப்பு கொடுத்து அவளை மணக்க நினைக்கும் ஒருவனின் இதயச் சுமை இக்கவிதை மூலம் சித்தரிக்கப்படுகிறது.

"இந்தச் சுமையை

எத்தனை நாள் சுமப்பது?

என்றாவது ஒருநாள்

இறக்கத் தான்

தீர வேண்டும்

யாரேனும்

இரக்கத்தால்

இறக்கி வைக்கத்

தோளின் சுமையல்ல

இது

நெஞ்சின் சுமை"[82]

இதில் கூறப்படும் 'சுமை' என்ற படிமம். கவிஞனின் கருத்தை வெளிப்படுத்தும் அடிக்கருத்தியல் சார்ந்த படிமமாகும். மனிதனின் மனச் சுமையை மனிதனின் அவலச் சுமையோடு ஒப்பிடுகிறார் கவிஞர்.

விலைமகள் என்று தெரிந்தும் அப்பெண்ணிடம் மனதைப் பறிகொடுத்த கதலனின் மனதில் தோன்றும் கற்பனைகளாக

"களிப்பு நுரைக்

கோப்பையே!

உன்னை நான்

ஒரு சந்தையல்

கண்டெடுத்தேன்"[83]

காதலியை கோப்பையில் பொங்கும் மதுவின் நுரையாகக் காட்சிப்படுத்துகிறார். மதுவை விரும்பும் உற்சாகத்துடன் காதலியை நோக்கும் பாங்கு காட்சியிலும் சுவையுணர்வை ஊட்டி, மதுவிலும் ஒரு மயக்கத்தைத் தந்துவிடுகிறது எனலாம்.

"ரோஜா மொக்குகள்
கண்களாய் அழைக்க
சந்தனப் பலகையில்
செதுக்கிய காஜுராஹோ
சிற்பத்துக்கு
உயிர் வந்தது போல "[84]

கண்கள் ரோஜா மொக்குகள் என்றும், காஜுராஹோ சிற்பம் பெண் என்றும் படிமப்படுத்தப்படுகின்றன. பெண்ணின் உதடுகள் உச்சரிப்பது மௌனமந்திரம், அவள் நிற்கும் காட்சி நெஞ்சை விட்டகலாத வசந்த காலக்காட்சி என்பதும் அவனது உள்ளத்தில் படிந்து போய்விட்ட உருக்காட்சிப் படிமங்களாகும்.

"மதுர வைகறைப்
பொன் ஓடம் மிதக்கும்
அடிவானச் செக்கரின்
அழகு வளையங்கள்
எனக்கு
உன் அதரங்கள்"[85]

ஒரு ஆடவனால் கடித்துக் குதறப்பட்ட விலைமகளின் அதரங்கள்

காதலன் பார்வையில் அடிவானத்தில் தோன்றும் நிறத்திற்கு ஒப்புமையாகக் காட்டப்பட்டுள்ளன.

காதலனும் காதலியும் இணைந்த நிலையை விளக்குகையில்,

"நெகிழ்ந்த சேறும்
முரட்டு விதையும்
ஒன்றில் ஒன்று
உறவு கண்டது போல!"[86]

என தன் அனுபவத்தைப் படிமமாக்குகிறார். எப்போதும் செம்பருத்திப் பூவாய் சிரித்துக் கொண்டிருக்கும் காதலியின் முகம் துன்பத்தால் பலூனாய்ப் பருத்திருந்தது எனப் படிமப்படுத்துகிறார். காதலியின் துயரம் தீராத நிலையை நட்சத்திரங்களால் துடைக்கப்பட்ட வானம் போல் முகம் இருண்டு போயிருந்தது என படிமங்களை அடுக்கிக் கொண்டே செல்லும் கவிஞரின் திறன் போற்றத்தக்கது.

விலைமகள் அந்நிலைக்குத் தள்ளப்பட்டமைக்குக் காரணம் குடும்பச் சூழல் என்பதை,

"குடும்பம் பாலத்துச் சுவரில் மோதிய
வாகனம் போல்
வறுமை பாதாள
விளிம்பில் நின்றது"[87]

என வாகனத்தை படிமமாக்குகிறார். குடைராட்டினத்தை படிமமாக

அமைக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கதாகும், காதலன் காதலியின் இதயத்தை நெருங்க முடியாமல் தவிக்கிறான். ஆனால் அவன் இதயத்தில் சேய்மையில் அவள் இல்லை. ஏதோதொலைவில் தொடமுடியாத தூரத்தில் அவள் இருக்கிறாள் என்பதை,

"நீயும் நானும்
குடை ராட்டினத்திலா
குடும்பம் நடத்துகிறோம்?
முன்னால் சடை துள்ள
குதிரைமேல் பறக்கும் உன்னை
விடாமல் துரத்தித் துரத்தித்
தொடர்கிறது என்
இதயப் புரவி"[89]

காதலனும் காதலியும் ஒருவரையொருவர் சந்திக்க முடியாத நிலையை குடைராட்டினமாகப் படிமப்படுத்துகிறார்.

"கொட்டும் மழையில்
இடி விழுந்த பனைமரம்
தீப்பிடித்துக் கொணடது போல்
என் உடலெல்லாம்
எதிர்ந்து தகித்தது"[89]

தன் உடல் அதிர்ச்சியை தீப்பற்றிக் கொண்ட பனைமரத்துடன் படிமப்படுத்துகிறார். எண்ணற்ற படிம நடையை மேற்கொண்டுள்ள கவிஞர், சிரிப்பை 'பன்னீர் செம்பு' என்பதும் நினைவுகளை கண்ணீர்

காம்புகளாகவும், மனவேதனையை சர்க்கரை பாகில் சிக்கிய வண்டாகவும் படிமப்படுத்துகிறார். புன்னகையை 'மூடிக் கிடந்த வானம் வெளிவாங்கினாற்போல் என்றும், துயரங்கள் நிறைந்த முகத்தை பாலில் ஊறிய ரொட்டி போல் இருந்ததாகவும் படிமப்படுத்துகிறார்.

**சூரியன் பற்றிய படிமம்**

வான்வெளி சூரியனின் ஒளியில் சிவந்திருப்பதை,

"காட்டின் உச்சி
சூரியக் கிரணங்களின்
முதல் முத்தத்தில் சிவந்து
பொன்னிறம் பூண்டிருந்தது"[90]

என சூரிய ஒளி காட்டை முத்தம் கொடுத்து பொன்னிறப்படுத்தியது எனக் குறிப்பிடுகிறார்.

"சூரியன் ரத்தம் உறிஞ்சிய
ஒரு பகல் பொழுதில்"[91]

என சூரியன் தன் ஒளியை உள்வாங்கிக் கொண்டு இருண்ட காட்சியைப் படிமப்படுத்துகிறார். சூரியன் மறைவதை 'குங்குமத் தாம்பாளம் கடலில் கரைந்தது' என்று கட்சிப்படுத்துகிறார்.

**மழை பற்றிய படிமம்**

இயற்கையை புராணக் கதையுடன் இணைத்துப் படிமப்படுத்துகிறார்.

"சுற்றிச் சுற்றி வந்த மழை

சகுந்தலை கடிதமாய்க்

காதல் லிபிகளை வரையலாயிற்று"[92]

மழை பெய்வது போல் வானம் இருண்டு கிடக்கும். ஆனால் பொழிவைத் தராது. அதை சகுந்தலையின் வாழ்க்கையோடு ஒப்பிட்டு குறிப்பிட்டுள்ளார். தன் வாழ்வின் அனுபவங்களைப் புது மழையாக,

"வானம் நிரம்பியிருந்த

கோப்பையில்

வாய்வைத்து அருந்திய போது

புதுமழையின் குசி"[93]

தன் வாழ்வின் எண்ணற்ற அனுபவங்கள் ஏற்பட்டிருந்தாலும் ஒவ்வொரு அனுபவமும் புதுமையானதுதான் புதுமையாக பொய்த மழையைப் போல் என்கிறார். மது அருந்துவது அன்றாடச் செயலாக மேற்கொண்டாலும், ஒவ்வொரு முறை அருந்தும் போதும் புதுமையான உணர்வைத் தரக்கூடியது என அறிய முடியும் மழைப் பொழிவைப் பற்றி குறிப்பிடுகையில்,

"மின்னல் கிழிந்த விசும்பிலிருந்து

வெள்ளை ரோஜாக்கள் உதிர்கின்றன

மழை சின்னப் பிள்ளை போல்

ஆனந்தக் கூச்சலிடுகிறது."[94]

மேலும் மழையை பூமிக்கு வரும் 'முத்துப் பல்லாக்கு' என்றும் படிமப்படுத்துகிறார்.

### பிற படிமங்கள்

மன உளைச்சலை 'ஆயிரம் யானைகளின் பிளிறல்' எனவும், நதியின் போக்கை 'பட்டத்து யானையைக் கட்டிப் போட்ட சங்கிலியாகவும்' அன்றாடம் நடக்கும் விபத்தைக் குறிக்க 'உயிரற்ற தண்டவாளம் வர்ணம் பூசிக் கொண்டது' எனவும், குன்றில் அமர்ந்திருக்கும் பாறையை 'இடுப்பிலிருந்து கைநீட்டும் குழந்தை எனவும், நிலத்தில் இருக்கும் ஈரத்தன்மையை பால் கொடுக்கும் தாயாகவும், மூடிய விழியை 'புயலை சிமிழில் அடைத்து வைத்ததுபோல்' எனவும், நீரை 'செவிலிரித்தாயாகவும்' நோயில் அகப்பட்ட குழந்தையின் நிலையை, கிழிந்த நாராய் கிடந்த குழந்தை' என்னும் பல படிமங்களை தம் படைப்பில் புகுத்தியுள்ளார்.

ஒரு காட்சியைப் பற்றி நேராகக் கேட்பதைவிடப் பார்ப்பதே சுவையானதாகும். அந்தக் காட்சி நலங்களை நம் கண்முன் படைத்துக் காட்டி, சொல்லோவியங்களாக்கிய பெருமை கவிஞர் சிற்பியைச் சாரும் எனலாம். கவிஞர் சமுதாயம், அரசியல், கல்வி, பெண், விலைமகள், அறிவியல், இயற்கை போன்ற அனைத்து நிலைகளிலும் படிமத்தைக் கையாண்டுள்ளார்.

### உத்திகள்

இலக்கணச் சிறைகளை உடைத்தெறிந்துவிட்டு, புதுக்கவிதை தமிழ் இலக்கிய உலகில் சில மாற்றங்களைக் கொண்டு வந்தது. குறியீடு, படிமம், அங்கதம், முரண் போன்றவற்றைக்

கையாண்டு எழுதப்படும் கவிதைகள் வரவேற்பைப் பெற்றன. அம்முறையில் மேற்கொள்ளப்பட்டதே உத்தியாகும். இளம்பூரணர், தொல்காப்பியரின் உத்தி பற்றிய நூற்பாவிற்கு விளக்கம் குறிப்பிடுகையில், "உத்தி என்பது வடமொழிச் சிதைவு. அது சூத்திரத்தின்பாற் கிடப்பதோர் பொருள் வேறுபாடு காட்டுவது"[95] என்று கூறியுள்ளார்.

இலக்கியம் சிறப்பாகத் தோன்றுவதற்கு இலக்கிய உத்தியும் ஒரு காரணமாகக் கருதப்படுகின்றது. கவிஞன் தான் வெளிப்படுத்த விரும்பிய கருத்தைக் காட்டிலும், அக்கருத்தை வெளிப்படுத்த கவிஞன் பயன்படுத்தும் உத்தி முறை சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. உத்திமுறைகளைப் பல்வேறு தன்மைக்கு ஏற்ப ஆய்வாளர்கள் வகைப்படுத்தி ஆய்ந்துள்ளனர். "உத்தி என்பது கலையாக்க முறையாகும். இது படைப்பில் படைப்போனின் முத்திரையாய் அமைவது ஆகும். உத்திகளை பொதுநிலை உத்திகள் (General Techniques) என்றும், மரபு வழிபட்ட உத்திகள், தனிநிலை உத்திகள் (Special Techniques) சிறப்புநிலை உத்திகள் (Unique Techniques) என்றும் பகுத்துரைக்கலாம்"[96] என்றும் கூறியுள்ளார். கவிஞர்கள் தன் படைப்புத் திறனுக்கேற்ப உத்திகளைப் பலவகைப்படுத்துவர்.

**புராண உத்தி**

புராணங்களில் கற்பனைகள் கலக்கப்பட்டிருந்தாலும் அவற்றின் மூலமும் நிறைய செய்திகளைத் தந்திருக்கிறார். சகுந்தலை, கண்ணகி, அகலிகை, மாதவி, தேவயானி போன்ற பெண்ணின்

நிலைகளை உத்திமுறைகளால் விளக்குகிறார். துஷ்யந்தன் சகுந்தலை காதல் நிகழ்வை எடுத்துக்கூறி இன்றைய காதலை கிண்டல் செய்கிறார். 'வேதத்தை காதலாக்கியவர்கள்' இவர்கள் என்றும், விசுவாமித்திரர் மேனகை இவர்களை எடுத்துக்கூறி இவர்கள் 'காதலை வேதனையாக்கியவர்கள்' என்றும் குறிப்பிடுகிறார். இன்றைய காதல் வாழ்க்கையை,

"காளிதாசனின் மானசீக புத்ரியே!
வசந்த உற்சவத்துக்கு
முதல் தாம்பூலம் வாங்கி
இலையுதிர் காலத்தில் வாய்
கொப்பளித்து உமிழும்
விசுவ எத்தர்களும்
துரோக துஷ்டந்தர்களும்
இன்று எங்களில் இருக்கிறார்கள்"[97]

என்றுரைத்து விசுவாமித்திரன், துஷ்யந்தன் போல் இருக்கும் ஆடவர்களை இன்றைய பெண்கள் எளிதில் அடையாளம் கண்டுவிடுவார்கள். சகுந்தலை போலவும், மேனகை போலவும் இன்றைய பெண்ணினம் இருக்காது என விழிப்புணர்வுத் தன்மையைக் கூறியுள்ளார். கற்பைத் தொலைப்பதற்குப் பதிலாக பொருந்தாத காதலனைத் தான் தொலைக்கும் என்பதை ஆசிரியரின் கவிதை தெளிவாக உணர்த்தும்.

சிவன் அனைத்து இறைவனுக்கும் முதன்மையானவனாகக் கருதப்படுகிறான். அவனுடைய முக்கண்ணாகிய நெற்றிக் கண்ணில்

பாதிக்கப்பட்டவர்கள் மன்மதனும், நக்கீரனுமாவர். மன்மதன் தண்டிக்கப்பட்டதால் காம உணர்வு தடைபட்டு உயிரினங்களின் தோற்றமும் வளர்ச்சியும் தடைபட்டது. நெற்றிக்கண் காட்டினும் ‘குற்றம் குற்றமே’ என்று அஞ்சாது வாதிட்ட நக்கீரன் எரிக்கப்பட்டதோடு பொற்றாமரைக் குளத்திலிருந்து மீண்டும் எழுந்து வந்திருக்காவிட்டால் குற்றம் கண்டவுடன் ஒத்துக்கொள்ளும் மனப்பாங்கு வளர்ந்திருக்கும். இவ்விரண்டு உணர்வுகளையும்,

> “ஓகோ! சிவனாரே!
> சாம்பல் பிழை படிந்து
> தூர்ந்து போகட்டும்
> உமது நெற்றிக்கண்!
> எங்களுக்கு
> மனுக்குலம் தழைக்க
> மன்மதனும் வேண்டும்
> எதேச்சாதி காரத்தின் முகத்தில்
> காறியுமிழ
> நக்கீரனும் வேண்டும்”[98]

என்று காலங்காலமாகப் பழமை கருதி பாதுகாக்கப்பட்டு வரும் உணர்வுகளுக்குச் சவுக்கடி கொடுக்கும் வகையில் எதேச்சாதிகாரத்தின் முகத்தில் காறியுமிழ விரும்புகிறார் கவிஞர்.

விசுவாமித்தர் இராம, இலக்குவர்களை அழைத்துக் கொண்டு தாடகையை வதம் செய்யப் புறப்பட்டதைச் சிற்பி

கிண்டல் தன்மையில் குறிப்பிடுகிறார். மேனகைக்கு நீ செய்த கொடுமைக்கு பிராயச்சித்தமா? இந்த நெடும் பயணம் எனக் குறிப்பிடுகிறார். அனைவரும் விரும்பிப் படிக்கும் புராணக்கதைகளை இக்காலச் சூழலுக்கேற்ப குறிப்பிட்டிருக்கும் உத்திமுறை போற்றத்தக்கதாகும்.

உண்மையைப் போலவே உலவுகின்ற போலிச் சாமியார்களையும், சித்தர்களையும் இன்று நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஆனால் பக்தியின் பெயரால் அவற்றை மக்கள் நம்ப மறுக்கின்றனர். பழங்களுக்கு நடுவே இறைவனின் உருவத்தை வரவழைத்து சித்த வேலை செய்கின்றனர். அரிசி, பருப்பு முதலியவற்றை கைப்பிடிக்குள் கொண்டுவர முடிந்தவர்களால் ஆலைகள், தொழிற்சாலைகள் போன்றவற்றை எளிதாக மூடிவிடலாம் எனவும், இவர்களின் பக்தி தொடர்ந்தால் மக்கள் துன்பநிலையை அடைவர் என்பதை,

"அட பாவிகளா?
உங்களுக்கு
ஜீவன் முக்திகள் தராமல்
இந்த தேசம் உங்களை
விட்டு வைத்திருக்கிறதே!
ஓ
மனிதர்கள் கருணை
மகத்தானது....."[99]

என்று கவிஞர் பாடியிருப்பது காலத்திற்கேற்ற தீர்வாக அமைகிறது. சித்தர்களின் பித்தலாட்டத்திற்குத் துணை போகும் கடவுளின் கருணை மகத்தானது என வஞ்சப் புகழ்சியாகக் கூறிய கவிஞர் மனிதர்களாவது இதற்கு முற்றுப்புள்ளி வைக்கமாட்டார்களா? என்ற நினைப்பு பொய்யாகிவிட்டதைக் குறிப்பிட்டு கடவுளின் கருணையையும் மனிதர்களின் கருணையையும் ஒன்றுபடுத்திப் பார்க்கும் கவிஞரின் உத்தி வித்தியாசமானதாகும்.

இலக்கியப் பண்டிதர்களின் எழுத்துச் சிக்கனத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார் கவிஞர். அன்றிலிருந்து இன்று வரை பாரியின் பறம்பு மலை வளத்தைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கின்றனர். கூறியதைத் தான் கூறுகின்றார்களேயொழிய புதுமையாக எதையும் கூற விரும்புவதிலை என்பதை,

"ஆகாயப் பந்தலின்
நிலாப் பழத்தைக் காட்டியே
சோறூட்டி விடுவாள்
தாய்.....
இன்னும் சிக்கனக்காரர்கள்
இலக்கியப் பண்டிதர்கள்
இரண்டாயிரமாண்டு முந்திய
பாரி பறம்பின்
பலாப்பழத்தைக் காட்டியே
பசி போக்கி விடுவார்கள்"[100]

என நாட்டின் வளத்தைக் குறிப்பிட பாரியின் பறம்பு மலையையும் குழந்தைக்குச் சோறூட்ட நிலவும் பயன்படுவதையும் அறியமுடிகிறது.

> "காலம் இப்படி
> விட்டெறிந்த கல்லெல்லாம்
> பட்டழிந்த கல் அது
> மாதரசி அகலிகையின்
> மனம் கனத்த புறத்தோற்றம்"[101]

என அகலிகையின் நிலையை காலம் விட்டெறிந்த கல் என அவளை கிண்டல் உத்தியில் அமைத்துள்ளார். மாதவி, கோவலன் ஒருவனையே தன் கணவனாகக் கொண்டு வாழ்ந்த நிலையையும், கோவலன் பிரிந்த பின்பும் அவனையே நினைத்து தன் வாழ்நாளைக் கழித்த நிலையையும் புலப்படுத்துகிறார்.

> "தாழே இல்லாத அந்தத்
> தனிச்சுவர் சேரியின் வீடுகளில் ஒன்று
> முதன் முதலாக
> யாழ் வாசிக்கும் நளின விரல்களால்
> தாழ் போட்டுக் கொண்டது"[102]

எனக் காப்பியத்தை உத்தியாகக் கையாண்டுள்ளமை புலனாகிறது.

**புதுமை உத்தி**

இன்றைய சமுதாயத்தில் நடைபெறும் காட்சிகளைக் கவிஞர் புதியதொரு பரிணாமமாக அமைத்து "பேசாத பொருள்கள்

பேசினால்...” எப்படி இருக்கும் என நான்கு நிலைகளில் புலப்படுத்துகிறார்.

**மயானம்**

மயானம் என்ற தலைப்பில் வெளிப்படும் மௌனம், மரணம் ஆகிய சொற்கள் மயானத்தின் இருப்பை வரையறுக்கும்.

“மௌனத்தை மொழி பெயர்த்து
நாலே எழுத்துள்ள
ஒரு மாகாவியம் தீட்டினேன்
ம.....ர.....ண.....ம்
எனது வாசகர்கள்
வாசித்து அல்ல
சுவாசித்தே முடித்தவர்கள்”[103]

வாசகர்கள் வார்த்தைகளை வாசித்ததைவிட சுவாசித்தே முடித்தவர்கள் என்று வார்த்தைகளால் விளையாடியுள்ள தன்மையை இக்கவிதையில் காண்கிறோம்.

**நஞ்சு**

‘நஞ்சு’ என்பதில் சிவனின் திருவிளையாடலுடன் தொடர்புடையது. பாற்கடலைக் கடையும் போது ஏற்பட்ட நஞ்சை சிவன் உண்டு, இவ்வுலக உயிர்களைக் காப்பாற்றினார். அதனை மனிதர்கள் பயன்படுத்தினால் ஏற்படும் விளைவை,

"நான்

பிறந்த இடமோ பெரிய இடம்

அரங்கன் உறங்கும் திருப்பாற்கடல்

புகுந்த இடமோ புனித இடம்

சிவபெருமான் திருநீலகண்டம்

அப்புறம்கேட்பானேன்

ஒரே ஒரு துளி

கைக்கு எட்டினால்

கைலாசம்

வாய்க்கு எட்டினால்

வைகுந்தம்!"[104]

விடத்தை கையில் எடுத்தாலும் பருகினாலும் போய் சேரக்கூடிய இடம் கைலாயமும் வைகுந்தமுமாகும். நஞ்சு உருவாகும் இடம் மேலுலகமாகும். அதை எடுத்து உண்பவர்களும் செல்லும் இடம் மேலுலகமாகும் என்னும் பொருள்படவே இக்கவிதை அமைந்துள்ளது.

**வழக்கு மன்றம்**

வழக்கு மன்றங்களில் வாதாடுவதை விட்டுவிட்டு, வேலை வேண்டி விண்ணப்பிக்கிறார் சிற்பி. வழக்கறிஞர், குமாஸ்தா, நீதிபதியாக ஊனமுற்றோரை நியமிக்கலாம். அப்போது தான் நீதி முடமாகாமல் இருக்கும் எனும் திறன் போற்றத்தக்கதாகும்.

**வருணனை உத்தி**

வருணித்தல் என்பது கவிஞர்களுக்குக் கைவந்த கலையாகும். கவிஞன் சாதாரணமாகக் காணும் பொருளைக்கூட தனது எழுத்துத் தூரிகையால் வரைந்து வண்ணம் தீட்டுகிறான். எல்லாப் பொருளுமே கவிஞரின் வருணனைக்கு ஆட்பட்டு விடுகின்றன. வருணனை மூலம் தாம் நினைத்த கருத்தை எடுத்துக் கூறுகின்றான் கவிஞன்.

"மஞ்சள் நீலம்
பொன்வரிக் கோலம்
வைரத் துணுக்குகள்
பசுமையின் நீள
விண்வெளிப் பரப்பில்
வண்ணங்கள் தீற்றும்
பட்டுப் பூச்சிகள்
குழந்தைகள் இமைகளாய் அசைந்து
சிறு துளிப் பொருளிலும்
தெறிக்கும் அழகை
ஓசையின்றி ஓவியம் புனைந்தன"[105]

என வானில் தோன்று விண்மீன், வானவில், வான்போடும் கோலம் முதலியவற்றையும் அழகாகக் குறிப்பிடுகிறார். இந்த அழகை யாரிடமும் விமர்சனப்படுத்தாமல் ஓவியம் வரைகிறது வானம். மனிதனோ தன் ஓவியம் எப்படி இருந்தாலும் ஊரே புகழும்படி

தம்பட்டம் அடிக்கிறான் என நிறைகுடம் நீர் தழும்பாது என்னும் நிலையைப் புலப்படுத்துகிறார்.

காளையரின் மனதைக் கவரும் காதலியைப் போல 'சிகரெட்' இளைஞர்களின் உதட்டு முத்தத்தில் கனன்று எழுந்து, இதயம் வரை புகையாகச் சென்று மூச்சுக்களில் உரையும் காதலியாக வருணிக்கிறார். அரசியல் வாதிகளின் ஆயுதக்கூடமாகவும், திரைப்பட நடிகனுக்குத் திருக்குறள் பாடமாகவும் அமையும் 'சிகரெட்' பாம்பு உரையும் புற்று நோயின் கோட்டையா உருமாறியுள் நிலையை,

"ஒரு கணம் பழுத்து
மறுகணம் உதிரும்
சிறுசிறு சிவப்புக்
கனிகளின் தோட்டம்!
..............................
கற்பனைத் தேருக்கு
வெள்ளிச் சங்கிலி
கோத்துத் தருகிற
கொல்லன் பட்டறை!"[106]

வருணிக்கப்டும், கனவுகளும், கற்பனைகளும் நிறைந்த வாழ்க்கையை மரணக் கிணறாக அமைத்து விடுகின்றனர் என சிகரெட் பெட்டியையும், அதனையும் வருணனை செய்து மனித உயிருடன் தொடர்புபடுத்தியுள்ளார்.

**முரண் உத்தி**

குறிப்பிட்ட ஒரு பொருளுக்கு எதிர் பொருள் இருப்பதை அறியலாம். மனிதப் படைப்பிலும் இப்படி உள்ளது. ஆண், பெண் இப்படைப்பால் உலகில் நன்மையே நிகழ்கின்றது. பகல் – இரவு, உயர்வு – தாழ்வு, நன்மை – தீமை என்று அமைகிறது. இப்படிப்பட்ட முரண்களால் தான் உண்மைத் தன்மையை எளிதாக அறிய முடிகிறது எனலாம். தரிசனங்கள் என்னும் கவிதையில்,

“கோபுரத்தின் மார்பில்
நியான் உச்சரிக்கும்
ஓம்
பெரிய ஓம்
கீழே சத்திரத்து
விருந்தினர் அறையில்
நாணி முகம் மறைக்கும்
நீல விடிவிளக்கு
தருமகர்த்தா நச்சரிப்பில்
கசங்குகின்ற பருவத்தின்
‘உம்ம்ம்’
மெலிந்த உம்ம்ம்”[107]

என்னும் ஓம், உம்ம்ம் என்னும் ஒலியால் மலைக் கோயில்களில் நடைபெறும் அவலக் காட்சிகளைக் குறிப்பிடுகிறார். அதனால் தான் ‘ஓம்’ என்பதற்கு முரண்பட்ட ஓர் ஒலியைப் படைத்துக் காட்டுகிறார். இறைத்தலங்களில் உள்ள சுகாதாரக் கேட்டினையும்,

உழைக்க மறுக்கும் கூட்டம் போலி வாழ்க்கை வாழும்முறை நம் நாட்டில் நிரப்ப உண்டு என்பதையும் அறியமுடிகிறது.

"அடி வைக்கும்படியெல்லாம்
கைகள் நீட்டியமனிதக் கைகள்
இதயக் கதவு திறக்க
அடைத்த விழிகள்
தருமம் நடக்க
முடிமான நொண்டிகள்
ஏழ்மையின் குரூரங்கள்
இரக்கத்தைப் பைசாக்களால்
அளக்கும்..... இவை
மனித வித்துக்கள்"[108]

என்று இறைவனின் பெயரைச் சொல்லி, பக்தியில் திளைக்கும் மக்களை ஏமாற்றிப் பிழைக்கும் ஏமாற்றுப் பேர்வெளிகள் ஆலயங்களை நாசம் செய்வதை முரண்பாட்டு உத்தியால் விளக்குகிறார்.

**சிறுகதை உத்தி**

கவிதைகளில் ஆங்காங்கே கதை கூறி விளக்கிச் சொல்லும் உத்தியே சிறுகதை உத்தி எனப்படுகிறது 'சிரித்த முத்துக்கள்' என்னும் கவிதையில் தென்னன், தென்னன் மனைவி, நண்பன், வேந்தன், அரசி போன்றோரைக் கொண்டு அத்தகைய உத்தியைக் கையாண்டுள்ளார். அந்தப்புரத்தில்அரசி புலித்துறை முத்து வேண்டி

அரசனிடம் கூற, அதனை அரசன் முதலில் மறுக்கிறான். பிறகு ஏற்றுத் தருவதாகக் குறிப்பிடுகின்றான். மீனவன் ஒருவன் தன் மனைவிக்கு வந்திருக்கும் நோயைக குணப்படுத்தப் பணமின்றி வறுமையில் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும்போது அரசனின் அறிவிப்பாய், புலித்துறை முத்தெடுத்துத் தருபவர்களுக்குப் பொற்காசும், பரிசும் தருவதாய் அறிவிக்க துன்பம் சூழ்ந்த அப்பகுதிக்கு மனைவி தடுத்தும் கேளாமல் பல இடையூறுகளுக்கு மத்தியில் போய்த் திரும்பும் போது மனைவி இறந்திருப்பதை அறிந்து தானும் உயிர் துறந்தான் என்றும் கதையைப் புதுக்கவிதையின் வாயிலாகப் புலப்படுத்துகிறார் ஆசிரியர்.

**நாடக உத்தி**

'ஆதிரை' என்னும் கவிதை நாடகத்தில் இரட்டகுல மன்னர் திருவிக்கிரம தேவர், மனைவி, தாய், சமணத்துறவி, அமைச்சர், மெய்க்காப்பாளன், ஆதிரையின் தோழியர் மற்றும் பலர் சேர்ந்த நாடகத்தைப் படைத்து, நாட்டையும், மக்களையும் நல்லமுறையில் காத்து அரசாண்ட மன்னன் நிலையையும் விளக்கியுள்ளார்.

"மதத்தைக் காட்டிலும் மனிதம் பெரியது
மதத்தைக் காட்டிலும் மனிதம் பெரியது"[109]

என மனிதத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து கவிதை நாடக உத்தியை களம் 1, 2, 3, 4 என்று அமைத்துக் கூறியுள்ளார்.

**உருவக உத்தி**

மனித வாழ்வின் தொடக்கத்தைப் பற்றி ஆசிரியருக்கு எழுநத ஐயப்பாடுகளாக அவர் கூறுவன, ஆதாம் ஏவாளுக்குக் கொடுத்த ஆப்பிலிலிருந்து விதவிதமான வடிவமும் உருவமும் உடைய எத்தனையோ உயிர்கள் எப்படித் தோற்றம் கண்டிருக்க முடியும். அத்தொடக்கத்தைப் பற்றி எனக்கு ஒரு சந்தேகம். அப்படி உருவாகிய மனிதன் தான் பெற்றுள்ள ஆறறிவினைப் பயன்படுத்த மறுத்து மரம் போல் வளர்கின்றான் என்கிறார். அன்று பாஞ்சாலியின் தலைமயிரைப் பிடித்து துச்சாதனன் இழுத்து வந்த பதையில் நின்றவர்களும் மனிதர்கள் தானே மனிதருள் ஏன் இந்த வேறுபாடு,

> "எத்தனை தலைகள்?
> எங்கும் எங்கும்
> எத்தனை முகங்கள்?
> சிறுசாய்ப் பெரிசாய்க்
> கால்கள் முளைத்து
> கைகள் வளர்த்து
> வளருது வளருது
> மனித மரங்கள்!"[110]

என்று பாடுகிறார். மனிதர்களாக வளராமல் மரங்களென வளர்கின்றனர் என்பதனை உணர்த்தும் வண்ணமாகத்தான் மனிதர்களாகிய மரங்கள் என்ற பொருளில் உருவக உத்தியைப் பயன்படுத்தியுள்ளார்.

ஏமாற்றிப் பிழைப்பவர்களையும், இலாபம் சம்பாதிப்பதையே நோக்கமாகக் கொண்டவர்களையும், தேச முன்னேற்றத்தை தடுத்து நாசவேளைகளில் ஈடுபடுவோர்களையும் கவிஞர்,

"எமது சர்பயாகத்தில
சிறியது - குறியது
பெரியது - நெடியது
பூநாகம் முதல் பொறிநாகம் வரை
எரியும் - எரியும்
கரியும் - கரியும்!"[111]

எனக் குறிப்பிடுகிறார். மனிதர்களுள் எத்தனை விதம், எத்தனை ரகம் என ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்திக் காட்டுகிறார்.

கவிஞர் சிற்பியின் கவிதைகள் பல்வேறு உத்திகளை மையமிட்டுப் பாடப்பட்டுள்ளன. மேலும் மகாகவி பாரதியின் சிறை வாழ்க்கையை பாரதியே நேரடியாகக் கூறுவதைப் போலக் கூறிச்செல்லும் உத்தி சாலச் சிறந்ததாகும். 'பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பதாக இவ்வுத்தி வகைகளை எடுத்துக் கொள்ளலாம்.

**பழமொழி ஆளுமை**

தமிழ் மொழியில் முதுமொழி, முதுசொல், பழமொழி, பழஞ்சொல், சொலவடை, சொலவாந்தரம் முதலிய பல சொற்கள் பழமொழியைக் குறிக்கப் பயன்படுகின்றன. பழம் + மொழி மிகவும்

பழமையான மொழி எனப் பொருள் கொள்வர். தொல்காப்பியர் பழமொழியை முதுமொழி என்கிறார். ஜான் லாரன்ஸ் என்பவர் பழமை, சுருக்கம், உவமைப்பண்பு என்ற அடிப்படையிலேயே பழமொழிகள் அமைகின்றன எனக் குறிப்பிடுகிறார். பழமொழி என்பது சுருங்கக்கூறி விளங்க வைத்தல்; ஒரு பொருளை உணர்த்த வேறொன்றை உணர்த்தி விளங்க வைத்தல்; காலம் காலமாகக் கூறப்பட்டு அனைவருக்கும் பழகியிருத்தல் ஆகிய முப்பெரும் பண்புகளைக் கொண்டதாக அமைகிறது.

'நஞ்சு' பற்றிக் கூறும் பழமொழி நஞ்சு கைக்கு எட்டினாலும் வாய்க்கு எட்டினாலும் நம் உயிர் போவது நிச்சயம் என்பதை உணர்ந்தே, கைக்கு எட்டினாலும் வாய்க்கு எட்டினாலும் மேலுலகம் செல்வோம் என்றும் பழமொழியைக் குறிப்பிடுகிறார்.

"கைக்கு எட்டினால்
கைலாசம்
வாய்க்கு எட்டினால்
வைகுந்தம்"[112]

இது வழிவழியாகத் தொடரும் புராணப் பழமொழியாகும்.

"கொமுரி தனியாய் போனாலும்
கொட்டாவி தனியாப் போகாதுண்ணு"[113]

பருவப் பெண் சில சூழ்நிலைகளில் தனியாகச் செல்ல நேரிடும். ஆனால் தூக்கம் என்பது மனித இனத்திற்கு விதிக்கப்பட்ட ஒன்று.

அதன் முதல் செயலே கொட்டாவி தான். ஆதலால் அது தனியாகச் செல்ல வாய்ப்பில்லை என்கிறார்.

“ஏரு நிண்ணா சோறு நிண்ணுறும்
புளியடியிலே நிக்காதே
வேம்படி விட்டு விலகாதே
கடப்பாரை முழுங்கிச் செரித்தவனும் உண்டு
கம்மங்கூழ் விக்கிச் செத்தவனும் உண்டு
மாட்டுக்குப் பல்லெப் பிடிச்சுப் பாக்கணும்
மனுசனுக்கு சொல்லெப் பிடிச்சுப் பாக்கணும்”[114]

என ‘ஒரு கிராமத்து நதியில்’ தெற்கு வளைவுப் பாட்டையாவின் அனுபவக் களஞ்சியத்திலிருந்து உதிரும் பழமொழிகளைக் குறிப்பிடுகிறார். இதில் முதலில் உழவுத் தொழிலின் உயர்வை எதுகை நயத்துடன் இனிய சொல்லாட்சியில் சுருங்கக்கூறி நிறைந்த உணர்வைத் தரும் கொங்கு நாட்டு மண்ணின் மணத்தை அள்ளித் தெளிக்கிறார். புளியமரத்தடிக் காற்று கேடு தரும். அதில் பேய் இருக்கும். வேப்ப மரத்தடிக் காற்று உடலுக்கு நல்லது. அதில் மாரியம்மன் குடியிருப்பாள் போன்ற கொங்கு மக்களின் நம்பிக்கையையும் சேர்த்து எடுத்துரைக்கிறார்.

‘கம்மங்கூழ்’ என்பது கொங்கு நாட்டு மக்களின் உணவு என்பதை அறியமுடியும். மாட்டுக்குப் பல்லும் மனிதனுக்கு சொல்லும் மிகவும் அவசியம் என்பதை உணர்த்தவே இப்பழமொழி தோன்றியது எனலாம். மாட்டிற்கு லாடம் அடிக்கும் போது

வலியனால் அது நெளியும். அதை 'வாக்கணம் கெட்ட கழுதைக்கு ஒணத்தி பாரு' எனக் குறிப்பிடும் பழமொழியில் எருதை ஒன்றுக்கும் உதவாத, உழைக்க இலாயக்கற்ற கழுதை எனச் சுட்டுகிறார். மேலும் இலாடம் அடிப்பதை வேடிக்கை பார்க்கும் சிறுவனிடம் 'அடியாத மாடு படியாது' எனும் பழமொழியைக் கூறி வளர்ப்பின் தத்துவத்தை உணர்த்துகிறார். அடியாத மாடு என்பது இலாடம் அடியாத மாடு என்றும், அடித்து வளர்க்காத மாடு என்றும் இருபொருள்படும். பிள்ளைகளை அடித்து வளர்க்க வேண்டும். இல்லையெனில் அவர்கள் பணிந்து வரமாட்டார்கள் எனப் பழமொழி மூலம் சிறந்த கருத்துக்களைக் கூறும் தன்மை ஆராயத்தக்கதாகும்.

**நம்பிக்கைகள்:**

மக்கள் நம்பி ஏற்றுக் கொள்ளக்கூடியவை நம்பிக்கை. நாட்டுப்புறப் பண்பாட்டில் நம்பிக்கைகளுக்கு முக்கிய இடம் உண்டு. இவை கிராம மக்களின் தெய்வ வழிபாட்டுடன் தொடர்புடையவையாகவே விளங்குகின்றன. நம்பிக்கைகள் அவற்றைப் பின்பற்றும் மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகத் திகழ்வதைக் காணலாம். 'இளம் பருவத் தோழன்' கவிதையில் இடிந்து சிதைந்து கொண்டிருந்த வீட்டின் கொல்லைப்புறம் அடிதடிக்கு வருவது போல் முருங்கை மரம் பிசாசாய் ஆடும் எனக்கூறுமிடத்து, முருங்கை மரத்தைக் கொல்லைப்புறம் வளர்ப்பயையும், முருங்கை மரத்தில் பேய் ஆடும் ஆதலால் தான் இரவு நேரத்தில் ஒடிந்து விழுந்து கிடக்கும் என்பன

போன்ற கொங்கு நம்பிக்கைகளையும் வெளிப்படுத்துவதைக் காணலாம்.

ஊமையன் என்னும் கவிதையில் வரும்,

"கல்லாங்காட்டு முண்டைப் பிராணி
கிட்ணவேணிகிட்ட
வாலாட்டீட்டானாமா.....
மலையாளத்து மந்திரவாதிகிட்ட
மருந்து வாங்கி வெச்சுட்டானாமா"[115]

என்னும் செய்தியால் மந்திரம், சடங்கு போன்றவற்றின்மேல் கொங்கு நாட்டு மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதை அறியமுடியும். குளிக்கும் போது நெஞ்சுக்குழிமேல் தண்ணீர் ஒட்டாது போனால் பத்து நாளில் சாவு நிச்சயம் என்று கொங்கு நாட்டு மக்களிடையே ஒரு நம்பிக்கை இருந்தது இக்கவிதை வழிப் புலனாகின்றது.

"கும்பம் தாளித்து
மாரி அம்மனுக்கு நோன்பு கொண்டாடக்
கலசங்களின் பயணம்"[116]

மக்கள் அம்மனுக்கு நோன்பு கொண்டாடுவதை நம்பிக்கையாகக் கொண்டிருந்தனர் எனவும், இரட்டைப் பாம்பை அடிப்பதும், பம்பையின் இசையே சாமி ஆடச்செய்யும் ஆற்றலுடையதாய் இருப்பதும், இளம் சிறுமியரும் பம்பை ஒலிக்கேற்ப கும்பம் எடுக்கும் மரபு இருந்ததும், பக்தர்கள் அவர்களைப் பரவசப்படுத்துவதும்,

ஆடுபவரிடம் என்ன வேண்டும் எனக் கேட்க சாமியோ ஆட்டு ரத்தம், கோழித்தலை ஆகியவை கேட்க, அவற்றைக் கொடுத்து சாமியை மலையேத்து போன்றவற்றை நாட்டுப்புற பண்பாட்டு மரபாகக் கொண்டிருந்தனர்.

"ஊருக்குள் பெண்கள்
தெருத்தெருவாகப் போய்
மழைக்கும்மி கொட்டிய போது
கண்ணீரும் சேர்த்து கொட்டியது"[117]

என்று பாடியுள்ளார். மழைக்கஞ்சி காய்ச்சி குடித்த பின்பு கொடும் பாவி செய்து அதனை எரித்து பின்பு மழை வரவுக்காகக் காத்திருக்கும் இல்லை என வரும் செய்தி கொடும்பாவி எரிப்பு பற்றிய சடங்கு நம்பிக்கையை வெளிப்படுத்துவதைக் காணலாம்.

மேலும் மழை வராமைக்குக் காரணம் சாமி குற்றம் என்று நம்பி விநாயகருக்குக் குடம் குடமாகத் தண்ணீர் ஊற்றிய நம்பிக்கை இருந்தமையை அறியலாம்.

கண்ணாடி உடைந்தால் வீட்டிற்கு தீங்கு ஏற்படும் என்னும் செய்தி "பெல்ஜியம் கண்ணாடி" என்றும் கவிதையால் அறியலாம்.

"கண்ணாடி சுவாமிடா
கீழே விழுந்திரப்படாது"[118]

கண்ணாடி சிதைந்தால் குடும்பம் சிதையும் என்ற நம்பிக்கை இருந்தமையை அறியமுடியும் இதுபோன்ற கிராமியப் பாங்கான நம்பிக்கைகளை அடுக்கிக் கொண்டே செல்கிறார் ஆசிரியர்.

இந்நம்பிக்கைகள் மாறாதது வழி வழியாகத் தொடரக்கூடியது என்பதை அறியலாம்.

**நகைச்சுவை ஆளுமை:**

'சிரிப்பு' என்பது மனித குலத்திற்கு மட்டுமே கிடைத்த வரப்பிரசாதமாகும். சிரித்து வாழ்ந்தால் நோயின்றி நீண்டநாள் வாழலாம் என்பர் முன்னோர். தொல்காப்பியர் இதனை 'அங்கதம்' என்று குறிப்பிடுவார். தொல்காப்பியர் கூறும் அங்கதம் என்ற சொல்லுக்கு நிகராகவும், தமிழில் இச்சொல் பயன்படுத்தப்படுவதையும் குறிக்க சடையர் (Satire) என்று பொருள் விளக்கம் கூறுவர்.

அங்கதம் என்னும் பொருளுடைய சடையர் (Satire) என்ற சொல், இலத்தின் மொழிச் சொல்லான 'சாட்சுரர்' (Satura) வில் இருந்து வந்தது என்பர். 'சாட்சுரா' என்பதற்கு முதலில் முழுவதும் (Full) என்ற பொருளும், பின்னர் பல பொருள்களின் கலப்பு (A mixture of full of different things) என்ற பொருளும் வழக்கில் இருந்தது. கதம்பம், குழப்பம் என்ற பொருளும் இச்சொல்லுக்கு உண்டு. இது ஒரு உணவுப் பொருளின் பெயர் எனவும் கூறுவர்.[119]

தனிப்பட்ட மனிதனின் குறையையோ ஒரு சமுதாயத்தின் குறையையோ குறிப்பாகவோ வெளிப்படையாகவோ சுட்டிக்காட்டுவது அங்கதம் என்று பிரிட்டானிகா கலைக்களஞ்சியம் காட்டுகிறது.[120]

சிற்பியின் நகைச்சுவை பல சமயங்களில் கேலி, கிண்டல், எள்ளல் இவற்றோடு இயைந்து, குழைந்துவிடுகிறது. இதனால் பல கவிதைகளில் இவரது நகைச்சுவை இழையோடிக் கிடப்பதை உணரலாம். அவலத்திலும் நகைச்சுவையை விளைவிப்பதே இவரது சிறப்பு. சிற்பியின் ஆழ்ந்த கவியுள்ளம் பெரும்பாலும் சமுதாய அவலங்களை படம்பிடிப்பதிலேயே ஆழ்ந்துவிடுவதால் வெடிச்சிரிப்பை விளைவிக்கும் நகைச்சுவை கவிதைகளில் அதிகமாக ஈடுபடவில்லை என்று தோன்றுகின்றது.

மாப்பிள்ளைக் கவுண்டரையும், அவரின் வளர்ப்பான காளையையும் பற்றிக் குறிப்பிடும் விதம் நகைச்சுவை ததும்புவதாக உள்ளது. மாப்பிள்ளைக் கவுண்டரின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுகையில், தலைக்கும் முகத்துக்கும் பாலமிடும் வழுக்கை நடுவில் அக்கினி நட்சத்திரம் போல் ஒரு குங்குமப் பொட்டு என்று குறிப்பிடுகிறார். நிலக்கடலை அறுவைக் காலம் என்றால், கடலை கொடி திண்ணுட்டு மாடு தண்ணி தண்ணியாக் கழியும் என்றும் மாட்டுவண்டி வேகமாகப் பறக்கும் போது கடலைக்கொடி காட்டும் வேலையை,

"துரத்தாதேடா
துரத்தாதேடாண்ணு
பறக்கிறார் மாமா
வலத்தான் தண்ணி தண்ணியா
சானி போடுதுப்பா...
மளாருண்ணு

வலத்தான் வாலுமேலே

காலெ வச்சு

சாணி போடோமே

அழுத்தினேன்...

சீத்துணி சாணி பாஞ்சுது பாரு...

எம்மேலே படாம

செட்டியார் மேலே படாம

பத்திரமா இருந்தாங்களே

மாமா... மூஞ்சிலே...

சர்ட்டுலே ....."[121]

என மாட்டின் செயலால் மாம்பிள்ளைக் கவுண்டர் பகபகவென சிரிக்க தாம்பூலம் ரசிகர்கள் மேலெல்லாம் தெரித்தன என நகைச்சுவைத் திறனுடன் குறிப்பிடுகிறார்.

'சிலேடையப்பன்' என்னும் கவிதையில் வார்த்தை சாலங்களால் நகைச்சுவைத் திறனை உணர்த்துகிறார். 'ஆருயிருக்கு ஆபத்து' ஆர் உயிருக்கு ஆபத்து / ஆறு உயிருக்காபத்து? என்று வார்த்தைகளால் சுவைத்திறனை மிகுவிக்கிறார்.

ஆம்பல் எங்கே? எனக்கேட்டான்

அப்பன்; ஓங்கி

அடியுதட்டில் கொடுத்திட்டேன்;

இரத்தம் சிந்தத்

தேம்பலுட் கேட்கின்றான்;

ஐயோ! மாமா!

ஆம்பல் எங்கே? மாமா

ஆம்! பல் எங்கே?"[121]

என்று ஒவ்வொரு நகைச்சுவையாக அடுக்கிக் கொண்டே சென்று இறுதியில் ஒரு குப்பைக்கூடை பொத்தென்று விழுந்தது எனக்குறிப்பிடுகிறார்.

ஒரு பெண்ணின் வேடிக்கை நிறைந்த பேச்சைக் காதலன் கேட்கிறான். தோசை சாப்பிடும்போது கடக்கென்றது கல் அதனால் கிடுகிடுத்தது பல் என்று காதலன் கூற, அதற்கு காதலி,

"நீ சொன்னாய்

தோசையில் கல் என்றா

நினைக்கிறீர்கள்?

நான் என்ன செய்வது

தோசையைக் கல்லில் தானே

சுடவேண்டியிருக்கிறது"[123]

என்று கூறக்கேட்ட காதலனுக்கு சிரிப்பை மெல்லவும் முடியவில்லை தள்ளவும் முடியவில்லை என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். கோபமாக நீங்கள் சொற்களைப் பொரிந்ததால் உங்களுக்கு வள்ளல் பட்டம் தரலாமே என்றாய்? நான் ஏன் என்றேன் எரிச்சலுடன்,

"நீங்கள் தான்

வள் வள் என்று விழுகிறீர்கள்

அதனால் வள்ளல் என்று

சொல்லலாமே"[124]

என்று சோகத்திலும் நகைச்சுவை உணர்வை ஊட்டி வாசகரின் மனநிலையை மாற்றும் பாங்கு கற்றவர் சிற்பி என்பதை இதனால் அறியலாம்.

குடிகாரன் ஒருவனின் நிலையைக் கண்டு பரிதாபப்படும் கவிஞர், அதே நேரத்தில் குடிகாரனின் செயலை ஒரு நகைச்சுவை உணர்வோடு குறிப்பிடுகிறார். பாட்டிலில் மிச்சமில்லை என அவன் படும் வேதனையை,

*ஐயய்யோ*
*பாட்டிலில்*
*மிச்சமில்லை*
*மிச்சமென்பதில்லையே!*[125]

என்று கூறி, வீட்டுக்குப் போனால் குடும்ப நிலையை நினைத்து தன் போதை இறங்கிவிடுமே என எண்ணி வருந்துகிறான். அவனின் நிலையை நகைப்புடனும், அவன் மேலும் குடித்தால் கட்டையிலே போவது நிச்சயம் என்பதை,

"ரம் இல்லையா
பட்டைபோடு
பட்டை இல்லையா
ரோட்டோரத்திலே
கட்டையைப்
போடு!"[126]

என நயத்துடன் விளக்கியுள்ளார். கிராமியப் பாணியிலேயே நகைச்சுவைத் திறனை மிகுவிக்கிறார் ஆசிரியர். மாட்டுக்கு இலாடமடிக்கும் போது தன் காலில் கட்டியிருந்த கயிறுவிழ மாடு உதறி சாணத்தில் கவிழ்ந்து விழும் உருமாலைக் கவுண்டரைக் கண்டு சிறுவர்கள் சிரித்தனர் என்பதை அறியமுடிகிறது.

பெண்கள் விரும்புவது பூ. பூவை விரும்பாத பெண்கள் இருக்க முடியாது. பூவின் மீது நீங்காத ஆசை கொண்ட பெண்ணின் அவலநிலையை பூவே பூ..... புளியம் பூ..... என்னும் கவிதையில் சிறிது அங்கதமாகவும் கூறியுள்ளார்.

"பூவே பூ..... புளியம் பூ
பொன்னாத்தாள் கொண்டைக்குத்
தாழம்பூ....."[127]

என்னும் பாட்டு கற்பிழந்த நிலையில் உள்ள ஒரு பெண்ணின் பாடலாக அமைகிறது. அறிவியலின் அதிவேக வளர்ச்சியால் எல்லாம் விரைவாக நடைபெறும் தன்மையை,

"உங்கள் கணவர்
மல்லிகைத் தோட்டம்
விண்ணகரிலிருந்து
வான 3 வாகனத்தில்
இதோ வந்து
இறங்கிக் கொண்டிருக்கிறார்"[128]

என்று வெளியில் சென்று வீடு திரும்பியவரின் நிலையை, விஞ்ஞானத்தின் அதீதமான செயலால் நகைப்புடன் எடுத்துக்காட்டுகிறார். ‘சர்ப்பயாகம்’ என்னும் கவிதையில் மனிதர்களை ஒவ்வொரு விதமான பாம்புகளாகக் குறிப்பிடுகிறார்.

‘சிகரெட்’ என்னும் கவிதையில் அதன் தன்மையையும், அது ஏற்படுத்தும் பாதிப்பையும்,

> “நாற்றக் குடும்ப
> தம்பிமாரோடு
> காற்றைக் கெடுக்கும்
> புகைபோக்கி வரிசை”[129]

என்று குறிப்பிடுகிறார். ‘மங்கை சிங்காரம்’ என்னும் கவிதையில் ஒரு சிங்காரி தன்னைச் சிங்காரித்துக் கொள்ள வாரத்தின் ஏழு நாட்களையும் பயன்படுத்திக் கொண்டும் இன்னும் சிங்காரம் முடியவில்லை. அதனால் சிங்காரிகளுக்கு ஒரு நல்ல யோசனை கூறுகிறார். ‘மாதத்தையே வாரம் ஆக்கிடுவோம்’ என்று கூறுகிறார்.

> “திங்கட்கிழமை முடிவதற்குள்
> திலகம் இட்டு முடித்திடுவாள்
> இங்கு செவ்வாய் போவதற்குள்
> இடையில் சேலை ஏறிவிடும்!”[130]

என்று கூறி, சிங்காரி தன் சிங்காரத்தை கேசாதி பாதமாக தொடங்குகிறாள் என்று அங்கதத் தொனியுடன் கூறியுள்ளார்.

‘கூலிக்காரி’ என்னும் கவிதையில் சித்தாள் வேலை செய்யும் ஒரு பெண்ணைப் பற்றியும் அவளின் நடை, உடை, பாவனை பற்றியும்,

“ ‘தன்னா னத்தன’ தாள லயத்தில்

சாய்த்துக் கழுத்தை வெட்டி–அவள்

இன்னா ஸாமி நீட்டுப் பேச்சில்

இலக்கிய நயம் கொட்டும்”[131]

தாளலயத்தோடு குறிப்பிடுகிறார் கவிஞர். உடல் அசைவுகள் அப்படி இப்படி இருந்தாலும் வேலையில் கெட்டிக்காரி என்று புகழ்கிறார். மாதச் சம்பளம் வாங்கும் மனிதனின் நிலையை ‘சம்பள வர்க்கம்.....’ என்னும் கவிதையில்,

“முதல் தேதிச்

சக்கர வர்த்திகள்

மாத நடுவில்

மன நோயாளிகள்

கடைசி வாரத்

தத்துவ ஞானிகள்!”[132]

என்று கேலி செய்கிறார். இதில் பொருளாதார நிலையை அங்கதத்தில் உணர்த்துகிறார். கோயில்கள் இல்லாவிட்டாலும் அங்கு ஒரு மரத்தையாவது வைத்து, அங்கு உண்டியலை வைத்துவிடுகின்றனர் நம்மவர்கள்.

“கோபுரம் இல்லாத

கோயில்கள் கூட உண்டு

உண்டியல் இல்லாத கோயிலை

இனிமேல் தான்

கண்டுபிடிக்க வேண்டும்"[133]

என்று சென்றவிடமெல்லாம், திரும்பும் இடமெல்லாம் உண்டியல் திறந்திருக்கும் நிலையைக் குறிப்பிடுகிறார். நாணம் என்பது பெண்ணுக்குரிய குணங்களாகக் கருதப்படுகின்றன. அவற்றைக் கவிஞர் 'தாலி கட்டும் நாள் வரையும் நாணங்கள் பிற. அவை தொடுப்பவை பாணங்கள்!' என்று திருமணமான பின்பு குடும்ப அதிகாரத்தை தன் கையில் எடுத்துக் கொள்வாள் பெண் என்று கிண்டல் பாணியில் குறிப்பிடுகிறார்.

கவிதையில் ஆங்காங்கே நகைச்சுவையைக் கூறிச் செல்லும் போக்கு கவிஞரிடம் காணப்படுகிறது. இது இவரின் கவிதை முழுவதும் விரவிக் கிடக்கின்றது எனலாம். 'பூஜ்ஜியங்களின் சங்கிலி' என்னும் தொகுதியில் குரு, சீடன் உரையாடலில், சீடனின் அறியாமை நிறைந்த கேள்விகளை நகைச்சுவைத் திறனுடன் அமைத்து, அதற்கு குரு பதில் கூறும் முகமாக கூறியுள்ளார். 'ஒரு கிராமத்து நதி'யில் கிராமியப் பின்னணியில் நகைச்சுவைகளை அள்ளித் தெளித்துள்ளார்.

'மூடுபனி' என்னும் தொகுதியில் 'கதை கதையாம்' 'பழையனூர் நீலி' போன்ற கவிதைகளில் அங்கதம் தொனிப்பதைக் காணலாம். மேலும் 'காணாமல் போனவன்', 'மனிதனும் இயற்கையும்', 'அதிசயச் சித்தர்கள்', 'பாப்பாவின் கேள்வி',

‘இந்தியா இந்தியா இணையற்ற இந்தியா’, ‘சிக்கனம்’ போன்ற பல கவிதைகளில் தன் நவரச முத்திரையைப் பதித்துச் சென்றவர் என்பது ஆராயத்தக்கதாகும்.

**பிறமொழிச் சொற்பயன்பாடு**

கவிஞர் தமது கவிதையில் பிறமொழிச் சொற்களையும், பேச்சு வழக்குச் சொற்களையும் கொண்டு கவிதை புனைகிறார். கவிதை முழுவதும் இலக்கணச் சொற்களைப் பயன்படுத்தினால், அக்கவிதை வாசகர் மத்தியில் சிறப்பான கவிதையாக இருக்க முடியாது. ஆதலால் கவிதையின் சிறப்பைக் கூட்டும் முகமாக மிகுதியான ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். அவற்றுள் சிலவற்றைக் கீழே காணலாம். ‘தெற்கு வளவுப் பாட்டையா’ என்னும் கவிதையில் தன் பெயரை இங்கிலீஷிலே கேட்ட தாத்தாவிடம் கவிஞர் சிற்பி திகைத்து நின்று பின்பு “KARUPPUSAMI” என்று நீட்டிமுழங்கி சமாளித்தாராம்.

ஒரு குழந்தை அந்நிய மொழியைப் படிக்க எப்படித் திணறித் திண்டாடுகிறது என்பதை,

“கௌஸ் அண்ட் பஃபலோஸ்
கௌஸ் அண்ட் பஃபலோஸ்”[134]

என்று பாராயணம் செய்யும் நிலையைக் குறிப்பிடுகிறார். குடிகாரன் ஒருவனின் உழரல் பேச்சாக,

“அங்கோ யா...ழ...து...? சீ! சீ! யா...ர...து?

.......... ........... ........... ...........

*“ப்ளீஸ்... பாபு... ப்ளீஸ்... சாப்”*

*“ஏ...ரிக்ஷா...!*

*ரிக்ஷாவில்... நாம் இருவர்*

*அரவிந்த் நகர்... செகண்ட் கிராஸ்!”*[135]

என்று கூறி, தான் செல்ல வேண்டிய நகருக்கு ஒருவன் வழி கேட்பதாகக் குறிப்பிடுகிறார். ஒரு அலுவலகத்தில், அலுவலர்கள் பேசும் நிலையை அப்படியே பாவனைப்படுத்தி உணர்த்தும் விதமாக உள்ளது.

“Good day sir *சொல்லும்*

*மிஸ் ரூபிக்கு பிசின் முகத்தோடு*

*தேங்க்யூ... மிஸ்!”*[136]

என்று அழகாகத் தகுந்த இடத்தில் தகுந்த சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. அப்பாவிகளும் ஏழைகளும் அடிக்கடி செல்லும் நிலையம் போலீசும் கோர்ட்டும், ஜெயிலும் என்று குறிப்பிடுகிறார். துணி வகைகளைக் குறிப்பிடும் போது,

*“பள்ளிக்கூட யூனிஃபார்ம்*

*பையனுக்கு பெல்பாட்டம்*

*பெண்ணுக்கு மினி மிடி*

*மேக்ஸி”*[137]

என்று ஆங்கிலச் சொற்களில் அழகாக அடுக்கியுள்ளார். அன்னை

நிவேதிதா பாரதியைப் பார்த்த மாத்திரத்தில் 'Come my son' என அழைத்ததாகக் குறிப்பிடுகிறார் கவிஞர். மக்கள் பெருக்கத்தினால் வானங்களில் 'டிராம்கள், பஸ்கள், கார்களில்' போன்ற வாகனங்களில் வழிந்தோடும் மனிதவெள்ளம் எனக் குறிப்பிடுகிறார். மேலே கண்டதைப் போல ஆங்கில வார்த்தைகளையும் இடத்திற்கேற்ப பேச்சு வழக்குச் சொற்களையும் தம் கவிதையில் மிகத் தெளிவாகவும், ஆழ்ந்த சிந்தனையுடனும், உணவுக்குத் தக்க உப்பு போல எல்லாத் தொகுதிகளிலும் அளவாகப் பயன்படுத்தி படிப்போரின் ஆவலை மிகுவித்து கவிதைகளுக்கு இன்பமளிக்கிறார் என்பதை இவ்வாய்வு விளக்குகிறது.

**தொகுப்புரை**

★ கவிஞர் சிற்பியின் கவிதைச் சிறப்புகளாக உவமை, உருவகம், உத்தி, குறியீடு, படிமம், பழமொழி, நம்பிக்கைகள், நகைச்சுவை, பிறசொற் பயன்பாடு போன்றவை இவ்வாய்வில் தரப்பட்டுள்ளன.

★ மாந்தர் பற்றிய உவமைகளில் ஆண், பெண், குழந்தைகள் போன்றோரை அதிகமாக உவமைப்படுத்தியுள்ளமை புலப்படுத்தப்படுகிறது.

★ செயல், பொருள் உவமைகளில் மனிதனின் செயல்கள் பிறவற்றோடு உவமை கூறப்பட்டு பொருள் பற்றி உவமைகளும் சிறப்பாக அமைந்துள்ளமை இவ்வாய்வில் விளக்கப்படுகிறது.

★ இயற்கைப் பொருட்களை உவமை கூறுவதில் வானியல் தொடர்பான உவமைகளாக நட்சத்திரம், சூரியன், நிலா, விண்மீன் போன்றவை சிறப்பிடம் பெற்றுள்ளமை ஆராயப்பட்டுள்ளது.

★ மரம், செடி, கொடி போன்றவற்றை பிறபொருளுடன் உவமையாக்கி உள்ளதை இவ்வாய்வு விளக்குகிறது.

★ உயிரினங்கள் பற்றிய உவமைகளில் விலங்கு, பறவை போன்ற உயிரினங்களை மிகுதியான உவமைக்கு உட்படுத்துவதை இவ்வாய்வு விளக்குகிறது.

★ உருவகப்படுத்தும் போது பெண்ணின் ஒவ்வொரு உறுப்புகளையும் பூக்களுக்கு இணையாக அழகிய சொற்களால் உருவகப்படுத்துகிறார். இயற்கை எழிலை உருவகப்படுத்தும் தன்மையும் இவ்வாய்வில் விளக்கப்படுகிறது.

★ சிறப்பான குறியீட்டுக் கவிதைகளில் மனிதர்களை சர்பமாகவும், பூனையாகவும் குறிப்பிடுகிறார். ‘சிற்பியின் கவிதை வானம்’ என்பதே குறியீட்டுப் பெயராகும் என்பதை இப்பகுதி விளக்குகிறது.

★ சிற்பியின் கவிதைக் கருத்துகளுக்குள்ளே படிமங்கள் நிழலாடுகின்றன. ‘மௌன மயக்கங்கள்’ என்னும் தொகுப்பில் விலைமகள் பற்றிய படிமங்கள் பரவிக் கிடக்கின்றமையை இவ்வாய்வு விளக்குகிறது.

★ இயற்கைப் பொருள் பற்றியும் பிறவற்றைப் பற்றியும் சிறந்த படிமங்களைக் யைாண்டுள்ளமையும் விளக்கப்படுகிறது.

★ கவிதை கூறும் முறைகளுள் உத்திமுறை சிறந்ததாகும். கவிஞர்தம் கவிதையில்புராண கிண்டல் உத்தி, புதுமை உத்தி, முரண் உத்தி, நாடக உத்தி, உருவக உத்தி போன்ற உத்தி முறைகளை சிறப்பாக கூறியுள்ளமையை இவ்வாய்வு விளக்கியமைகிறது.

★ குறிப்ட்ட இடங்களில் தேவையான பழமொழிகளைக்கூறி படிப்போருக்கு சுவையூட்டும் கவிஞரின் எழுத்துவன்மை இவ்வாய்வின் மூலம் புலப்படுத்தப்படுகிறது.

★ பழங்காலம் முதல் இன்று வரை மக்களிடம் வழக்கில் உள்ள நம்பிக்கைகளை தம் கவிதையில் பதிவு செய்துள்ளமையும் புலப்படுகிறது.

★ கவிதைகளைப் படிப்போர் தாம் பெற்ற இனிய அனுபவத்தைப் பிறரிடம் கூறி மகிழுமாறு நகைச்சுவைகளையும் கூறிச் செல்லும் திறனை சிற்பி பெற்றுள்ளமைப் பெறப்படுகிறது.

★ கவிதைகளைக் காலத்திற்கேற்ப படைத்து, வாசகனிடம் எளிதாகக் கொண்டு செல்லும் வகையில் பிறமொழிகளைக் கையாண்டுள்ளார் என்பது ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. இ.சுந்தரமூர்த்தி, நடையியல் அறிமுகம், ப.10.
2. மேலது, ப.1.
3. க.ப.அறவாணன், கவிதையில் உயிர், உள்ளம், உடல், ப.57.
4. இ.சுந்தரமூர்த்தி, நடையியல் அறிமுகம், ப.27.
5. சு.மாரியப்பன், இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் உவமைகள், ப.24.
6. பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.75.
7. சிற்பி, பாரதி கைதி எண்.253, ப.184.
8. பாலா (தொ.ஆ.) சிற்பி கவிதைப் பயணங்கள், ப.99.
9. பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.621.
10. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.33.
11. பாலா (தொ.ஆ.) சிற்பியின் கவிதை வானம், ப.345.
12. சிற்பி, தேவயானி, ப.222.
13. சிற்பி, பாரதி கைதி எண்.253, ப.60.
14. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.29.
15. சிற்பி, ஒரு கிராமத்து நதி, சிற்பி, ப.62.
16. சிற்பி, மூடுபனி, சிற்பி, ப.118.
17. பாலா (தொ.ஆ.), சிற்பி கவிதைப் பயணங்கள், ப.94.
18. சிற்பி, ஆதிரை, ப.103.
19. பாலா (தொ.ஆ.), சிற்பி கவிதைப் பயணங்கள், ப.159.
20. மேலது, ப.213.

21. சிற்பி, மூடுபனி, ப.28.

22. மேலது, ப.106.

23. சிற்பி, தேவயானி, ப.127.

24. மேலது, ப.161.

25. மேலது, ப.176.

26. சிற்பி, பாரதி கைதி எண்.253, ப.61.

27. பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.455.

28. சிற்பி, தேவயானி, ப.167.

29. சிற்பி, மேலது, ப.173.

30. சிற்பி, மூடுபனி, ப.56.

31. மேலது, ப.83.

32. சிற்பி, ஒரு கிராமத்து நதி, சிற்பி, ப.79.

33. சிற்பி, தேவயானி, ப.177 – 178.

34. பாலா (தொ.ஆ.), சிற்பி கவிதைப் பயணங்கள், ப.239.

35. பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.20.

36. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.55.

37. மேலது, ப.70.

38. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.84.

39. பாலா (தொ.ஆ.), சிற்பி கவிதை வானம், ப.383.

40. சிற்பி, தேவயானி, ப.65.

41. மேலது, ப.182.

42. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.40.

43. பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.175.

44. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.49.

45. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.26.

46. மேலது, ப.91.

47. பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.23.

48. சிற்பி, ஆதிரை, ப.19

49. அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, ப.17,

50. மேலது, ப.18.

51. சிற்பி, சிற்பியின் கவிதை வானம், ப.318.

52. மேலது, ப.318.

53. மேலது, ப.319.

54. பாலா (தொ.ஆ.), சிற்பியின் கவிதை வானம், ப.380.

55. மேலது, ப.411.

56. மேலது, ப.602.

57. மேலது, ப.611.

58. மேலது, ப.629.

59. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.80.

60. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.34.

61. மேலது, ப.38.

62. மேலது, ப.54.

63. சிற்பி, தேவயாணி, ப.131.

64. மேலது, ப.158.

65. மேலது, ப.170.

66. சு.மாரியப்பன், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் உவமைகள், ப.44.

67. மேலது, ப.44.

68. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.256.

69. மேலது, ப.256.

70. மேலது, ப.302.

71. மேலது, ப.302.

72. மேலது, ப.302.

73. மேலது, ப.303.

74. மேலது, ப.303.

75. மேலது, ப.303.

76. மேலது, ப.310.

77. மேலது, ப.323.

78. மேலது, ப.329.

79. மேலது, ப.330.

80. மேலது, ப.341.

81. மேலது, ப.356.

82. மேலது, ப.375.

83. மேலது, ப.376.

84. மேலது, ப.377.

85. மேலது, ப.378.

86. மேலது, ப.382.

87. மேலது, ப.396.

88. மேலது, ப.429.

89. மேலது, ப.436.

90. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.41.

91. சிற்பி, மூடுபனி, ப.21.

92. மேலது, ப.43.

93. மேலது. ப.116.

94. பாலா (தொ.ஆ), சிற்பி கவிதைப் பயணங்கள், ப.36.

95. வீ. உண்ணாமலை, புதுக்கவிதையில் சமுதாயம், ப.86.

96. மேலது, ப.87.

97. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.312.

98. மேலது, ப.320.

99. மேலது, ப.492.

100. மேலது, ப.480.

101. தேவயானி, சிற்பி, ப.152.

102. மேலது, ப.216.

103. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.325.

104. மேலது, ப.325.

105. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.48.

106. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.256.

107. மேலது, ப.307.

108. மேலது, ப.309.

109. சிற்பி, ஆதிரை, ப.103.

110. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.298.

111. மேலது, ப.324.

112. மேலது, ப.325.

113. சிற்பி, தேவயானி, ப.187.

114. சிற்ப, ஒரு கிராமத்து நதி, ப.16.

115. மேலது, ப.62.

116. மேலது, ப.77.

117. மேலது, ப.80.

118. மேலது, ப.46.

119. மு. அருணகிரி, தமிழ் இலக்கியத்தில் அங்கதம், ப.21.

120. மேலது, ப.22.

121. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.23.

122. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.248.

123. மேலது, ப.445.

124. மேலது, ப.445.

125. மேலது, ப.494.

126. மேலது, ப.494.

127. மேலது, ப.573.

128. மேலது, ப.594.

129. மேலது, ப.255.

130. மேலது, ப.134.

131. மேலது, ப.121.

132. மேலது, ப.518.

133. மேலது, ப.542.

134. மேலது, ப.508.

135. மேலது, ப.337.

136. மேலது, ப.349.

137. மேலது, ப.491.

## இயல் - 4

## சிற்பியின் சமுதாயப் பார்வை

**சிற்பியின் கவிதைகளில் உள்ளடக்கம்**

**சமூகம்**

பொங்கல், வாழ நினைத்தால் வாழலாம், நீதி, மக்கள் நிலை, தண்ணீர் பிரச்சனை, ஊர்வலம். சாதிப்பிரச்சனைகள், அலுவலகம் பணி, கையூட்டு, மது, ஒற்றுமை. உழைப்பு, வறுமை, வேலையின்மை.

**கல்வியின் நிலை:**

பல்கலைக் கழகங்கள்

**அரசியல்:**

வாக்காளர்கள்.

**குடும்பம்:**

தாய் தந்தை. மழலைக்காலம், பாட்டி

**கவிஞன் படைப்பில் பெண்கள் பிரச்சினைகள்:**

பெண்களுக்குப் பாதுகாப்பின்மை, பெண் சிசுக்கொலை, விதவை, வரதட்சிணை, முதிர்கன்னி, கற்பு, பெண்மையின் மென்மை, பாலியல் கொடுமை, முதுமையிலும் உழைப்பு, பெண்போகப் பொருள், விலை மகளிர், விலைமகளை குலமகளாக்கிய புரட்சி.

**பல்நோக்குப் பார்வை:**

**தொன்மம் - விளக்கம்**

சகுந்தலா, அகலிகை, கண்ணகி, மாதவி, சீதை, மண்டோதரி, பெண்ணின் அவலக் குறியிடாய் தேவயானி.

**இயற்கை பற்றிய சிந்தனை:**

நிலவு, மழை, பொன்னியாறு, அருவி. ஓடை, வானவில், காவிரி, பனி, நதி, பறைச் சிற்பங்கள், கல்லும் காரும், மலையாளக் காற்று, வெள்ளம்.

**அறிவியல் சிந்தனை:**

இணையதளம்

**கவிஞரின் பார்வையில் சான்றோர்:**

பாரதியார், பாரதிதாசன், வள்ளுவர், காந்தியடிகள். பெரியார், விவேகானந்தர், திலகர், கடம்மனிட்ட இராமகிருஷ்ணன், ஷெல்லி, அப்துல்கலாம், அறிஞர் அண்ணா, நேரு, ஜீவா, கம்பர், குருசரண்சிங்.

**தகவல் ஊடகப் பார்வை:**

சுவரொட்டி, பத்திரிக்கை

**அனைத்துலகப் பார்வை:**

நான் கவிஞன், ஓவியன், கவிதை

**அஃறிணை உயிர்களைப் பாடுதல்:**

உயிர்களிடம் இரக்கம்,  உயிர் தத்துவம், மூங்கில், பூச்செடி, கண்ணாடி, நாய்கள். மீன்கள். சிகரெட். உண்டியல். பேனாவும் கட்டைவிரலும், குதிரை.

**சிற்பியின் கவிதைகளில் உள்ளடக்கம்**

கவிதை என்பது வாழ்வின் விமர்சனம் என்பர் மாத்யூ ஆர்னால்டு. கவிஞர்கள் வாழ்வை விமர்சனம் செய்து ஒரு வளமான வாழ்விற்கு வழிகாட்டத் தன் கவிதைகளைப் பயன்படுத்தி வருகின்றனர். மனிதத்தைப் பாடுவதும்; அவனின் மறுமலர்ச்சிக்குத் துணை செய்வதுவும் தான் கவிதை. தான் வாழும் காலத்தில் தன்னைக் கடந்து சென்ற நிகழ்வுகளையும், பட்டறிவினால் உணர்ந்ததைப் பிறருக்கு உணர்த்தும் வகையிலும் கவிஞர்கள் தங்கள் படைப்புகளை உருவாக்குகின்றனர். கவிஞன் பிறப்பதில்லை; உருவாக்கப்படுகிறான். சமுதாய சீர்கேடுகள் ஒழிக்கப்பட்டு அக்கேடு மீண்டும் உருவாகாமல் இருப்பதில் கவிஞர்களின் பங்கு முக்கியமானதாக அமைகிறது. படைப்பாளன் தான் விரும்பும் புதிய சமுதாயத்தை மாற்றுவதற்குப் பல்வேறு பொருண்மைகளில் களம் அமைத்துக் கொள்கிறான். தன்னைச் சுற்றி நிகழும் நிகழ்வுகளே கவிதைகளின் உள்ளடக்கமாகிறது. அத்தகைய உள்ளடக்கங்களை சிற்பியின் கவிதைகளில் ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

கவிஞனின், இதயக் கருவறையில் தோன்றுவது கவிதை. தன் வாழ்வியல் அனுபவங்களுக்கு உயிர் கொடுத்து ஒரு கவிஞன் கவிதையைப் படிக்கிறான். கவிதையின் உள்ளடக்கம் குறித்து அறவாணன் கூறுகையில். “கவிதைகள் அனைத்தும் ஏதோ ஒரு கருத்தைத் தெரிவிப்பனவாக அமைந்துள்ளன. அந்த ஏதோ ஒரு கருத்தே கவிதையின் உள்ளடக்கமாகின்றது”(1) என்கிறார்.

கவிதையின் உள்ளடக்கமானது காலந்தோறும் மாற்றமடையக் கூடியது. காலத்தின் தேவையைப் பொறுத்து கவிதையின் உள்ளடக்கம் மாறுபாட்டிற்கு உட்படுகின்றது. சங்க காலத்தில் காதலும் வீரமும் கவிதையின் உள்ளடக்கங்களாகும். இந்த நிலை படிப்படியாக மாற்றம் பெற்றது. இடைக் காலத்தில் பக்தியும், தத்துவமும், சிற்றிலக்கிய காலத்தில் தனி மனித உணர்வுகளும் உள்ளடக்கங்களாயின. காலத் தேவையையொட்டி புதிய உள்ளீடுகள் பல இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் இடம் பெறத் தொடங்கின. இதைப் புகுத்திய பெருமை பாரதியையே சேரும். இவர் கவிதையில் தேசமும், விடுதலையும் உள்ளடக்கமாக இருந்தன.

பாரதிக்குப் பின் ஏற்பட்ட சமூக மாற்றத்தினை பாலசுப்ரமணியன் குறிப்பிடுகையில், பாரதிக்குப் பின் சமூக நல எண்ணங்களும் சமுதாய ஆட்சியியல் சிந்தனைகளும் பெருகியுள்ளன. நாடு அரசியலில் விடுதலை பெற்று, பொருளாதார விடுதலையும் சமூகத்தை சீரழிக்கும் சாதி, சமய வெறிகளினின்று விடுதலையும் பெறத் துடிக்கின்றது என்றார். அத்துடிப்பின் எதிரொளியே இன்றைய இலக்கியங்கள் என்று கருதியுள்ளனர்.

சமுதாயம் என்பது மக்கள் ஒன்று கூடி வாழும் அமைப்பைக் குறிக்கும். "சமுதாயம் என்பது பல்வேறு நிறுவனங்களை உள்ளடக்கியது. இந்தியாவில் நிலவும் முதன்மை வாய்ந்த சமுதாயச் சிக்கல்களைச் சமுகவியலார் சர்மா இவ்வாறு கூறுகிறார். மக்கள் தொகைப் பெருக்கத்தினால் ஏற்படும் சிக்கல்கள், தீண்டாமை, சாதியம், வட்டார மனப்பான்மை, மொழி வெறி, வகுப்புவாதம்,

வேலையில்லாத் திண்டாட்டம், தொழிலாளர் சிக்கல்கள், நகர் மயமாதலால் ஏற்படும் சிக்கல்கள், பரத்தமைக் குற்றம், தற்கொலை, இளமையில் நெறிபிறழ்ச்சி, இளைஞர் கொந்தளிப்பு, மாணர் அமைதியின்மை, மக்களாட்சி முறையால் ஏற்படும் சிக்கல்கள் என வரையறை செய்கிறார்."(2)

சமுதாயம் என்பது மக்கள் ஒன்று கூடி வாழும் அமைப்பைக் குறிக்கும். சமயம், மொழி, இனம் போன்ற கொள்கைகளைக் கடந்து அனைவரும் ஒற்றுமையுடன் ஒருங்கிணைந்து செயல்படுவது சமுதாயமாகும். இச்சமூகம் மனிதன் தன் வாழ்க்கையைச் சீராக நடத்திச் செல்லும் வழிமுறைகளைக் கற்றுக் கொடுக்கும் பாடசாலையாகவும் விளங்குகிறது. மனிதன் ஒரு சமூகவிலங்கு எனும் அரிஸ்டாட்டிலின் கருத்திற்கேற்ப மனிதன் தனியாக வாழ்வது மிகவும் கடினமான செயலாகு;. மனிதனை விலங்கிலிருந்து பிரித்துக் காட்டுவதே சமுதாயம். சமூகவியல் என்பது மக்களின் வாழ்வியல் பற்றிய அறிவியல் கல்வி.

கூடி வாழும் மனிதன் பல்வேறு பிரச்சனைகளைச் சந்திக்க வேண்டியுள்ளது. கவிஞனும் சமூகத்தின் ஒரு அங்கமாகிறான். ஆதலால் அன்றாடப் பிரச்சனைகளைச் சந்திக்கும் சிற்பிக்கு, சமூகத்தில் நடைபெறும் செயல்கள் ஒவ்வொன்றும் எழுத்து வடிவம் கொடுக்க எளிமை வாய்ந்ததாக அமைகின்றன. தன்னுடைய கிராமத்தைப் பற்றிய அவரின் சிநதனைத் துளிகளை, இயற்கையோடு கூடிய கற்பனை நயத்தில் படைத்துள்ளார். வளர்ந்த சூழல், அவருடைய பண்பாடு கிராம நகர வாழ்க்கையில் ஏற்படும் வெற்றித்

தோல்விகள், பெண்களின் நிலை, சமூகத்தில் பெண் போகப் பொருளாக மதிக்கப்படுதல், நீதி, சட்ட ஒழுங்கு, கல்வியின் சிறப்பு, கல்வியால் ஏற்படும் பாலியல் கொடுமை, உழைப்பே உருவான தொழிலாளர்கள் வயிற்றில் அடித்துப் பிழைக்கும் ஆதிக்க வர்க்கத்தினரையும் தம் கவிதையில் படம் பிடித்துக் காட்டியுள்ளார். கையூட்டுப் பெறுபவர்களையும், கையாலாகாதவர்களையும், இலஞ்சம் வாங்கிப் பிழைக்கும் அரசியல் வாதிகளின் செயல்களையும், தேர்தல் காலங்களில் மக்களை ஏமாற்றி ஓட்டு வாங்கும் முறையையும் தமது கவிதையில் சுட்டியுள்ளார்.

புராணக் கூறுகளையும் இவர் தம் கவிதைகள் பிரதிபலிக்கும். இன்றைய சமூகத்தில் முக்கிய பிரச்சனையாகத் திகழும் வேலையில்லாத் திண்டாட்டத்தை எடுத்துக்கூறி, இன்றைய இளைஞர்களுக்கு அறிவு புகட்டும் நோக்கில் சிற்பி கவிதைகளைப் படைத்துள்ளார். அஃறிணைப் பொருளையும் உயர்திணைப் பொருளையும் சமூகத்தில் கருக் கொண்டுள்ள எல்லாவற்றையும் தம் கவிதையின் பாடுபொருளாக்கி சமுகத்தின் நிலையைத் தெளிவாக உணர்த்தியுள்ளார்.

சிற்பியைப் பற்றி பாலா குறிப்பிடுகையில் “யோசித்துப் பார்க்கிறபோது சிற்பி ஓர் அற்புதம்தான். தமிழ்க் கவிதையின் மரபுப் பெருமைகளைத் தன் குருதித் திசுக்களில் திணித்து அதன் ஆற்றல்களில் உரம் பெற்று வாழ்க்கையை அதன் அர்த்த மண்டபங்களில் சந்திக்கும் நுட்பத்தை சமூக விஞ்ஞானத்திடம் கற்று - புரட்சிகர மாற்றங்களின் குரல்களில் மொழி நனைத்து

அநுபவங்களின் அடிஆழங்களில் கண் திறந்து கேள்விகளில் மௌனம் உடைத்து இயற்கையின் தாவர மொழிகளில் நினைத்து ஆழியாற்றுக் கரையோரக் கிராமங்களில் வாழ்வியல் வர்ணங்களைக் கண்டு மனிதத்தை மேம்படுத்த வந்த அறிவியலின் பரிமாணக் கேள்விகளில் மனம் தேய்ந்து ஆன்மீகத் தேடல்களில் விசார/விசாரணைக் கேள்வி நிழல்களில் இளைப்பாறி வாழ்வின் தீராத ஈர்ப்பு விசைக்குக் குரல் வனைந்து கொடுக்கும் ஒரு படைப்புப் பயணம் சிற்பியின் கவிதைப் பயணம்"(3) என்பர்.

**சமூகம்:**

சமூகம் என்பது பல்வேறு நபர்களின் உள்ளடக்கமாக இருப்பதால், அவர்களின் மூலம் தான் ஒவ்வொரு நிகழ்வுகளும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற நிலையும், மதக்கலவரமும், தண்ணீர் பிரச்சனையும், பல வாடிக்கை மனிதர்களையும் வேடிக்கை மனிதர்களையும் சிற்பி அடையாளம் காட்டுகிறார். "சமூகம் மனிதனின் சமூக உறவுகளில் தோன்றுகிறது. உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளும் மனிதர்கள் அவ்வுறவுகளை நிலைப்படுத்தி, முறைப்படுத்தித் தங்களுக்குள் ஓர் அமைப்பை, அனைவரும் கூடி வாழக்கூடிய நிலையினை ஏற்படுத்திக் கொள்ளும் போது சமூகம் பிறக்கிறது"(4) என்பர்.

**பொங்கல்:**

உழவர்கள் கொண்டாடும் முக்கியமான பண்டிகை பொங்கல் பண்டிகையாகும். பனித்திரையை விலக்கி விட்டு சூரியன் எப்படி

தன் முகத்தைக் காட்டுமோ அதுபோல அனைவரின் மனமும் இனித்திட வந்தாய்!

"திங்களோ தையின் திங்கள்!
தெருவெலாம் சமைய வந்த
பொங்கலோ தமிழர் பொங்கல்!
பொலிகவே என்று வாழ்த்த"(5)

மக்கள் அனைவரும் கூட்டமாகக் கூடி நின்று பொருட்களை வாங்கியும் புத்தாடைகள் அணிந்தும் பொங்கல் திருநாளைக் கொண்டாடினர். எல்லாச் செல்வங்களும் பெற்று இந்நாள் இனிய நாளாக வேண்டுமென பொங்கல் கொண்டாட வேண்டுகிறார் சிற்பி.

**4.1.2. வாழ நினைத்தால் வாழலாம்:**

சமுதாயத்தில் அவரவர் தேவைக்கேற்ப வாழ்க்கை அமைத்துக் கொள்ளப்படுகிறது. சமூகத்தில் ஏற்படும் இன்னல்களைக் கண்டு மனம் வெதும்பாமல், துன்பத்தை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் மனிதனுக்கு வரவேண்டும். எப்படியும் வாழலாம் என்பதைத் தவிர்த்து இப்படித்தான் வாழ வேண்டுமென்ற கொள்கையை ஏற்படுத்திக் கொண்டு வாழ வேண்டும்.

இதயமென்ற பூங்காவைத் திறக்கலாம் - ஆங்கே
எண்ணங்களாம் கல்லறைகள் இருக்கலாம்
புதையலென இலக்கியங்கள் கிறுக்கலாம் - அவை
புற்றீசல் போல் விரைவில் இறக்கலாம் - எனினும்

புதிய விதையைப் பழைய மண்ணில் இறைக்கலாம்;

புதிய விதையைப் பழைய மண்ணில் இறைக்கலாம்"[6]

என்கிறார்.

பேனா கையில் கிடைத்தால் மனதில் உள்ளதை எல்லாம் எழுதி முடித்து விடலாம். யார் என்ன சொன்னாலும் கவலையில்லை தெரு நாய்கள் குலைத்தால் நமக்கென்ன என முடிந்த மட்டும் நமக்காக நாம் வாழலாம் என சமூகத்தை எதிர்நோக்கி வாழும் நிலை பற்றிக் குறிப்பிடுகிறார்.

**நீதி:**

நீதி என்பது வாழ்வில் முக்கியமானதொன்றாகும். நீதி வழுவாமல் பல மன்னர்கள் ஆட்சி புரிந்து வந்த நாடு நம் நாடு. ஆனால் எல்லா இடங்களிலுமே நீதி என்பது முடங்கிக் கிடக்கின்ற நிலையையும், பணம் இருப்பவர் நீதியைக் கையில் வாங்கி விடுகின்றனர் என்பதை,

"கீழ்க்கணட பதவிகளுக்கு

என்னிடம்

கீழ்க்கண்டவர் மட்டுமே

விண்ணப்பம் இடுக

வழக்கறிஞர் - ஊமைகள்

குமாஸ்தா - கை இல்லாதவர்

சாட்சி - குருடர்கள்

நீதிபதி - காது கேளாதவர்

*ஊனமுற்றோருக்கு ஏனிந்தச் சலுகை எனில்*

*நீதி முடமாகாமல் இருக்க!"[7]*

என நீதிக்குப் புறம்பாக நடப்பவர்களை ஊனமுற்றவர்களாக அடையாளம் காட்டுகிறார் ஆசிரியர். சட்டமன்றங்களில் மக்களுக்கான தீர்மானங்கள் சரிவர நடைபெறவில்லையாதலால் அந்த அநீதிகளைக் கொல்வதற்குப் பூச்சி மருந்து அடித்து அதனை மக்கள் மன்றமாக்கும் வரை அதனைப் பூட்டி வைக்க வேண்டும் என்கிறார்.

*"பிரகாச விளக்குத்*

*திரிகளை அணையுங்கள்*

*உண்மைகளை நான்*

*இருட்டில்*

*தேட வேண்டி*

*இருக்கிறது"[8]*

என நீதிகள் இருட்டில் முடங்கிக் கிடப்பதாகத் தன் கவிதையில் குறிப்பிட்டுள்ளார். எளியோருக்கும் நீதி கிடைக்க வேண்டும். அவர்களும் இச்சமூகத்தால் மதிக்கப்பட வேண்டுமென்கிறார்.

**மக்கள் நிலை:**

சிறப்பங்காடி முன்பும் நியாயவிலைக் கடைகளின் முன்பும் மக்கள் படும் அவதியை நம் கவிதையில் குறிப்பிடுகிறார். ஒன்றும் தெரியாத அப்பாவி மக்களாய் நியாய விலைக் கடைகளின் முன்பு மண்ணெண்ணைக்கும், சர்க்கரைக்கும், கோதுமை மாவுக்கும்

காலையிலிருந்து வரிசையில் கால் கடுக்க அன்ன ஆகாரமில்லாமல் நின்று. ஸ்டாக் இல்லை என்று கடைக்காரன் கூறியதும் என்ன காரணம் என்று கேட்காமல் ஏதும் அறியாமல் ஜீவன் இல்லாத பாம்புகளாய் ஊர்ந்து செல்லும் நிலையைத் தம் கவிதையில் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார்.

"மண்ணெண்ணெய்

சர்க்கரை

கோதுமை மாவுப் பாம்புகள்

க்யூவாய்ச் சுருண்டு

காத்துக் காத்துக்

காற்றைக் குடிக்கும்"(9)

என இன்னும் சமூகத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் இந்த முடிவில்லாப் பிரச்சினைக்காகப் பாவப்படுகிறார் கவிஞர் சிற்பி.

**தண்ணீர் பிரச்சனை:**

சமுதாயத்தில் தீராத பிரச்சனையாக பல இடங்களில் நடைபெற்று வருவது குழாயடிச் சண்டையாகும். தண்ணீர் நமக்கு கிடைக்காமல் போய்விடுமோ? இவ்வளவு நேரம் கால் கடுக்க காத்திருந்து பயனற்று போய் விடுமோ? என்ற எண்ணத்தில் பெண்கள் தெருக்குழாய்களில் பிரச்சினையை ஏற்படுத்தி விடுகின்றனர். அவர்கள் பிறரின் மீது கோபம் கொண்டு தகாத சொற்களை வீசி எறிகின்றனர். அச்சொற்களைப் பயன்படுத்த வேண்டாம் என்று சிற்பி விண்ணப்பிக்கிறார்.

“குழாயடிப் போரில்

வென்று பெற்ற குடநீரை

அடுக்களைத் தவலையில்

ஊற்றும்

மனைவியின் சாபம்”(10)

குழாய்ச்சண்டை தெருவோடு முடிந்துவிடாமல், முணுமுணுத்தபடி வீட்டுக்குள் வந்து, அங்கேயும் சாபம் விடும் ஒரு மனையாளின் நிலையைத் தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார். சமூகப் பிரச்சினை குடும்பத்துக்குள்ளும் கோபம் கொள்ள வைக்கும் நிலையை உணர்த்துகிறார்.

இயற்கை நீர் பிடிப்புப் பகுதியான ஓடையிலும் நீர் இல்லாமல் வறண்டு கிடக்கும் நிலையை,

“சாவுக்கு நாள் கேட்கும்

பாவி உயிர்க் கசிவாய்

வற்றுமொரு சிற்றோடை....

அதன் தேக்கத்தின தூக்கத்தில்

கனவுக் குமிழிகள் ....

கனவுக் குமிழிகள்

மெல்லக்

கண் விழிக்கும்...!”(11)

எனக் குறிப்பிடுகிறார். அனைத்துப் பொருட்களையும் இழுத்துச் செல்ல வேண்டிய நீர்பெருக்கு, ஓடுவதற்கு அஞ்சிச் செல்லும்

நிலையைக் குறிப்பிட்டு, தண்ணீர்த் தட்டுப்பாட்டை உணரச் செய்கிறார்.

**ஊர்வலம்:**

ஊர்வலம் பெருந்தலைவர்களுக்காக நடத்தப்படுகிறது. இதனால் பொதுமக்களுக்கு மிகுந்த துன்பங்கள் ஏற்படுகின்றன. போக்குவரத்து இடையூறுகளும் நெரிசலும் ஏற்படுகின்றன. பொதுமக்களின் நலனைப் பொருட்படுத்தாது செய்யும் இக் காரியங்களால் பாதிப்படைவது அம்மக்களே.

தலைவருக்கு அறுபது வயது, ஆதலால் அறுபது இடத்தில் குழி. தலைவரின் வருகைக்காக ஓலைப் பின்னல் தாஜ்மகால்கள், தஞ்சை கோயில்கள் குதுப்மினார்கள் என வானுயர்ந்த கோபுரங்களும், வானைக் கிழிக்கும் ஓசைகளும் வண்ண வண்ண விளக்குகளும் என அணி வகுத்து நின்றன. தலைவரைச் சுற்றிலும் கூட்டமோ கூட்டம்.

"அடுத்த நாள்
உச்சிப் பொழுது
மூடப்படாத
நடுத் தெருக் குழியில்
எகிறிய சைக்கிள்
எறிந்த பையன்
ஓடும் பேருந்தின்
சக்கரச் சகதியில்

தெறித்து விழுந்தான்

ரத்தக் கார்ட்டூனாக .. . .. .

கூட்டமோ கூட்டம்

அப்போதும்...!"(12)

தலைவர் போனதற்குப் பிறகும் கூட்டம் கூடியது, எனத் தன்நிலை உணராத மக்களின் செயலை எடுத்துக் காட்டி, ஊர்வலத்தால் பொதுமக்களுக்கு ஏற்படும் பாதிப்பைத் தன் கவிதையில் குறிப்பிடுகிறார் ஆசிரியர்.

**சாதிப் பிரச்சனைகள்:**

மக்கள் தாங்கள் செய்யும் தொழிலின் அடிப்படையில் வேறுபடுத்தப்பட்டிருந்த பண்டைய காலத்திலிருந்து இன்று வரை சாதிப் பாகுபாட்டால் மக்களுக்கு தீமைகளும் அவல நிலைகளுமே ஏற்படுகின்றன. மனித வாழ்க்கையின் பல்வேறு நிலைகளில் சாதியக் குறியீடுகளால் மக்கள் அலைக்கழிக்கப்படுகின்றனர். உயர்ந்த சாதியினரால் தாழ்ந்த நிலையில் உள்ள மக்கள் துன்பப் படுத்தப்படுகின்றனர். இந்நிலை அவர்களுக்கு உடலளவிலும் உள்ளத்தளவிலும் ஏற்படுகின்றது. நகரங்களை விடவும் கிராமங்களே சாதி அமைப்பால் மிகவும் பாதிப்படைந்துள்ளது என்பதை கவிஞர் சிற்பி தம் கவிதையில் குறிப்பிடுகிறார்.

சாதிக் கலவரத்தால் ஒரு குடும்பம் பெரும் துயரில் ஆழ்ந்துள்ளது. இதில் பாதிப்படைபவர்கள் பெண்களே, ஆண்களுக்கு உயிர்பலி மட்டுமே ஏற்படுகின்றது. ஆனால் பெண்ணின் நிலையோ

பரிதாபத்திற்குரியது. மகளின் கற்பைக் காப்பாற்றத் துடிக்கும் தாயின் நிலையையும், மதக்கலவரத்தின் வீரியத்தையும் காட்சியாகப் படைத்துள்ளார். இதனை,

"அடி மகளே, ஆபத்து ஆபத்து . . . . .
மதக்கலவரமடி மகளே
இந்தா பை அம்பது ரூபா இருக்கு
புடவையும் வச்சிருக்கேன்
ஓடிப்போ மகளே ..."(13)

என்று, எங்கள் நிலை என்னவானாலும் பரவாயில்லை. நீ ஓடிப் போய் பிழைத்துக்கொள் என ஒரு தாய் தன் மகளை காமுகர்களிடமிருந்து காப்பாற்றிய பாங்கை காட்டியுள்ளார்.

உயர் சாதிக்காரர்களால் ஒடுக்கப்பட்ட சாதிப் பெண்கள் பாலியல் கொடுமைக்கு உட்படுத்தும் போது மட்டும் சாதிகள் பார்க்கப்படுவதில்லை. ஒடுக்கப்பட்ட சாதிப் பெண்களை தங்கள் ஆசைக்கு இணங்க தங்களின் முரட்டுத்தனத்தையும் பணத்தையும் பயன்படுத்துகின்றனர். அவர்களிம் தகாத சொற்களைப் பயன்படுத்தி தன் வயப்படுத்துகின்றனர். ஒடுக்கப்பட்ட சாதியில் பிறந்ததைத் தவிர வேறு என்ன பாவம் பண்ணியிருக்க முடியும் என்கிறார்.

"ஆரது? வீரன் மகளா?
சக்கிலியக் குட்டிக்கு என்னடி கொழுப்பு . . . . .
காலங்காத்தாலே

வெக்கமில்லா

\ _ éVÂï s ¿ Ím ØÃV«õ | þâ½òÂ¼ï ...”(14)

என்னும் கவுண்டாின் பேச்சிலேயே சாதி ஏளனப்படுத்தப்படுகிறதை உணர முடியும்.

கலவரத்தின் போது ஈட்டி, வேல், சகலம், துப்பாக்கி, வெடிகுண்டு போன்றவை பயன்படுத்தப்படுகின்றன. இவை அவர்களைக் காப்பாற்றிக் கொள்ள பயன்படுத்தப்படவில்லை. அவரவர் கடவுள் மேல் கல்லெறி படாமல் இருப்பதற்காக பயன்படுத்தப்பட்டவை. தங்களைக் காப்பாற்றிக் கொள்ள முடியாத அவர்களால் கடவுளை எப்படிக் காப்பாற்ற முடியும் என சிந்திக்க வைக்கிறார்.

“எதிரெதிர் தெருவில்
நெருங்கி... நெருங்கி
டிெத்தது ஒரு குண்டு
வாகனங்கள் தூள்
மனிதர்கள் சிதிலம்
குழந்தைகள் கூளம்
எங்கணும் ஓலம்...!”(15)

தெய்வத்தைக் காப்பாற்றுவதாக நினைத்துத் தன் உயிரை மாய்த்துக் கொள்ளும் மக்களின் நிலையைத் தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

இனவெறி பிரச்சினைத் தீராத பிரச்சினையகிவிட்டது என்பதை சிற்பி தன் கவிதையில்,

"இன்னும் இட்டதீ

இன வெறுப்பிலே

அன்னை லங்கையின்

ஆத்மா வேகுதே...!"(16)

மதக்கலவரம் என்றாலே வேலை நிறுத்தம், பேருந்து எரிப்பு, வெட்டு, குத்து என அநீதிகள் தொடர்ந்து கொண்டே போகும். மதக்கலவரம் முடிவுக்கு வராமல் பரம்பரையாகக் தொடர்ந்து கொண்டே வந்து சமுதாய அமைப்பில் பெரும் பாதிப்பை ஏற்படுத்துகிறது என சாதி அமைப்பால் சமூகத்தில் ஏற்படும் பாதிப்புகளை எடுத்துக்கூறி, அவற்றைக் களைய முற்படுகிறார் கவிஞர்.

**அலுவலகப் பணி**

அலுவலகம் என்பது பலர் கூடி பணிபுரியும் அமைப்பாகும். அன்றாடம் நடைபெறும் சமூக நிகழ்வுகளும் இதுவும் ஒன்றாகும். அலுவலக செல்வோரின் நிலையையும் அங்கு ஏற்படும் பிரச்சினைகளை எதிர்கொள்வதையும் கவிஞர் பாடுகிறார். அலுவலகத்தில் தான் பட்ட துன்பத்தை தன் குழந்தையின் மீதும் வீட்டில் உள்ளோர் மீது காட்டும் நிலையைத் தம் கவிதையில் புனைந்துள்ளார்.

"தவறு தான் . . . . .ஆனால்

அலுவலகத் தலைவனே

பணியாள் மீது

வார்த்தைக் குப்பையைக்

கொட்டாதே...!"(17)

என்று அலுவலகப் பணியாளன் நிலையை நினைத்து பரிதாபப்படுகிறார்.

**கையூட்டு:**

மக்களின் அவசரமும், அலுவலர்களின் தாமதமும் தான் கையூட்டு எனப்படுகிறது. கையூட்டு என்னும் சமூகக் கொடுமையினால் மக்கள் பெருமளவில் பாதிப்புக்குள்ளாகி வருகிறார்கள். இது எரியும் பிரச்சனையாக உருவெடுத்துள்ளது. அரசியல் வாதிகளும் இதற்கு விதி விலக்கல்ல.

பல்வேறு அலுவலகங்களில் குலுக்கப்பட்ட உண்டியல்கள் இருப்பது போல, குலுக்கப்படாத பல உண்டியல்கள் கோவில் முன்பும் இருக்கின்றன. கையூட்டைப் பெற்றுக் கொண்டு நாட்டு ரகசியங்களை பிற நாட்டுக்குச் சொல்லும் துரோகிகளும் உருவாகி உள்ளனர். கையூட்டு பெற்றுக் கொண்டு தகாத செயலிலும் இறங்கி நாட்டை சீரழிக்கின்றனர்.

குலுக்கப் படாத
உண்டியல்கள் சிலவும்
இருக்கின்றன
கோயில் வாசல்களில் அல்ல
அலுவலக மேசைகளில்
அதிகாரி கண் சமிக்ஞையில்
கல்லூரி அனுமதியில்
காண்ட்ராக்ட் திரை மறைவில்

சட்டப் புத்தகச் சரிவில்

நட்ட நடுத் தெருவில்

பட்டப் பகலில் . . . . . .."[18]

ஆண்டவன் பெயரைச் சொல்லியும், ஆளுகிறவன் பெயரைச் சொல்லியும் வாங்குகிறார்கள். அது மட்டுமல்ல உண்டியல் என்னும் பெயரில் இந்தா சும்மா கிட என இறைவனுக்கும் கையூட்டுக் கொடுக்கிறார்கள் என லஞ்ச மன்னர்களை சிற்பி தன் கவிதையில் குறிப்பிடுகிறார்.

கல்வி நிலையங்களில் கையூட்டு அள்ளிக் கொடுப்பதும் வாங்குவது அன்றாடம் நடைபெறும் செயலாகிவிட்டது. இது தவறென்று யாரும் தட்டிக் கேட்பதில்லை. கொடுப்பதற்கு தயாராக இருக்கும் போது கைகள் நீளத்தானே செய்யும்.

குழந்தைகளின் படிப்பிற்காக பெற்றோர் அள்ளிக் கொடுக்கின்ற இலஞ்சங்களுக்கு புள்ளி விவரம் ஏதும் இல்லை. யார் தந்தார் எதற்காகத் தந்தார் எவ்வளவு தந்தார் என்பதற்கான புள்ளி விவரங்களும் இல்லை. தங்களுக்கு வேலை நடந்தால் போதும் என்று அள்ளிக் கொடுக்கின்றனர். இது யாரிடமும் சொல்லப்படாத கணக்காகின்றது.

"பெற்றோர்கள் பணப் பசுக்கள்

வற்றக் கறக்கின்ற மந்திரத்தைக் கலையாகக்

கற்றிருக்கும் தொழிற்கல்வி நிர்வாகங்கள்

இனிச் சுரக்க ஏதுமில்லை

இரத்தம் தான் எனும் நிலையில்

அகச் சோதனை செய்ய

வேண்டாமா சமுதாயம்?"(19)

எல்லோரும் கொடுப்பதையும் வாங்குவதையும் தான் தொழிலாகக் கொண்டிருக்கிறார்களே தவிர எவரும் கையூட்டு வாங்குவது தவறு என்று கொடுப்பது தவறு எனத் தட்டிக் கேட்பதில்லை.

**மது:**

குடிப்பழக்கம் உடல் நலத்திற்குக் கேடு என்றாலும் அவற்றை வெறுப்பவர் யாருமில்லர். 'குடி குடியைக் கெடுக்கும்' என விளம்பரப் பலகைகளிலும் போத்தல்களில் எழுதப்பட்டிருந்தாலும் அதை யாரும் பொருட்படுத்துவதில்லை. கால், அரை, முழுசு என போத்தல் ரகங்களை வாங்கி குடித்துவிட்டு கால்கள் தடுமாற. கண்கள் சுழல, வாய் குழற தட்டுத் தடுமாறி காலில் செருப்பைக் காணோம். ஒரு காலையே காணோம் எனப் புலம்பும் குடிகாரனின் நிலையைக் காட்டியுள்ளார்.

இன்று எத்தனையோ குடிமகன்கள் குடி பழக்கத்திற்கு அடிமையாகி சீரழிவதை கண் கூடாகக் காண்கிறோம். தான் அழிவது மட்டுமல்லாமல் தன் குடும்பத்தையும் அவலத்திற்குத் தள்ளுகிறார்கள்.

நாட்டில் குடிக்கத்

தண்ணீர் இல்லை

பாட்டில் தண்ணீர்

அனைவர் கையிலும்

. . . . . . . . . . . . .

மதுக்கடை விற்பனை

மட்டும் அமோகம்

இவர்களுக்கு மட்டும் தண்ணீர்

எப்படி கிடைக்கிறது?"[20]

எனக் குடியின் கொடுமையை விவரிக்கிறார். அரசாங்கமும் மது விற்பனை செய்கிறது. மது விலக்கு இருந்தால் தான் ஒரு வளமையான நாடாக முடியும் என்பது பெறப்படுகிறது.

**ஒற்றுமை:**

மக்கள் தங்கள் பேதங்களை மறந்து மொழி, இனம்,கலாச்சாரம், மதம் போன்றவற்றில் ஒன்றுபடுவதுதான் ஒற்றுமை. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு என்பது முன்னோர் வாக்கு. ஒற்றுமையாக இருந்தால் எதையும் சாதித்து விடலாம். தனியொருவனாக நின்று போராடுதல் என்பது முடியாத காரியம். காரியம் கைகூட வேண்டுமென்றால் அனைவரும் ஒன்று கூட வேண்டும். மத அளவிலும் மனதளவிலும் ஒற்றுமை வேண்டும். கோயில் முன்பு உள்ள திருநீர் விற்பனை செய்கிறார் அப்துல்லர். அவர் மனமெல்லாம் அல்லா அல்லா என இஸ்லாமியர் திருநீரைப் பற்றிக் கூறுவதை தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார். மதத்தை விட மனிதத்தைப் புனிதமாக நினைக்க அறிவுறுத்துகிறார்.

இரு பிரிவினரிடையே உள்ள மத ஒற்றுமையைக் கவிஞர் குறிப்பிடுகையில்,

"அபுல் கலாம் ஆசாத்

ஆரஞ்சு ரசம் தர

கரகரவென்று ஜவகர்லால்

கண்கள் நீர் மல்க

பர்தா அணிந்த முஸ்லீம் பெண்கள்

பரிவுடன் பார்க்க

இருவரும் சமூகத்தார்

ஒற்றுமை சத்தியம் செய்ய . . . . .

அண்ணலின் உண்ணா நோன்பு

நிறைவுற்ற சேதி"[21]

என்று கூறி அடுத்த இரண்டே நாளில் பிர்லா மாளிகையின் பிரார்த்தனைக் கூட்டத்தில் குண்டு வீச்சு என மனங்களை ஒன்றுபட விடாமல் நடைபெறும் செயலைத் தன் கவிதையில் கூறுகிறார்.

நதிகளை இணைப்பதற்காக குரல் கொடுக்கிறீர்கள். மனங்களை இணைப்பதற்காக என்ன செய்யப் போகிறீர்கள் என்கிறார் கவிஞர்.

பாரதி சமய ஒற்றுமைக்கு தானே முன் மாதிரியாக இருந்து அதைத் தம் செயலிலும் காட்டியுள்ளார். புதுவையில் பாரதி இஸ்லாமிய நண்பரின் தேநீர் கடையில் தேநீர் அருந்துவதையே பெரிதும் விரும்புவார். இந்நிகழ்வை சிற்பி நயம் படக் கூறியுள்ளமை போற்றத்தக்கதாகும்.

"இசுலாமியர் கடையில்

எனக்குப் பிடிக்கும் தேநீர்

¶ °¼ï W® Ým °ï^ "(22)

கடலூர் சிறைக்கு மாற்றப்பட்ட பாரதி, கடலூர் சிறை செல்லும் வழியில் இக்கடையில் தேநீர் அருந்தி, அதை செயலிலும் காட்டியவர் பாரதி என கவிஞர் சிற்பி தன் கவிதைகள் மூலம் தேசிய ஒற்றுமை மேலோங்கும் விதத்தைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

என் சமுதாயத்தில் நடைமுறைகளையும் அவற்றால் ஏற்படும் கொடுமைகளையும் கண்டு கொதிப்படைந்து பாடிய கவிஞர்களுள் சிற்பியும் ஒருவர். மேலே கண்டவற்றைப் போல இன்னும் பல பிரச்சனைகளை தம் கவிதையின் கருவாகக் கொண்டுள்ளார். அவற்றை ஆராய்வதன் விளைவாக இவரின் சமுதாய நோக்கு புலப்படும்.

**உழைப்பு:**

பல்வேறு சமுதாயப் பிரச்சனைகளை உள்ளடக்கிய சிற்பியின் கவிதைகளில் உழைப்பு குறித்தும். உழைப்பின் மகத்துவம் குறித்தும் உழைப்பாளியின் நிலை குறித்தும், அவர்களின் உழைப்பை சுரண்டி வாழும் முதலாளிகள் குறித்தும். உழைக்காமலேயே பயன் பெறும் மேல் தட்டு வர்க்கத்தினர் குறித்தும் தம் கவிதையில் குறிப்பிடும் கவிஞர் உழைப்பு என்பதை உடல் உழைப்போடு தொடர்புபடுத்திப் பார்க்கிறார். உழைத்துக் கறுத்த உருவங்களைப் புகழந்துரைப்பதும், உழைப்புச் சுரண்டலை சாடும் போக்கில் எதிர்ப்புக்குரல்

கொடுப்பதும் சிற்பியின் கவிதைகள் உணர்த்துவதாகும். உழைத்துக் களைத்தவர்களுக்கு பசி, வறுமைதான் மிஞ்சும். ஆதலால்தான் முதலாளி வர்க்கத்தை தூற்றவும், உழைப்பாளி வர்க்கத்தைப் போற்றவும் செய்கிறார்.

"இழுத்துக் கட்டிய முக்காட் டின்மேல்
தெருப் புழுதியின் பூச்சு - கொஞ்சம்
இங்கு மங்கும் பார்த்து நின்றால்
கொத்த னாரின் ஏச்சு!
நகத்தில் அழுக்கு முகத்தில் தளுக்கு
நாகு லெச்சுமி கோலம் - அவள்
புகையி லைச்சா றொழுகும் வாயில்
புன்ன கைத்தாம் பாளம்"(23)

என கூலி வேலை செய்யும் ஒரு பெண்ணின் நிலையைத் தன் கவிதைகளில் குறிப்பிடுகிறார். மேலும் சலிக்காமல் தன் வேலையைச் செய்யும் அவளின் கரத்தைப் பிடிப்பவன் புண்ணியசாளி என்கிறார்.

தமது உழைப்பால் பிறர் வாழ்கின்றனர் என்பதை உணர்ந்தும் அவற்றைப் பறைசாற்றாமல் இருக்கிறார்கள் உழைப்பாளிகள். உழைப்பாளியின் உழைப்பில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்பதை உணராமலேயே தன்னால்தான் சமுதாயம் பயனடைகிறது எனப் பெருமையடித்துக் கொள்ளும் செல்வந்தர்கள் இருவரையும் தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

"அகன்ற உலகு நான் என்றது அகல்

அழகிய உடல் நான் என்றது திரி

அசையும் உயிர் நான் என்றது சுடர்

உழைப்பு வடித்த

உதிரத்துளிகாய்ந் தேங்கிய எண்ணெய்

வாய் திறக்கவே இல்லை"(24)

அகல், திரி, சுடர் போன்றவை தனது உழைப்பைப் பற்றி பெருமையடித்துக் கொள்ள, உழைத்து உதிரத் துளியாய் இருக்கும் எண்ணெய் வாய் திறக்காத நிலையை மனித நிலையோடு ஒப்பிடுகிறார்.

கடலில் மூழ்கி முத்தெடுப்பவன் எளிதாக முத்தைப் பெறுவதில்லை. தன் உயிரைப் பணயம் வைத்து முத்தெடுக்கிறான். அந்த விலை மதிப்புடைய பொருளைப் பெற்றுக் கொணரும் உழைப்பாளியின் இருப்பில் ஒரு கந்தலான ஆடையைத்தான் காண முடிகிறது. உழைப்பவர் ஒரு புறமிருக்க. அதைப் பெற்றுக் கொள்பவர் ஒருபுறமிருக்கின்றனர்.

"கைவண்டிக் கூலிக்காரன்

அலுமினிய அட்சய பாத்திரம் திறக்க

அடிவாரத்தில்

பத்தினிப் பெண்ணாய்க் கண்சிமிட்டும்

பழைய சோற்றுப் பருக்கைகள்"(25)

நாளெல்லாம் வியர்வை சிந்த உழைக்கின்ற உழைப்பாளிகளுக்குக் கிடைப்பதோ அலுமினியப் பாத்திரம். அதில் கிடக்கும் சோற்றுப் பருக்கைகளே பத்தினிப் பெண் போலே ஒன்றிரண்டுதான் எனக் குறிப்பிட்டுள்ளார்.

உழைத்து விட்டு மாத சம்பளத்திற்குக் காத்திருப்போர் பெரும்பாடு படுகின்றனர். அவர்களுக்கு முதல் தேதி என்றால் பெருமை. அந்த சம்பள நாளை எதிர்பார்த்துத் தான் அனைத்துக் காரியங்களும் செயல்முறைப் படுத்தப்படுகின்றன.

"முதல் தேதிச்
சக்கர வர்த்திகள்
மாத நடுவில்
மன நோயாளிகள்
கடைசி வாரத்
தத்துவ ஞானிகள்"(26)

என மாதச் சம்பளக்காரர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**வறுமை:**

தன் தேவைகளைக் கூட நிறைவு செய்ய முடியாத நிலையே வறுமையாகும். வறுமை என்னும் நோயில் சிக்கி எத்தனை உயிர்கள் இறக்கின்றன. வறுமை மிகவும் கொடியதாகும்.

"மானங் குலங் கல்வி வன்மை யறிவுடைமை
தானந் தவமுயற்சி தாளாண்மை - தேனின்
கசிவந்த சொல்லியற்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப் பறந்து போம்"(27)

பசி வந்தால் மானம், குலம், கல்வி, தானம், தவம், உயர்வு, முயற்சி, காமம், புகழ், அறிவுடைமை ஆகிய பத்தும் போய்விடும். இந்நிலையைக் குறிப்பிட்டுள்ளார்.

கட்டுப்பாடு இல்லாத பிரசவக் கூடம் போல எண்ணற்ற பட்டினி வயிறுகளைக் கூறுகின்றார். பட்டினியாய் கிடக்கும் பால் முகம் மாறாக் குழந்தையை எண்ணிக் குமுறுகிறார். சோற்றுக்கே வழியில்லை என்றால் வீடு எங்கிருந்து வரும் என்னும் கவிஞரின் வினாவின் மூலம் மக்கள் உணவு, உறைவிடமற்று வாழும் நிலையை அறியமுடியும். வறுமை ஒருவனை இழிதொழிலையும் செய்ய வைக்கும் சக்தி படைத்தது.

"இடது பக்கம் போ என்பது
சாலையின் விதி
இரண்டு பக்கமும்
பிச்சைக்குப் போ என்பது
ஏழையின் விதி
அவன் குடியிருக்க இடமில்லை
நல்ல வேளை
பசி குடியிருக்க
அவன் வயிறுண்டு"(28)

பசி ஏழையின் வயிற்றில் இடம் கேட்டதாகப் பாடியுள்ளார். சாலை வழியைக் கூட மாற்றி விடலாம். ஏழைக்கு விதிக்கப்பட விதி மாறாததாகும் என சமுதாயத்தில் வறுமை இடம்பிடித்து விட்டதை உணர்த்துகிறார்.

"மேனா மினுக்கிகளை

ஊருக்கு அனுப்பி

கலை கெடுத்த பாவத்துக்கு வயல்களில்

களையெடுக்க வைப்போம்

........... ............ ..........

உழைப்பு விழாக்கள் தவிர

ஒரு திருவிழாவுக்கும்

இடமின்றி ஆக்குவோம்"(29)

என உழைப்பின் உன்னதத்தை உணராத மண்ணே உன்னை மாற்ற எனக்கொரு வாய்ப்புக்கொடு எனப் பாரதியைப் போல் மண்ணைத் திருத்தி உழைப்பின் பெருமையைப் பறைசாற்ற விளைகிறார் கவிஞர்.

உழைப்பின் சிறப்பையும் உழைப்பாளரின் சிறப்பையும் உணர்ந்த சிற்பி. இவற்றை மக்கள் உணராமல் இருப்பதைக் கண்டு வருந்துகிறார். உழைப்பை உணர்ந்து இந்நாட்டை வளமிக்க நாடாக்க வழி கூறுகின்றார்.

**வேலையின்மை:**

படித்த இளைஞர் மத்தியில் வேலையின்மை என்பது பெரும்பாதிப்பை ஏற்படுத்துகின்றது. இதனால் அவர்கள் பெரும் உளைச்சலுக்கு ஆளாக நேரிடுகிறது. வீட்டில் இருக்கும் ஒவ்வொரு நபருக்கும் வேலைகள் தனித்தனியே இருக்கின்றன என்பதை அப்பாவுக்கு அலுவலக நேரம், அம்மாவுக்கு வீட்டில் சமையலில் நேரம் சரியாகிவிடும். அக்காவுக்கு தொலைபேசியிலே நேரம்

போகும். தங்கைக்கு கோலம் போடுதல், தம்பி கல்லூரி செல்லுதல், தாத்தாவுக்கு 'இந்து ' பத்திரிக்கை படிக்கும் நேரம், பாட்டிக்கு கோயில் போகும் நேரம், விதவை அத்தைக்குத் தொலைக்காட்சி தொடரில் நேரம் போகும் என இளைஞனின் மனக்குமுறலைத் தன் கவிதையில் வெளிப்படுத்துகிறார்.

"எல்லாருக்கும்

ஒவ்வொரு நேரம்

வேலைக்குப் போக வக்கில்லாமல்

வீட்டில் கிடக்கும் எனக்கு

எல்லாம் ஒரு நேரம்"(30)

எனத் தான் பிறந்த நேரத்தை கடிந்து கொள்வதாகப் புனைந்துள்ளார்.

சமூக முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும் வறுமையைக் கவிஞர் குறிப்பிடுவதாவது, அப்பாவை இழந்ததால் குடும்பம் வறுமையில் வாடியது அதைத் தாங்கும் நிலை ஒரு பெண்ணுக்கு ஏற்பட்டது என்பதை,

"அப்பா இல்லாத

அநாதைக் குடும்பத்தில்

ஆறு வயிறுகள் ஒவ்வொரு நாளும்

பற்றி எரிந்தன

அடுப்பு சாம்பல் பூசி

மௌனம் பூத்துக் கிடந்தது"(31)

என்றும்,

"குடும்பம் பாலத்துச் சுவரில் மோதிய

வாகனம் போல்

வறுமைப் பாதாள

விளிம்பில் நின்றது"(32)

எனக் குடும்பப் பொறுப்பை ஏற்க அப்பா இல்லாததால் வறுமை எங்களை வாட்டுகிறது எனவும். பல பெண்களுடன் பிறந்ததால் அனைவரையும் பார்க்க வேண்டிய குடும்பப் பொறுப்பு என்னைத் தவறு செய்யத் தூண்டியது என ஒரு பெண் கூற்றாகச் சிற்பி தன் கவிதையில் புகுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். வேலையின்மையின் காரணமாக சில பெண்கள் தவறான நிலைக்குத் தள்ளப்படுவதைக் குறிப்பிடுகிறார்.

மனதில் எந்தவிதமான சஞ்சலமும் இல்லாமல் ஆடிப் பாடி விளையாட வேண்டிய குழந்தைகள். தங்கள் கனவுகளை எல்லாம் கட்டுப்படுத்திக் கொண்டு, கூண்டில் அடைபட்ட பறவையைப் போல் இருக்கும் நிலையை,

"கடைத் தெருவில்

வாடிக்கைக்காரர் இல்லாது

'ஷூபாலிஷ்' சிறுவர்கள்

முடங்கிக் கிடந்தார்கள்"(33)

அன்று குடியரசு தினம் என்பதால் தெருக்களில் நடமாட்டம் சற்றுக் குறைந்து தெருக்கள் வெறிச்சோடிக் கிடந்தன.

இந்தியாவில் வறுமை என்பது பல்வேறு விதத்தில் உருவெடுக்கின்றது. முதியோர் முதல் இளையோர் வரை அனைத்து மக்களும் வறுமையில் சிக்கி அல்லலுரும் நிலையை சிற்பியின் கவிதைகள் சித்தரிப்பதை இவ்வாய்வு விளக்குகிறது.

**கல்வி நிலை**

உலக மக்களுக்குக் கல்வி மிகவும் முக்கியமான செல்வமாகும். சிந்தனை நந்தவனமென நம்பிய கல்விக் கூடங்களில் ஆசிரியர்களை விறகு வெட்டிகளாகவும் மாணவர்களை விறகுத் தலையர்களாகவும் குறிப்பிடுகிறார்.

கல்வி என்பது கண் போல மதிக்கத்தக்கது. கல்லானை யாரும் மதிப்பதில்லை. ஒருவனுக்கு சமூகத்தில் மதிப்பும் மரியாதையும் இருக்கு என்றால் அது அவன் கற்ற கல்வியால்தான். செல்வங்களுக்கெல்லாம் சிறந்த செல்வம் கல்விச் செல்வமாக போற்றப்படுகிறது. கேடில் விழுச் செல்வமானக் கல்வியை நாலடியார்,

"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல - நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு"(34)

என்றுரைக்கிறது. இன்று கல்வி என்பது பல கடைச் சரக்காகிவிட்டது. ஆதலால் தான் வேலையில்லாத் திண்டாட்டம் தலைவிரித்தாடுகின்றது.

ஆசிரியர் நிலையைப் பற்றி சிற்பி 'வாத்தியாரு வேலை' என்ற கவிதையில் கூறுகின்றார். மணியடித்தால் பணி துவங்கிவிடும் வாத்தியாரு வேலை எனக் கூறி, மாணவர்கள் மத்தியில் ஆசிரியர்களுக்கு மதிப்பும் மரியாதையும் கிடைக்காத நிலையை எண்ணி வருந்துகிறார். மாணவர்களின் தகாத செயல்களை ஆசிரியன் தட்டிக் கேட்பது, அவர்களுக்கிடையே மனக்கசப்பை ஏற்படுத்தி, மாணவன் ஆசிரியனை எதிரி போல் பார்க்கும் நிலையை உருவாக்குகிறது.

"முணுமுணுத்துச் சுழித்து வைக்கும் கணக்கு வாத்தி யாரு
மூளையெல்லாம் கலங்க வைக்கும் சயன்சுவாத்தி யாரு
மணிக்கணக்காய்க் கதையளக்கும் தமிழ் வாத்தி யாரு
வளவளவென றிழுத்தடிக்கும் இங்கிலீஸ் வாத்தி யாரு"(35)

எல்லோருக்கும் பெயர் வைப்பான் மாணவன். வாத்தியாரை யாரும் மதிப்பதில்லை எனவும், மதிப்பெண் போடும் நேரத்தில் மட்டும் தான் அவருக்கு வரவேற்பு இருக்கிறது. அப்போது மாணவர்கள் பல்லைக் காட்டிக் கொண்டு பண்போடும் பணிவோடும் நடந்து கொள்கின்றனர். மற்ற நேரங்களில் ஆசிரியரை மதிப்பதே இல்லை என ஆசிரியரின் நிலை என்பது மிகவும் வேதனை தருவதாக இருக்கிறது என குறிப்பிட்டுள்ளார்.

**பல்கலைக் கழகங்கள்:**

பல்வேறு விதமான கலைகளின் கூடமாக இது விளங்குகிறது. கல்வி நிலையங்களில் அறிவை வளர்ப்பதோடு மட்டுமல்லாமல், பல மாணவர்களின் ஆராய்ச்சிக் கூடமாகவும் விளங்குகிறது. கல்விக்கு

அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதால், எங்கு பார்த்தாலும் கல்வி நிலையங்கள் நிறைந்துள்ளன என்பதை,

"கலைமகளின்
வெள்ளைத் தாமரை இதழ்கள் போல
சிதறித் தெரியும்
பல்கலைக் கழகக் கட்டிடங்கள்"[36]

எனக் குறிப்பிடுகிறார். பல்கலைக் கழகங்களால் அனைத்து மாணவர்களும் பயன் பெறுவதில்லை. ஆசிரியர்களிடையே ஏற்படும் பூசல்களினால் ஆராய்ச்சி பாதிப்படையும் நிலையை நயமாக எடுத்துரைக்கிறார். பிரச்சனைகள் இல்லாத இடமே கிடையாது என்றும், கல்வி நிலையங்களில் கல்வி போதிக்கப்படுவதோடு மட்டுமன்றி பல தகாத செயல்களும் நடைபெறுகின்றன எனக் கடிந்துரைக்கிறார்.

**அரசியல்:**

மக்கள் நலனைப் பாதுகாக்க மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அமைப்பு அரசு. நம் சமூகத்தில் மக்கள் எல்லா வளங்களையும் பெற்று சிறப்புற வாழ வழிவகைகளைச் செய்து தரவேண்டிய அரசியல் வாதிகள் தங்கள் நலனைக் கருத்தில் கொண்டு பிறர் நலனில் அக்கறை கொள்வதில்லை. "அரசு என்பது ஒடுக்கு முறையை நடைமுறைப்படுத்தும் பலாத்கார அமைப்பு. முதலாளிக்கும் தொழிலாளிக்குமிடையில் ஏற்படும் வர்க்கப் போராட்டத்தில் ஆளும் வர்க்கங்களின் நலன் பேணும் அமைப்பு அரசுயந்திரத்தின் அடிப்படைப் பண்பு இதுவேயாகும்"[37] என்பர்.

எனக்கு அரசியல் கொள்கை உண்டு. அதனைப் பிறர் மீது திணிக்க மாட்டேன். என்னை அறியாமல் என் அரசியல் நிறம் வெளிப்படுவதற்கு நான் ஏதும் செய்வதற்கில்லை என்று சிற்பியின் கவிதைப் பயணங்கள் முன்னுரையில் குறிப்பிடுகிறார் சிற்பி.

கவிஞர் சிற்பியின் கவிதைகளில் அரசியல் வாதிகளின் சுயநலப் போக்கும், சுரண்டல் தன்மையும், பேச்சுத் தந்திரமும் அவற்றால் மக்களுக்கு ஏற்படும் சிக்கல்களும் சித்தரிக்கப்படுகிறது.

"அதிகாரக் கட்டில்
அரவணைத்துக் கிடக்கின்ற
ஆபாசப் பன்றிகளின் கொட்டில்
அரசியல்
இரத்தக் காட்டேரிகள்
வாழும் தொட்டில்"[38]

என அரசியலை அடையாளம் காட்டுகிறார். "அரசியல்வாதி என்பவன் அரசியலில் தன்னை முழுநேரமும் ஈடுபடுத்திக் கொண்டவன், Politician"[39] எனத் தற்காலத் தமிழ் அகராதி பொருளுரைக்கிறது. இன்றைய சில அரசியல்வாதிகள் கவர்ச்சியாகப் பேசி மக்களை நம்பச் செய்து நம்பிக்கைத் துரோகம் செய்கின்றனர். நாட்டின் நலன் கெடுப்பவர்கள் அரசியல் வாதிகளே. அவர்களை மேடை மந்திரவாதிகள் என்கிறார் கவிஞர். மேடை கிடைத்தால் பொய்யுரையாற்றி மக்களின் நெஞ்சங்களை நெகிழச் செய்கின்றனர்.

"தேர்தல் கால வாக்குறுதிகளாய்

இன்னும் கட்டி முடிக்கப் படாது

மண் குதிரை காவல் செய்யும்

மதுரை வீரன் கோயில்"(40)

எனக் கோயிலின் நிலையை உணர்த்துகிறார். அரசியல்வாதிகள் ஊழல் செய்பவர்கள் நாட்டுப்பற்று சிறிதும் இல்லாதவர்கள் மொத்த ஊழலின் குத்தகைக்காரர்கள். சராசரி தேசத்து சக்கரவர்த்திகள் அன்னிய நாட்டுப் பாங்குகளில் பணப்பற்றும், நமக்கு நாட்டுப் பற்றும் உபதேசமாக வைத்த வள்ளல்கள் என்று கூறுகின்றனர். அவர்களுடைய சுயநலத்திற்காக வங்கிகளிடம் நாட்டையே வைத்து விடுகிறார்கள்.

'கின்னஸ்' உலக

சாதனைப் புத்தகத்தில்

கட்சி மாறும் வேகத்துக்கு

'ரிக்கார்டு' வைத்தவர்கள்"(41)

மக்களின் இயல்பான மறதியை தனக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு வெற்று வாக்குகளை அள்ளி வீசுபவர்களாக விளங்குகின்றனர். இன்றைய அரசியல் கோசங்கள் பொருளற்றவை சமுதாய சீர்கேட்டிற்கு அவை காரணமாக விளங்குகின்றன என்பது சிற்பியின் கருத்தாகும்.

**வாக்காளர்கள்**

அரசியல்வாதிகள் எத்தகைய மந்திரச் சொற்களைச் சொன்னாலும் அவற்றை எல்லாம் மனதில் கொண்டு உலக

அரசியலையே மாற்றியமைக்கும் சக்தி வாக்காளர்களுக்குண்டு. இம்மாபெரும் சக்தியால் தான் வேறுபட்ட பல கட்சிகளின் ஆட்சியை மத்தியலும் மாநிலங்களிலும் அமைக்க முடிகிறது.

"ஹரி ஜனங்கள் .... ஆ...
வாக்குச் சீட்டை
அடைகாக்கும் முட்டைகள்
தேர்தல் தீர்ந்தால்
திகு திகுவென எரிய
நல்ல விறகுக் கட்டைகள்"(41)

பாமரமக்கள் வாக்குச் சீட்டை அடைகாக்கும் முட்டைகள் என்பதை உணர்த்துகிறார். தேர்தல் முடிந்தால் அரசியல்வாதிகள் சாதிச் சண்டைகளையும் பிற பிரச்சினைகளையும் தூண்டிவிட்டு மக்களை துன்பத்திற்கு உள்ளாக்குகின்றனர். அப்பிரச்சினையில் எரிவதற்கு நல்ல விறகுக்கட்டைகள் என்று குறிப்பிடுகிறார். அரசியல்வாதிகளின் செயல்களையும் வாக்காளரின் அறியாமையையும் தம் கவிதையின் வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

**குடும்பம்**

குடும்பம் என்பது பல்வேறு உறவு முறைகள் சேர்ந்த ஒரு அமைப்பாகும். அவ்வுறவுகள் அன்போடும் பரிவோடும் பரிமாறப்படும் போது தான் குடும்பம் என்னும் அமைப்பு தழைக்கும். "குடும்பம் ஒரு சிறிய குழு. குறைந்தளவு இது ஓர் ஆணையும் பெண்ணையும் உறுப்பினராகக் கொண்டிருக்கும். ஓர்

ஆணும் பெண்ணும் கணவன் மனைவி என்ற ஓர் உறவு நிலையை ஏற்படுத்திக் கொள்ளும் போது அவர்கள் ஒரு குடும்பமாக அமைகிறார்கள். அவர்கள் கணவன் மனைவியாக அமைந்து ஒன்றாக ஒரே வீட்டில் வாழும் நிலையில் குடும்பம் அமைகிறது. இதில் அவர்களுக்கிடையே அமையும் உறவுதான், அதாவது மண வாழ்க்கை உறவுதான், அவர்கள் ஒரு குடும்பமாக அமைய அடிப்படையாக அமைகிறது"[43] என வாழ்வியற் களஞ்சியம் குடும்பம் என்னும் அமைப்பைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

குடும்ப அமைப்பில் ஒவ்வொருவரும் தங்களுக்குரிய கடமைகளை செவ்வனே செய்கின்றனர். இவ்வமைப்பில் பெண்களுக்கு முக்கிய இடமுண்டு. குடும்ப வாழ்க்கையிலும், சமூகத்திலும் பெண்கள் மேன்மையுடையவர்களாகவும் பண்புடையவர்களாகவும் விளங்குவதை தம் கவிதையில் பதிவு செய்கிறார்.

"நேசிப்பு ... நேசிப்பு
புருசனை போலவே / பண்ணையத்தையும்
குழந்தைகள் போலவே
எருமைகளையும்
உறவுகளையும் போலவே
அக்கம் பக்கத்தையும்"[44]

எனும் வரிகளால் எல்லா உயிர்களிடம் மனிதநேயத்துடன் பழகும் பாத்திரமாகப் பெண்ணை அறிமுகப்படுத்துகிறார். பெண்ணானவள்

தன் கணவன், குழந்தைகளைக் காப்பதுடன் அக்கம் பக்கம் உள்ள சமூக உறவுகளையும் பேணிக் காக்க வேண்டிய அவசியத்தை உணர்த்துகிறார்.

நமது இந்தியப் பண்பாட்டில் குடும்ப உறவுகளில் தாய்மைக்குத் தனிமதிப்புண்டு. இத்தகு மேன்மையுடையதாய் ஒருத்தியின் பண்பு நிலையினை,

"நேசிப்புக்கு எடுத்த ஜென்மம்
கறி தின்னும் அப்பாவுக்குக்
கை கூசாமல் சமைத்தளிக்கும்
கடும் சைவக்காரி"(45)

என்று தனக்குப் பிடிக்காமல் இருந்தாலும் தன் கணவனுக்காக அசைவ உணவு செய்து பரிமாறும் பெண்ணைப் படம் பிடித்துக் காட்டுகிறார். எல்லோரையும் அரவணைப்போடு நடத்துகையில் அக்குடும்பம் வலுப்பெறும் விதத்தைச் சித்திரிக்கிறார்.

**தாய் தந்தை**

அம்மா என்பவள் குழந்தைகளிடம் அன்பும் அரவணைப்பும், கண்டிப்பும் கருணையும் மிக்கவள். குளியல் அறையில் வழுக்கி விழுந்து படுக்கையில் இருக்கும் தன் அம்மாவிற்காக வேதனைப்படும் கவிஞரின் உள்ள உணர்வை அறிய முடிகிறது. கள்ளிப்பழத்தின் முள்ளை அகற்றி வாய் சிவக்க தந்தாளே! என் அம்மா எனத் தன் தாய் தனக்காக செய்தவற்றை எல்லாம் எண்ணி வேதனைப்படுகிறார்.

"கரிப்பும் இனிப்புமான அதன் சுவை
இன்றும் என் அடி நாக்கில்
அம்மா நவீனமாகி விட்டாள்
நான் இன்னும் கிராமத்தில்"[(46)]

என அம்மா நவீனமாகிவிட்டதால் நான் இன்னும் கிராமத்தில் தான் இருக்கிறேன் என்கிறார். தாய்க்குப் பிறகு உலக ஞானத்தை எடுத்துக்கூறி வளர்ப்பவர் தந்தை. தாயும் தந்தையுமே இரண்டு கண்களாக மதிக்கத்தக்கவர்கள். தாயும் தந்தையும் சொல்லிக் கொடுக்கும் நல்ல பண்புகள் என்றும் நம் மனதில் நிலை கொண்டிருக்கும். காலம் அவர்களை அழித்துவிடலாம்; நினைவுகள் என்றும் நிழலாடிக் கொண்டிருக்கும்.

"தாய்மடி சொன்ன
தங்கக் கதைகள்
தந்தை தோள்மீதில் ஆரோகணித்துத்
தழுவியறிந்த அனுபவக் கதைகள்
தானே தடுமாறி எழுந்த கதைகள்
அடுத்த படியாய்
அவனை வளர்த்தன. . ."[(47)]

தாய் தந்தைக்குப் பிறகு, அவர்களின் அன்புக்குப் பிறகு, தன்னை வளர்த்தவை தான் வெளியில் கற்ற அனுபவக் கதைகள் தான் எனக் குறிப்பிடுகிறார்.

**மழலைக் காலம்**

மழலைக் காலம் இனிமையான காலம். எந்தவிதமான கவலையுமின்றி துள்ளித்திரியும் காலம். அந்த மழலைப் பருவமாக நான் இருந்திருக்கக் கூடாதா? போன காலம் தான் மீண்டும் திரும்பி வராதா? என ஏங்குகிறார் கவிஞர். எல்லோர் மடியிலும் தவழ்ந்து எல்லோரின அன்பையும் அரவணைப்பையும் பெற்று, சின்னஞ்சிறிய மலர்க்கைகள் கொட்டி, குறுஞ் சிரிப்பைக் காட்டி, கொஞ்சுத் தமிழ் பேசும் அந்தப் பருவம் எப்படி அழைத்தாலும் மீண்டும் வராது? என ஏங்குகிறார்.

"சின்னஞ்சிறு குழந்தைப் பருவம் - எனும்
சிங்காரப் பூம்படுக்கை தன்னில்
பின்னும் தவழ எனக் காசை - இந்தப்
பேதைப் பிறப்பில் அது ஆமோ?"(48)

என சென்ற காலம் மீண்டும் வராது. அதற்குரிய பருவங்களிலே அவற்றை எல்லாம் அனுபவிக்க வேண்டும். இனி மரண ஓலம் தான். கண்ணே! மணியே என அழைத்த காலங்கள் இனியேது கண்ணீர் துளிகள் தான் எனக் காலத்தின் மதிப்பைக் குறிப்பிடுகிறார்.

**பாட்டி**

குழந்தைகளுக்கு செல்லம் என்றால் பாட்டிதான். தன் மடியில் அமரவைத்து கதை சொல்வது. குழந்தைகள் ஆசைப்படுவதை வாங்கித் தருவது போன்றவற்றால் பாட்டியின் மீது பாசம் ஏற்படும்.

பள்ளி விடுமுறை நாட்களில் பாட்டி வீடு செல்வதென்றால் அலாதி இன்பம்,

"கும்மாளமிட்டபடி வந்தனர்

குழந்தைகள் பாட்டியைப் பார்க்க

லூட்டிக்குப் பெயர் போன கடைக்குட்டி

பாட்டி கன்னத்தில் முத்தமிட்டது

பரவசமானவள் கேட்டாள்

ஏன்டா கண்ணா என்னடா வேணும்?"(49)

எனறு கேட்டவுடன் குழந்தைகள் கோக் வேணும் பாட்டி என்றதும் குழந்தைகள் தானே வாங்கிக் கொடு தாயி என்று கூறியவுடன் ஒத்துக் கொண்டாள் மருமகள் என, குடும்பத்தில் மாமி, மருமகள், பாட்டி, குழந்தைகள் உறவுமுறைகளைத் தன் அனுபவப்பூர்வமாக விளக்கிக் காட்டியுள்ளார். இது போல் உறவு கொள்ளும் இடங்களில் மாமி மருமகள் பிரச்சினைகள் ஏது? சில இடங்களில் மாமிக்கும் மருமகளுக்குப் பிரச்சினை தலைதூக்குவது வழக்கம். அதனைக் கவிஞர்,

"மாமீ! உமக்கும் தான்

மருமகள் மீது

காரத் தாளிப்பு

வேண்டாம் அம்மா!"(50)

இருவரும் அம்மா, பிள்ளை போல் உறவு கொள்வதே மேலானது. மருமகளைக் கடிந்து கொள்வது நல்லதல்ல என அத்தைமார்களுக்கு அறிவுரை பகர்கிறார் கவிஞர்.

வாழ்க்கை என்பது மேடுபள்ளங்கள் நிறைந்தது. இன்பமும் துன்பமும் சமமாக எல்லோரையும் பாதிக்கும். ஆதனால் தான் கவிஞர் 'போதுமடா போதுமிந்த போலி வாழ்க்கை. பொய்யை விதைத்து பொய்யையே அறுவடை செய்யும் கேலி வாழ்க்கை' என்கிறார். தான் அனுபவித்து உணர்ந்த வாழ்க்கைக் கருத்துக்களைத் தன் கவிதையில் வெளியிட்டுள்ளார்.

வாழ்க்கை என்பது முள் நிறைந்தது. நன்றாக இனிக்கும் சுவை கொண்ட பலாப்பழத்தின் மேனியெல்லாம் ஆயிரம் முற்கள் அதனுள் தான் அழகிய கனி. அதுபோல் இனிப்பான வாழ்க்கையில் ஆயிரம் இன்னல்கள்; துன்பங்கள்; துயரங்கள் சட்டென்று குத்தி சுருக்கென்று வலிக்கும் முள் முள்ளுக்கும் முள்வேலி தேவைப்படுகிறது. காலத்தைக கணிக்கும் கடிகாரத்தில் முள். தேவகுமரன் தலையில் சூட்டப்பட்டவை முள். அழகான ரோஜாவை பறிக்கத் தொட்டால் அதிலிருந்து தீண்டுவதும் முள். இதனை,

"பாதை முள்
படுக்கை முள்
இருக்கை முள்
வாழ்க்கை முள்
ஆன மனிதனைப் பார்த்துச்
சிலிர்த்துக் கொண்டது
முள்ளம் பன்றி"(51)

அங்கமெல்லாம் முள். வார்த்தையெல்லாம் முள். எண்ணமெல்லாம் முள் எல்லாமே முள்ளாக, மற்றவர் துன்பப்படுவதைக் கண்டு ரசிப்பது

தான் மனித இனம். ஆதலால் தான் கவிஞர் முள்ளும் ஆயுதம் என்று தெரியாதா? என வினாவைத் தொடுக்கிறார். இது யாரும் சொல்லித் தராமலேயே நாமாகக் கற்ற வித்தை போலும்! என வாழ்வின் உறவுகளையும் நெருடல்களையும் தம் கவிதையில் புனைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**பெண்களின் பிரச்சினைகள்**

ஒரு சமுதாயத்தை முன்னேற்றி, நாட்டை முன்னேற்றும் பொறுப்பும் பெண்ணிடம் உள்ளது. பெண்ணானவள் சமுதாய அமைப்பில் எந்த இடத்தை வகிக்கிறாள். அவளின் நிலை சமுதாயத்தில் எவ்வாறு மதிக்கப்படுகிறது. எந்தவிதமான கொடுமைக்கு உள்ளாகிறாள் என்பதைப் பற்றி சிற்பி தன் கவிதையில் சிறப்பாகப் புனைந்துள்ளார். பிரித்தானியக் கலைக்களஞ்சியம் பெண்மை என்ற சொல்லுக்குப் பெண்மை மீட்டெழுச்சி என்று பொருள் கூறுகின்றது. பெண்ணியம் என்ற சொல் மிகவும் அண்மைக் காலத்தில் தோன்றி வளர்ந்து வருகிறது. அது பெண்ணுரிமைக்காகப் போராடுவதோடு பெண்ணின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையிலும் அவர்கள் ஆண்களுக்கு சமமானவர்கள் என்னும் உயர் நெறியை நிலை நாட்டும் நோக்கத்தைக் கருவாகக் கொண்டு இயங்கி வருகிறது.(52)

'மங்கையராய்ப் பிறப்பதற்கு நல் மாதவம் செய்திட வேண்டுமம்மா' என்று பெண் பிறப்பை உயர்வுபடுத்தியுள்ளார் கவிமணி. சங்ககாலச் சமுதாயத்தில் பெண்களுக்கு மிகுந்த கட்டுப்பாடுகள் விதித்துள்ளனர். இலக்கியங்களும் அதையே

வலியுறுத்தின. தமிழ்ச் சமுதாயம் பெண்களுக்கென விதித்துள்ள சில கட்டுப்பாடுகளை மீறி அவர்கள் புரட்சி செய்ய வேண்டும் என்ற கருத்து புதுக்கவிதையாளர்களிடம் இருப்பதை அறியலாம்.

பெண்கள் இன அடிப்படையில் அடக்கப்பட்டதைப் போலவே, அவர்களின் இலக்கியங்களும் அவர்களைப் பற்றிய பதிவுகளும் மொழி அடிப்படையில் இருட்டடிப்புச் செய்யப்பட்டுள்ளன. அன்று எல்லாம் ஆணின் சார்பாக எழுதப்பட்ட ஆணாதிக்க மொழி. இதனைக் கண்ட சிற்பி,

"சூரிய மையத்தில் வெப்பம் எடுத்து
ஆர்க்டிக் மடியை உருக்கும்
நெருப்பு எழுத்துக்கள் நமக்கு வேண்டும்
அந்த நெருப்பு
நம் வீட்டு அடுப்பங்கரைகளில்
சோறு சமைக்கும்
அமுத விரல்களில் அடங்கவும் வேண்டும்"[53]

என்று கூறுகிறார். இன்று பெண்கள் கலை இலக்கியத்துறையில் சிறப்பாக முன்னேறி வருகின்றனர். பெண் படைப்பாளர்களும் பெருகியுள்ளனர். 'அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பெதற்கு' என்ற நிலை மாறி அண்டத்தில் பெண்கள் இல்லாத துறைகளே இல்லை என்று எண்ணுமளவிற்குப் பெண்கள் முத்திரைப் பதித்து வருகின்றனர் என்றும், பெண்களின் எழுத்துக்கள் வல்லமை படைத்தவையாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

**பெண்களுக்குப் பாதுகாப்பின்மை**

பெண்கள் தனிமையில் எங்கும் செல்வது என்பது முடியாத காரியமாகிவிட்டது. பெண்கள் வீட்டை விட்டு வெளியே சென்றாலே ஆபத்து. இப்பொழுது வீட்டிலும் ஆபத்து தான். வெளியில் சென்றால் பாலியல் கொடுமைகளுக்கு ஆட்படுகிறார்கள். அலுவலகங்களிலும், பேருந்துகளிலும், ஆலயங்களிலும் கூட பெண்களுக்குப் பாதுகாப்பு கிடைப்பதில்லை. பெரும்பாலான ஆண்களுக்குப் பெண் என்றால் ஏளனப் பொருளாகத் தோன்றுகிறது.

பெண்கள் இன்னும் மலர் கொய்யும் பூந்தோட்டமாகத் தான் இருக்கின்றார்கள். ஆண்கள் மட்டும் அவர்களின் சதைகளைக் கிழிக்கும் முட்களாக இருக்கின்றனர். அன்று சீதைக்குப் பாதுகாப்பில்லை அதனால் தான் இராமன் அக்கினிக் குண்டத்தை அந்தப் பெண்ணின் நெஞ்சில் வைத்தான். ஆணுக்கொரு நீதியும் பெண்ணுக்கொரு நீதியும் வழக்கில் இருந்தது.

"பூக்களுக்கு
முதுகெலும்பு இல்லை
பெண்களுக்குப்
பாதுகாப்பும் இல்லை"(52)

பெண்களை காமவுணர்வுடன் பார்க்கும் நிலைதான் மேலோங்கி இருக்கிறது எனப் பெண்ணின் ஒவ்வொரு நிலையிலும் பாதுகாப்பற்ற பரிதாபத்திற்குரியவர்களாகக் காணப்படுவதைத் தம் கவிதைகளில் சுட்டிச் செல்கிறார்.

**பெண் சிசுக்கொலை**

பெண் பிள்ளைகள் பிறந்தால் அது தனக்குப் பாரம்; அதற்கு அதிகமான பொருளாதாரமும் விரையமாகும் என நினைத்தனர். அதனால் தான் பெண்பிள்ளைகளை வெறுத்தனர். பெண் பிறந்தவுடன் கள்ளிப்பால் ஊற்றி அல்லது நெல்லை வாயில் போட்டு கொல்லும் பழக்கம் இன்றும் தொடர்கிறது.

சிற்பி, தன் கவிதையில் பெண் சிசு கொலையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இக்கொலை சமுதாயத்தில் இன்னும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதை, கவிதை எழுத சொல் தேடி அலையும் நேரத்திற்குள் ஒரு கொலை நடந்திருக்கும் எனக் கூறுகிறார். இதனை,

"அடுத்த சொல் வந்து
அமரத் தொடங்கு முன்
பெண் சிசு ஒன்றை
மண் தின்றிருக்கும்"(55)

எனக் குறிப்பிடுவதன் மூலம் சிசுக்கொலை அதிகமாக நடைபெறுவதை உணர்த்துகிறார். ஒரு ஆண் தன் உடல் தேவைக்காகக் கட்டிய மனைவியையும் கைக்குழந்தையையும் பாழும் கிணற்றுக்குப் பலியாக்கிய காட்சியைத் தம் கவிதையில் எடுத்துக் காட்டியுள்ளார். பெண்பிள்ளையாக இருந்தாலும் மனைவியாக இருந்தாலும் பெண்ணுக்குத் துரோகம் செய்தவரை பெண் சாபம் சும்மா விடாது எனக்கூறிப் பெண்மைக்குத் தீங்கு செய்வோரைக் கண்டு கொதித்தெழுகிறார்.

"அய்யோ என்னும் குரலும்

மழலையின் ஓலமும்

பாழும் கிணற்றின் அடிவயிற்றில்"(56)

எனத் தன் மனைவியுடனும் மகளுடனும் வாழ்ந்த சுகத்தைக் கூட நினைக்காது மற்றொரு பெண்ணின் அரவணைப்பிற்காக இக்கொடுமையைச் செய்தவரை ஆசிரியர் கண்டிக்கிறார்.

**வரதட்சிணை**

இன்றைய சமுதாயத்தில் பெண்களைச் சீர்குலைக்கும் கருவியாக வரதட்சிணையைக் கூறுவர். இதனால் பெண்களின் வாழ்க்கையில் எண்ணற்ற பிரச்சினைகள் எழுகின்றன. வரதட்சிணை என்பது, திருமணத்தின் போது பெண் வீட்டார் மணமகனுக்குத் தரும் தொகை; Money give by the bride's parents to the groom; dowry எனத் தமிழகராதி விளக்கமளிக்கிறது. மாமியார் கொடுமைக்கும் கணவன் சித்ரவதைக்கும் காரணம் வரதட்சிணையாகும். இதனால் பெண்ணும் பலியாகின்றாள்.

"கொட்டு முழக் கொடுத்து

கூதலிட்டு வந்த மழை

பொட்டு வச்சுப் போனதல்லோ

பூ முடிச்சு வக்கலியே

......... .......... ..........

கன்னி கழியிலியே அவ

கட்டுக் குலையாம வெறும்

கல்லாக நிக்கிறாளே"[58]

என்று பெண்ணின் பருவ வளர்ச்சியினை மழையோடு தொடர்புபடுத்தியும் திடீரென வீசும் திசைமாறிய காற்றால் அம்மழை பெய்யாது ஒழித்தல் போல, மணமகன் கேட்கும் எதிர்பாராத வரதட்சிணையால் ஒரு பெண்ணின் வாழ்வு பாதிப்புக்கு உள்ளாவதைத் தம் கவிதையில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

சில சமயங்களில் பெண்வீட்டாரே தானே முன்வந்து பணம் கொடுக்கும் வழக்கமும் இருக்கிறது என்பதையும் சிற்பி குறிப்பிடுகிறார். பெண் வீட்டார் திருமணத்திற்குச் சம்மதம் தராத நிலையில் அல்லது காதல் மணம் கடிது என உரைக்கும் தருவாயிலும், இருமணம் ஒன்றுபட்டு வாழப்போகும் நிலையில் தாத்தாவின் ஆசிர்வாதமும் சீரும் அப்பெண்ணுக்கு சேர்வதாகக் கூறியுள்ளார்.

"இந்தா இதெ வச்சுக்க

அப்புச்சி சீர்ப்பணம்

மடியிலிருந்து

அழுக்கடைந்த ஐந்து நூறு ரூபாய்த்

தாள்களை நீட்டினார்

அப்புச்சி"[59]

என வீட்டாருக்குத் தெரியாமல் நடக்கும் காதல் திருமணத்திற்கும் வரதட்சிணைக் கொடுத்தனுப்பும் வழக்கத்தைத் தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

**விதவை**

கணவனை இழந்த பெண்ணுக்கு சமூகம் தரும் பெயர் விதவை. இவள் சமூகத்தாரால் எல்லா நிலைகளிலும் புறக்கணிக்கப்படுகிறாள். எந்தவொரு நல்ல செயல்களிலும் இவள் கலந்து கொள்வதில்லை. சமூகம் இவளுக்கு எந்த அங்கீகாரமும் கொடுப்பதில்லை. ஆதலால் தான் கவிஞர் விதவைப் பெண்ணுக்கு மறுமணத்தை வலியுறுத்துகிறார்.

“அது சந்தை
அவளே மங்கலம் இழந்த மங்கை
சந்தை
வாரம் ஒருமுறை கூடும்
அவளுக்கு
நேரம் எப்போது மாறும்?”[59]

ஒரு விதவைக்கு மறுமணத்தை வலியுறுத்தும் சமுதாயக் கவிஞராகத் திகழ்கிறார். சமுதாய முற்போக்குச் சிந்தனை உடையவராகவும் காணப்படுகிறார்.

ஆண்கள் மனைவி இறந்தவுடன் மறுமணம் செய்து கொள்கின்றனர். ஆனால் அதே நிலை பெண்ணுக்கு ஏற்பட்டால், இச்சமூகம் அவளுக்கு வேறு பெயர் சூட்டி விடும். விதவைப் பெண் தன் மனதுக்கு விரும்பியவனுடன் கூடி வாழலாம் என்ற நிலையை கவிஞர் தம் கவிதையில் புகுத்தியுள்ளார்.

"ஒரு வனதேவதை போல
ஆற்றங்கரை நாணல் புதரிலிருந்து
மீசை அரும்பாத இளவட்டம்
ஒருவனுடன்
வெள்ளை சேலையை ஒதுக்கியபடி
வெளியே வரும்
சின்னத் தாஜ்மகால்
கிராமத்து இளம் விதவை"(61)

என்று விதவைப்பெண் தனக்கானத் துணைவனைத் தானே தேடிக் கொள்ளலாம் எனும் புரட்சிகரமான சிந்தனையை உருவாக்கியுள்ளார்.

**முதிர்கன்னி**

திருமணம் ஆகாமல் நீண்டநாள் வாழும் பெண்ணை முதிர்கன்னி என்பர். பெண் என்றாலே பாரம் என்று நினைக்கும் சமுதாயத்தின் மத்தியில் முதிர்கன்னிகளின் நிலையும் பெற்றோரின் நிலையும் மிகவும் பரிதாபத்திற்கு உரியதொன்றாகும். இதனைக் கவிஞர்,

"ஏழைப் பெண் - தலையில்
எப்போதும் பூப் பாரம்
இவளோ தகப்பனுக்கு
எப்போதும் மனப் பாரம்"(62)

என பெண்ணின் திருமணம் முடியும்வரை பெற்றோருக்கு உணவு,

உறக்கம் சரிவர இருக்காது. பெண்ணைக் குறிப்பிட்ட பருவத்தில் மணம் முடித்துக் கொடுப்பதைப் பெரும் பேற்றாக எண்ணினார். 'முதிர்க்க(ன்)னி உள்ளே ஆயிரம் கனவு விதைகள்' என்ற ந.காமராசனின் கவிதை இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

**கற்பு**

சங்ககாலம் தொடங்கி இன்றுவரை கற்பு பற்றிய கருத்தாக்கங்கள் பல்வேறு கோணங்களில் பதிவு செய்யப்படுகிறது. கற்பை வலியுறுத்திப் பல்வேறு இலக்கியங்கள் படைக்கப்படுகின்றன. கற்பு என்பது பெண்ணுக்கு மட்டும் உரியதன்று. ஆண், பெண் இருவருக்கும் பொதுவில் வைக்கப்பட வேண்டும். கற்பை இருநிலைக் கண்ணோட்டத்தில் குறிப்பிடுகிறார்.

"அம்மா நகைகளை விற்றாள்
அப்புறம் காய்கறி விற்றாள்
தலையில் சுமந்து விறகு விற்றாள்
பிறகு
கற்பை விற்றாள்
எங்களுக்கு
கால் வயிறு நிரம்பியது"(63)

வறுமையில் உழலும் குடும்பத்தில் பசி நோயைப் போக்கும் மருந்தாகக் கற்பு பயன்படும் விதத்தை வெகு நேர்த்தியாகச் சித்திரித்துள்ளார். இதில் கற்பு என்பது உடல் ரீதியானது என்னும் கருத்தை அறிய முடிகிறது.

ஒழுக்க மீறலால் சமூகச் சீர்கேடுகள் வருமானால் அதில் பெண்ணிற்கு எவ்வளவு பங்குண்டோ, அதைவிட அதிகமான பங்கு ஆணிற்கும் உண்டு. சிலப்பதிகாரத்தின் நோக்கம் பெண்ணின் கற்பை புகழ்வதல்ல. கோவலன் போன்ற ஆணினம் செய்யும் தவறுகளினால் ஒரு அரசே கவிழ்ந்துவிடும் என்னும் நிலையை வலியுறுத்துகிறார்.

"பெண்ணின் கற்பைப்
பேச எழுந்த
பெருநூல் அல்ல
ஆணின் கற்பு வழுவினால்
குலைவது குடும்பம்
மட்டுமா?
கலைவது அரசும் கூட என்று
காட்டிய எச்சரிக்கை
சிலப்பதிகாரம்"(64)

என ஆணிற்கும் கற்பு வலியுத்தும் பாங்கு போற்றத்தக்கதாகும். இவ்வாறு கற்பை உடல் ரீதியாகப் பார்க்கும் கவிஞர் மனக்கற்பு குறித்தும் சிந்தித்துள்ளார்.

**பெண்மையின் மென்மை**

இயல்பிலேயே அன்பும், பண்பும், பரிவும் நிறைந்த குணம் பெண்மைக்குரியது. எளிதில் உணர்ச்சி வசப்படும் தன்மையும் தம்மீது அன்பு கொண்டவர்களை விட்டுப் பிரியாத குணமும் சுட்டப்படுகிறது. அன்பு காட்டுவதில் பெண்ணுக்கு நிகர் பெண்ணே

தான். மனிதர் அல்லாத பிற உயிர்களிடம் அன்பு காட்டும் தேவயானியை,

"எப்போதும் உனக்கு
ஆசிரமம் மாட்டுக் கொட்டகை
யாகசாலை - அப்பாவுக்கு
பாத பூசை - பணிவிடை
இதுதான் ஞாபகம்!
பதற்றமும் கோபமுமாக
எழுந்திருந்தாள் அவள்"(65)

என்று தம் மனதில் இடம்பிடித்து தன் அன்பிற்குப் பாத்திரமானவரை உயிரினும் மேலாய் மதிக்கும் பண்பு பெண்களுடையது என்பதை தேவயாணியின் மூலம் வெளிப்படுத்துகிறார். தன் தாய், தந்தை, காதலன் மற்றும் பிற உறவுகளுக்கு துன்பம் ஏற்பட்டாலும் அதை பொறுத்துக் கொள்ள இயலாதவர்கள் பெண்கள். தன்னைவிட தன் குடும்பத்தை நேசிப்பவள். தேவயானி தன் தந்தையிடம்,

"எனக்கு அப்பாவும் வேண்டும்
என் அன்பனும் வேண்டும்
முதலில் மிருத சஞ்சீவினியை
உங்கள் வயிற்றிலிருக்கும்
கசனுக்குச் சொல்லுங்கள்
கற்பூரமல்லவா பற்றிக் கொள்ளுவான்"(66)

எனத் தன் காதலன் மரணித்திருக்கும் வேளையிலும் கூட அவனின்

அறிவுத் திறனை வெளிப்படுத்துகிறாள். பெண் எதற்கும் இரக்கப்படும் தன்மை உடையவள். தான் அன்பு செய்தாரை எச்சூழ்நிலையிலும் விட்டுக் கொடுக்கும் மனம் இல்லாதவள் என்பதைக் கவிஞர் தன் படைப்புகளின் வழிக் குறிப்பிடுகிறார்.

**பாலியல் கொடுமை**

சிறு குழுந்தைகள் என்ற நினைப்பில்லாமல் தங்கள் ஆசைக்கு அப்பிஞ்சுகளை பலியாக்குகின்ற கொடுமையை எங்கும் காண்கின்றோம். வயது வராத இளஞ்சிறுமிகள் இக்கொடுமைக்கு அதிகம் பலியாகின்றனர். இந்தக் கவிதையை எழுதி முடிப்பதற்குள் எத்தனை பள்ளிச் சிறுமிகளை காமம் கொன்று தீர்த்திருக்கும் என்று கவிஞர் கூறும்போது இச்சமூகத்தில் பாலியல் கொடுமை எந்தளவு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதை அறியலாம்.

பள்ளிக்குச் செல்லும் மாணவி ஆசிரியரின் தகாத நடத்தையால் தன் எதிர்காலத்தையே இழந்து, தவிக்கும் நிலையையும் அத்துயர் தாங்காத பெற்றோரின் நிலையையும் தம் கவிதையில் உணர்த்துகிறார். மகளின் இந்நிலையை வெளியில் சொல்ல முடியாமல் மனதுக்குள்ளேயே விம்மியழும் தாயின் மனக்குமுறலை வெளிப்படுத்தியுள்ளார். இதனை,

"ஒரு மழைக்கால ஞாயிறில்
இந்த நட்சத்திரம்
எட்டாம் வகுப்பில்
காலடி வைத்தது

‘வேண்டாம் சார் ... சார் ....

வேண்டாம் சார் ....’

என்று கெஞ்சிய தளிர்க்குரல்

மூங்கில் தட்டிகளின்

மூஞ்சியில் தெறித்தது”(67)

எனக் குறிப்பிட்டுள்ளார். மாதங்கள் சென்றது வயிற்றில் வெண்ணெய் உருண்டையாய் மகவு திரண்டது எனச் சிறுமிக்கு நேர்ந்த கொடுமை ஒவ்வொன்றையும் அடுக்கடுக்காய் கூறியுள்ளமையால் இவரின் சமூக அக்கறையும், ஆசிரியர்களின் பாலியல் கொடுமையை வெளிச்சம் போட்டுக் காட்டுவதாய் அமைந்துள்ளது.

**முதுமையிலும் உழைப்பு**

உழைப்பு என்பது எல்லாம் பருவத்துக்கும் உரியது. ஆனால் முதுமையில் உடல்நிலை ஒத்துழைப்பதில்லை. வயதான நிலையிலும் பிறரை நம்பி இருக்காமல் தன் கையையே நம்மியிருக்கும் மூதாட்டியை தம் கவிதையில் படம்பிடித்துக் காட்டியுள்ளார். கோடுகள் நிறைந்த முகம். காலையிலிருந்து மாலைவரை சாக்குப் பையில் விரித்த மாம்பழங்களுடன் இருந்தும் நினைத்தது போல் அவளின் சுருக்குப்பை நிறையவில்லை எனும் ஏக்கத்தை,

“அனல் பழுத்த உச்சிவெயிலில்

வதங்கிப் போனது

இவளா?, பழமா?

தெரியவில்லை”(68)

என வெயிலின் கொடுமையையும், மூதாட்டியின் நிலையையும் எடுத்துரைக்கிறார். மாம்பழ விரிப்பை பார்த்துச் செல்லும் குழந்தையிடம் தன் கூடையைக் கட்டும் நேரத்தில் கையில் மாம்பழம் கொடுத்தனுப்புகிறாள். இதன்மூலம் முதுமையின் நிலையையும் உழைப்பையும் கிழவியின் இளகிய மனத்தையும் காணமுடிகிறது.

**பெண் போகப் பொருள்**

பெண் ஆண்களின் இச்சைகளைத் தீர்க்கும் பொருளாகவே கருதப்படுகின்றாள். பெண்ணின் நிலையைக் கவிஞர் கூறுகையில், பொன்னாத்தாள் என்னும் குழந்தை பிறந்தவுடன் தன் தாயை இழந்தது. தன் தந்தையின் அரவணைப்பில் வளர்ந்தது. பூ என்றால் விரும்பாத பெண்கள் இருக்கவே முடியாது. அப்படித்தான் பொன்னாத்தாளுக்கு பூ என்றால் கொள்ளைப் பிரியம். பூந்தோட்டத்திற்கு சென்ற இந்தப்பூ காமவெறி கொண்ட ஒருவனால் கசக்கி எறியப்பட்டதை,

"வா... பொன்னி... வா
பூ ... இந்தா ... பூ ...
உளறுகின்ற பச்சையப்பன்
உடன் ஒருவன்
சாராய வாடையில்
செவந்தி மணம் தெரியவில்லை
அவள் அலறினாள்...

பச்சோந்திகள்

கள்ளி வேலிக்குள்

ஐக்கியமாயின"(69)

என்று கூறி, அன்பாக வளர்ந்த மகளின் திருமணத்தைப் பார்க்க முடியாது. தன் மகளின் சீரழிவுக்குக் காரணமான கயவனைக் கொலை செய்து மகளுக்குக் கிடைக்காத மஞ்சள் கயிறு இவளின் தந்தைக்குக் கிடைத்தது கோவைச் சிறையில் எனத் தன் மகளுக்காகத் தன் உயிரை விட்ட தந்தையையும் கவிதையில் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கதாகும்.

**விலை மகளிர்**

பரத்தை அல்லது விலைமகளிரைப் பற்றி இளம்பூரணர், "ஆடலும் பாடலும் வல்லராகி, அழகும் இளமையும் காட்டி, இன்பமும் பொருளும் வெஃகி, ஒருவர்மாட்டும் தங்காதவர்" என்று விலை மகளிருக்கு இலக்கணம் வகுப்பர்.

விலை மாதர் பொருளைத் தவிர வேறு எதையும் விரும்பாதவர். தன்னை நாடிவரும் ஒவ்வொருவரிடமும் பொய்யான அன்பைக் காட்டுபவர். பணம், பொருளை அபகரிக்க நினைப்பவர். விலை மகளிரை கவிஞர் சிற்பி 'சாக்கடைகள்' என்று குறிப்பிட்டுள்ளார். 'சாக்கடைகளும்தான் இன்னும் வற்றிடவில்லை' என்று கூறும்போது, விலைமகளிரினம் இன்னும் இருந்து வருகின்றது என்பதை அடையாளம் காட்டுகிறார்.

குடிகாரன் ஒருவன் விலைமகளின் இல்லம் தேடிச் செல்லும் போது தான் செல்லும் அவ்விலைமகளின் நிலையையும் அக்குடிகாரனின் நிலையையும் நாடகப் பாங்கில் தன் கவிதையில் புனைந்துள்ளார்.

பங்களாதேஷ் அகதியான ஒரு பெண் தன் நிலையை ஆடவனுக்கு சொல்ல முடியாமல் மண்றாடுகிறாள். பெண்ணின் நிலையை தனக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொள்ள நினைக்கும் ஆணினத்தை வெறுக்கிறாள்.

"எங்களில் சிலரை ...
ஒரு கவளச் சோற்றுக்கும்
ஒரு குவளை தேநீருக்கும்
வழியற்றுப் போன எங்களில் சிலரை ...
இளமை என்ற எதிரி மட்டுமே
காவலாக இருந்த எங்களில் சிலரை...
வசந்த கனவுளாய் அலங்கரித்து
ஆசை ரதங்களில் ஏற்றி"(70)

சோற்றுக்காக இந்த நரகச் சாக்கடையில் தள்ளப்பட்டதை எண்ணி அழத் தொடங்கினாள். அப்போது அக்காமுகன் வெட்கித் தலை குனிந்தான்.

இத்தொழிலுக்குத் தானே விரும்பி வருபவர்களும் உண்டு. வற்புறுத்தலின் பேரில் இத்தொழிலுக்கு வருபவர்களும் உண்டு. சினேகலதா என்னும் பெண் தன் குடும்பச் சுமையை ஏற்றுக் கொண்டு

இத்தொழிலுக்கு வந்தவளாகச் சித்திரிக்கிறார். இவர்கள் பணத்தையே குறிக்கோளாகக் கொண்டு தன்னிடம் வருபவர்களிடம் உடல் சுகத்தைப் பகிர்ந்து கொள்கின்றனர். சிகரெட் புகையும் விஸ்கியுமாக உள்ளே நுழையும் ஒருவன்,

"ஓம் பேரு

சிநேக லதா

அருமையான பேரு

ஆந்திராவா?

இல்லேங்க... எனக்கு... மதுரை

ஆமா... நீ என்ன ஜாதி

நானா? நான்...

இப்ப ஒங்க பொண்ஜாதி"(71)

என்று கேட்டவனிடம் அவள் தன்னை அறிமுகப்படுத்தியதுடன். அவன் தன்னை ஒரு வியாபாரி என அறிமுகம் செய்தான். விரைவில் வா எனக்கு ஐந்து மணிக்கு அநாதை விடுதித் திறப்பு விழா எனக் கூறினான். நாட்டைப் பாதுகாத்துச் சமுதாயத்தைத் திருத்த வேண்டிய ஒருவன் அகத்தில் இழிவான செயலும் கொடூரமான நடத்தையும் கொண்டுள்ளான். ஆனால் வெளியில் பெரிய மனிதர் போன்ற தோற்றம் எனச் சமுதாயத்தில் அக்கறையுடன் உள்ளவர்களைப் போல் நடித்து, சமுதாயத்தை சீரழிக்கும் கயவர்களின் செயலை குறிப்பிட்டு, இதுபோல் இனிமேல் நடக்கக் கூடாது எனவும் எச்சரிக்கை விடுக்கிறார்.

விலைமகளின் நிலையையும் அவர்கள் அவ்வாறு செயல்பட்டதன் காரணத்தையும் கூறிய கவிஞர் விலைமகளிரின் இல்லங்களை,

"விரசம் சரமாடும்
காமவேள் நடன சாலைகள்
தசைச் சுவர்கள் சேரிகள்
உடல் வியாபாரச் சந்தைகள்"(72)

எனக் குறிப்பிடுகிறார்.

சமூக அவலங்களைச் சாடும் சிற்பி, பெண்கள் காலம் காலமாக இத்தொழிலில் சிக்கி சித்திரவதைப்படும் நிலையை விளக்கியுள்ளார். விலைமகளின் நிலையை விளக்கிக் கூறவே 'மௌன மயக்கங்கள்' என்னும் முழு கவிதை நூலையும் எழுதியுள்ளார்.

**விலைமகளை குலமகளாக்கிய புரட்சி**

விலைமகளைத் தனியொரு முத்திரையுடன் ஒதுக்கி வைக்கும் சமுதாயம். விலைமகள் என்றாலே தீண்டத் தகாதவள் போல் ஒதுங்கியிருக்கும் நிலையில், அவள் எல்லாப் பெண்களைப் போல சமூகத்தில் பழக வெட்கப்படும் நிலையில் கவிஞர் சிற்பி அவ்விலைமகளின் நிலையைக் கருத்தில் கொண்டு அவளை ஒரு வீட்டின் மணமகள் ஆக்கும் நிலையை தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

விபச்சார விடுதிக்குச் செல்லும் ஒருவன் எண்ணற்றப் பெண்களைப் பார்க்கிறான். ஒருத்தி மட்டும் தன் காதல் கண்களில் சிறகடித்துப் பறக்கிறாள். என்ன விலையானாலும் அவளை வாங்கிட வேண்டுமென ஆவல் கொண்டான். குப்பையில் ஒரு வைரமணி அகப்பட்டது போன்ற மகிழ்வு. எந்தப் பெண்ணிடமும் எனக்கு ஏற்படாத புனிதமான காதல் உன்னிடம் மட்டும் தான் எனக்கு ஏற்பட்டது. இன்னும் எனக்குத் தென்படவில்லை. இது காதல் தானா? இளமைத் திமிரா? என்று.

"வாடகை பேசும் துணிச்சல்
எனக்கு வந்தது தான்
ஆச்சரியங்களின் ஆச்சரியம்!
........ ....... ........
நான்
தற்காலிகமாக
விலை கொடுத்து வாங்கியது
ஒரு பெண்ணின்
உடலை அல்ல
அழுக்கின் ஒரு துளி தூசும்
படியாத
ஓர் ஆத்மா"(73)

என விலைமகளைக் குலமகளாக்க முடிவு பண்ணினான். அவளின் பழைய வாழ்க்கையைக் கேட்டு மனம் குமுறுகிறான். நான் விரும்பி இத்தொழிலுக்கு வரவில்லை என் குடும்பச் சூழ்நிலை காரணமாக

பதினைந்து வயதில் இத்தொழிலை மேற்கொண்டேன். உடல்நலமில்லை என்று நான் யாரையும் பார்க்க மறுத்தால் மூர்க்கத்தனமாக என்னை தரையில் தள்ளி உருட்டினர். நீ தாலிகட்டிய பத்தினியோடி என்று என்னை இறுக்க அணைத்தான் காமவெறி கொண்ட காமுகன். உன்னைப் பார்க்கத் துடித்தது என் மனம் நான் உன்னைப் பார்க்க வந்த போது கதவு மூடப்பட்டிருந்தது.

"காவல் நிலையம்

துப்பாக்கி வரிசைகள்

நீதி மன்றம்

சட்டப் புத்தகங்கள்

சிறைச்சாலை ....

இவைகளின் சுழற்சியில்

என் காதல்

நடுங்கி நடுங்கச்

செத்துப் பிழைத்தது"(74)

என மனம் ஒத்துழைத்தாலும் சமூகநிலை அவ்வாடவனைத் தடுத்தது எனக் கூறி, சமுதாயத்திற்காக மனதை அடக்கித் தான் ஆளவேண்டுமென வேண்டுகோள் விடுக்கிறார். மேலும், இப்பெண்கள் சமுதாயத்தால் புறக்கணிக்கப்படகூடாது என்பதற்காக அவளைக் குடும்பத் தலைவியாக்கி அவள் சமுதாயத்தில் படும் இன்னல்களையும், சமுதாயம் அவளுக்குத் தரும் மதிப்பையும் தன் கவிதையில் குறிப்பிடுகிறார். இத்தொழிலுக்கு வரக் காரணமானவர்களைக் கண்டு மனம் வெதும்புகிறார் கவிஞர்.

"என்னையே நான்

காப்பாற்றிக் கொள்ள

அவள் வேண்டும்"(75)

ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னும் ஒரு பெண் இருக்கிறாள் என்பதை கவிஞர் மெய்ப்பித்துள்ளார். விலைமகளானாலும் என் மனம் கவர்ந்தவள். நான் நன்றாக வாழவும், என்னை நான் காப்பாற்றிக் கொள்ளவும் அவள் வேண்டும். அப்பெண் இல்லாத வாழ்வை நரகமாக நினைக்கிறான் எனக் குறிப்பிடுகிறார்.

**கவிஞரின் பல்நோக்குப் பார்வை**

ஆசிரியரின் பார்வை சமுதாயதப் பிரச்சினைகளையும் தாண்டி பல்வேறு கோணங்களில் விரிந்து காணப்படுகிறது. அனைத்தையும் தம் கவிதையின் கருப்பொருளாக்கி ஆங்காங்கே தொட்டுச் செல்வதன் மூலம் அவரின் பல்நோக்குப் பார்வையை அறியமுடிகிறது.

**சகுந்தலா**

பெண்ணின் நிலையை தொன்மச் செய்திகளுடன் ஒப்பிட்டுக் கூறுவது கவிஞர்களின் தனிப் பண்பாகும். அன்று உள்ள பெண்ணின் நிலையைப் போன்று இன்றும் பெண்ணின் நிலையில் எந்த மாற்றமும் ஏற்படாமல் உள்ளதைச் சிற்பி தன் கவிதை வழிக் குறிப்பிடுகிறார்.

மேனகையைக் கைவிட்ட விசுவாமித்திரன் மற்றும் சகுந்தலையை மறந்துவிட்டுச் சென்ற துஷ்யந்திரன் போல இன்னும்

தன்னை நம்பிய பெண்ணைக் கைவிட்டுச் செல்லும் ஆண்கள் பலர் இருக்கிறார்கள் என்பதை,

*"காளிதாசனின் மானசீகப் புத்ரியே!*
*வசந்த உற்சவத்துக்கு*
*முதல் தாம்பூலம் வாங்கி*
*இலையுதிர் காலத்தில் வாய்*
*கொப்பளித்து உமிழும்*
*விசுவ எத்தர்களும்*
*துரோக துஷ்டந்தர்களும்*
*இன்னும் எங்களில் இருக்கின்றார்கள்*
*ஆனால் எமது சகுந்தலைகள்*
*இப்போது தொலைப்பது*
*மோதிரங்களை அல்ல! - பொருந்தாத*
*காதலரை!"*(76)

என்று கூறுவதிலிருந்து இன்றைய சகுந்தலைகள் பொருந்தாதவரைப் புறக்கணிக்கின்றனர் எனக்கூறிப் பெண்களிடம் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தியிருக்கிறார்.

**அகலிகை**

இந்திரனின் மோகத்தால் தன் கணவனின் சாபத்திற்கு உள்ளாகிக் கல்லானவள். பெண்களே ஒரு சாபப் பொருள். ஒரு ஆடவன் செய்த தவற்றுக்காகத் தான் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறாள். இராமனின் காலடி பட்டாள் சாபவிமோசனம்

பெறுபவள். ஒருவனின் சாபத்தால் கல்லானாள் மற்றொருவன் காலடி பட்டதால் பெண்ணானாள்.

"கல்லாகிப்போ! கொடியாய்
காலமுற்றும் ... இல்லை! இல்லை!
வில்லாளன் வரும்வரையில்
திருவடிகள் படும் வரையில்
சொல்லிருந்தால் சாபம்
துளி இரக்கம் மன்னிப்பா?"(77)

இராமனின் காலடி பட்டு அகலிகை சாபவிமோசனம் பெற்றாள். அதே இராமன் தனது மனைவி சீதைக்கு மட்டும் ஏன் மாறுபட்ட கருத்தைக் கொண்டிருக்கிறார் எனப் பெண்ணிற்கு அவலங்கள் காலங்காலமாய் இருந்து வருகின்றன என்ற முடிவுக்க வருகிறார்.

இராமனின் திருமணத்திற்காக சீதை காத்திருப்பாள் என இராம, இலக்குவனை அழைத்துக் கொண்டு விரைவாக செல்லுகின்றீரோ! இராமனின் காலடிக்காக அகலிகையும் காத்திருக்கிறாள் எனக் கூறி அகலிகை என்னும் அபலைப் பெண்ணுக்குச் செய்த கொடுமைக்குத் தீர்வு தேடி விரைகிறீரோ? எனப் பெண்ணுக்குப் பாவம் செய்தவர், அதற்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என வலியுறுத்துகிறார். பெண்ணுக்குக் கொடுமை செய்வோரை பழித்துரைக்கிறார்.

**கண்ணகி**

பெருவணிகனின் மகளாகப் பிறந்து வளமை பொருந்திய கோவலனை கணவனாகப் பெற்றவள். அமைதியின் உருவாக வீற்றிருந்து ஒன்றிரண்டு வார்த்தைகளே தன் கணவனிடம் பேசியவள். தன கணவன் கொலை செய்யப்பட்டான் என அறிந்ததும் மன்னனையே எதிர்த்துப் போராடும் திறன் பெற்றாள்.

"எனக்குத் தெரியும்
கலையும் கவர்ச்சியும்
வாழ்க்கைச் சமுத்திரத்தின்
அழிந்து மாய்கிற
அலை என்று ..."(78)

பெண்கள் அமைதியின் சிகரம் என்பதையும், தனக்கும் தன்னைச் சார்ந்தோருக்கும் துன்பம் என்றால் கொதித்து எழும் தன்மை பெண்மைக்குரியது எனப் புலப்படுத்துகிறார்.

**மாதவி**

கலைக்கு அரசியாக இருந்தும் கோவலனின் மனைவியாக வாழ்ந்தால், மாதவியின் கலைக்கும் காதலுக்கும் அடிமையான கோவலன். தன்னையே நம்பிய மனைவியாம் மாதவியையும் தன் குழந்தையையும் விட்டுப் பிரிந்தான். ஆண்களின் இச்சையைத் தீர்க்கும் மோகப் பொருளாகத் தான் பெண்கள் இருக்கிறார்கள். பெண்களுக்கு கடைசியில் மிஞ்சியது கண்ணீர். இதனை,

"அப்பா அப்பா என்று

அடம்பிடித்துக் குழந்தை அழும்

வருவார் வருவார் என்று அன்னை

வார்த்தை சொல்ல மகவுறங்கும்"(79)

என்று தன்னை விட்டுச் சென்ற கணவர் வருவார் எனற நம்பிக்கையில் காத்திருக்கும் பெண்ணின் நிலையை உணர்த்துகிறார்.

**சீதை**

சீதனமாக இந்த மண் தந்தவள் சீதை. இராமனின் மனைவி. இராமன் பெண்ணுக்கு சாபவிமோசனம் கொடுத்தவன். தானும் ஆண் குலத்தின் பழிகாரப் பிரதிநிதி என்பதை உணர்த்தும் நோக்கில்,

"சீதைக்கு மட்டு மன்றோர்

அக்கினியின் குண்டத்தை

நெஞ்சில் வைத்தவன்"(80)

என தன் மனைவியையே சந்தேகப்படும் நிலையை உணர்த்துகிறார். இறைவனின் வடிவாக இருந்தாலும் பெண்ணை ஒரு அபலப் பொருளாக்கி அக்கினி குண்டத்தில் இரக்கும் ஆணின் கொடூரத் தன்மையைத் தன் கவிதையில் குறிப்பிடுகிறார். ஆண்களுக்கு இக்கற்பு நிலை தடையில்லை என்றும், கற்பு பெண்ணுக்கு மட்டுமே விதிக்கப்பட்ட ஒன்று என நினைப்போரைத் தம் கவிதையில் சாடுகிறார் கவிஞர்.

**மண்டோதரி**

தன் கணவன் தீயொழுக்கம் உடையவனாக இருந்தாலும், தன் கணவனுக்கு ஏதேனும் ஆபத்து என்றால் முதலில் அழும் கண்கள் பெண்ணுடையது என்பதை மண்டோதரி வழி கூறுகின்றார்.

"அரக்கர் புகழுக்கு
விளை நிலமானவன்
போர்க்களத்தில் ஒரு
பாலைவனமாய்க் கிடக்க
கம்பனின் மண்டோதரி
கதறும் பொழுதில்"(81)

எனத் தன் கணவனின் புகழைக் கூறி புலம்பி அழும் சோகத்தின் குறியீடாய் மண்டோதரியைக் காட்டியுள்ளார். துன்பம் என்பது அந்தக் காலம் முதல் இந்தக் காலம் வரை பெண்களுக்கு விதிக்கப்பட்ட ஒன்றாகிவிட்டது என்பதை கவிஞரின் படைப்புகள் சித்திரிக்கின்றன.

**பெண்ணின் அவலக் குறியீடாய் தேவயானி**

சமுதாயத்தில் நடைபெறும் பிரச்சினைகளை அதிகம் சந்திப்பவர் பெண்களாகத்தான் இருக்க முடியும். வெளியிலும் சரி வீட்டிலும் சரி பிரச்சினை என்பது பெண்களுக்கே. தன் மீது போலியான காதலை வெளிப்படுத்திய கசனை,

"காரியம் முடிந்ததும்
கைவிடும் கயவனே!

தேவலோகத்துக் கோழையே!

செத்தாரைப் பிழைக்க வைக்கும்

மந்திரம்

வாழ்வாரைச் சாகடிக்கிற

தந்திரமாகி விட்டதுடா...

ஆனாலும் ... ஆனாலும்

சுக்கிரன் மகளடா

இந்தத் தேவா...

மறுபடியும் வாழ்வாள் மறுபடியும் வாழ்வாள்

இந்தத் தேவா..."[82]

எனத் தந்தையின் மந்திரம் கற்றுக்கொள்வதற்காகத் தன்னை காதலிப்பதாக நடித்தாயே உன் மந்திரம் பலிக்காது. இது என் வயிறெரிந்த சாபம் எனத் தன்னை ஏமாற்றியவனுக்கு சாபம் கொடுக்கிறாள். காலம் காலமாக பெண்கள் ஆண்களால் ஏமாற்றப்பட்டவர்களாகவும் கைவிடப்பட்டவர்களாகவும் இருக்கின்றனர் என்பதை தம் கவிதையின் மூலம் உணர்த்துகிறார்.

"தேவலோகத்து வாசலில் மட்டுமா?

வஞ்சனை உலக வாசல்களில்

கசனை, கயவர்களை

விடாமல் துரத்துகின்றது

அவள் குரல் ...

'தேவா'வின் குரல்"[83]

இன்னும் சமூகத்தில் பெண்களை ஏமாற்றும் கயவர்கள் இருக்கிறார்கள். அவர்களை பெண் பாவம் விடாது எனக் கூறுகிறார்.

இதனால் இவர் ஆண்களுக்கு வலியுறுத்துவது பெண்களைக் கொடுமைக்கு உட்படுத்த வேண்டாம் எனக் கேட்டுக் கொள்கிறார்.

**இயற்கை பற்றிய சிந்தனைகள்**

இயற்கையைப் பாடாத கவிஞர்கள் இல்லை எனலாம். "மாந்தர் தம் புலன்களால் உணரக்கூடிய புறவுலகாய் விளங்குவதே இயற்கை"(84) என்பர் தனிநாயக அடிகள். கவிதைப் பயணங்கள் என்னும் தொகுப்பின் முன்னுரையில், "மனிதனே இயற்கையின் ஒரு பகுதி என்பதால் இயற்கைக்கு நேரும் அழிவுகளில் நொந்து போவதும், எல்லா வகை அடக்கு முறைகளிலிருந்தும், சீரழிகளிலிருந்தும் மனிதனைக் காக்க முயல்வதும் என் கவிதையின் அடித்தளச் செயல்பாடு என்கிறார். சமூகம் வேறு இயற்கை வேறல்ல; இயற்கையின் ஓர் அங்கமாக சமூகம் அமைந்திருக்கிறது என்பதை அறியமுடிகிறது.

**நிலவு**

நிலவு அனைத்துக் கவிஞனின் பாடுபொருளாகின்றது. நிலவைத் 'தங்கத்தட்டு' வெண்புறா என்கிறார் சிற்பி,

"முத்துநிலா விண் மீனாம்
பணிப் பெண்களோடு
முகம் காட்டி சிரிக்கின்றாள்
வானத்தின் ஊடு!"(85)

எனக் குறிப்பிடுகிறார்.

**கடல்**

இயற்கையின் நமக்களித்த செல்வம். பல உயிர்களின் வாழ்க்கைப் பிறப்பிடமாய் அமைகிறது. மனிதனை வாழ வைக்கிறது. முத்துக்களையும் பிற உயிர்களையும் ஈன்றெடுக்கும் தாயாகும்.

> "எண்ணரிய பேய்க்கூட்டம் சூழ்ந்த தைப்போல்
> ஈரமற்ற பேராழி சீற யாடும்"(86)

எனக் கடலின் தன்மையையும் அதன் கொடூரத்தையும் அறியச் செய்கிறார்.

**மழை**

மக்களும் மண்ணும் வளம் பெற வேண்டுமாயின் மழை தேவை. அம்மழை மண்ணில் விழுந்து உழவர்களின் மனதை மகிழ்விக்கிறது. மழைப் பொழிவின் போது வானில் தோன்றும் மாற்றங்களையும், அது மண்ணில் வீழ்ந்த போது மனதில் நிகழும் மாற்றங்களையும் தம் கவிதையில்,

> "பெருமழையே! வானம் இம் மனிதர்க் கீந்த
> பெரும் பரிசே! முகில்களிடை எழுந்த போரில்...!"(87)

என மழையைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**பொன்னியாறு**

பொன்னியாறு அசைந்து அசைந்து அன்னம் போல் வரும் என்கிறார். நல்லோரின் நூல்போல் எக்காலத்தும் நிலைத்து நிற்கக் கூடியது.

"உயர்மலை பிறந்த மன்னும்

உயிரெனப் பொலிந்து முன்னோர்"(88)

என வற்றாமல் நாட்டிற்குப் புகழ் சேர்ப்பதால் பொன்னியைத் தாயாகக் குறிப்பிடுகிறார்.

**அருவி**

பாறைகளை அறுத்துக் கொண்டு மேலிருந்து கீழே விழுபவை அருவி எனப்படும். நீர்ப்பெருக்கு அதிகமாக இருக்கும் போது அருவி விழும் ஓசையும் அதிகமாக இருக்கும். அவ்வோசையால் காட்டு விலங்கு கூட்டங்கள் அஞ்சி நடுங்கின என நீர்ப் பெருக்கைப் பற்றிக் கூறிப்பிடுகிறார். இதனை,

"கைத்தறி நெசவு

நடத்திக் கொண்டிருந்த

ஏழை அருவிகள்

ஆலைகளாய் மாறி

அடுக்கடுக்காய்

சேலைகளைப் பொழிந்தன"(89)

என அருவியின் நீர்ப்பெருக்கைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**ஓடை**

நதி ஓடி மெலிந்த சின்னம் தான் ஓடை. ஓடிக் கொண்டே இருப்பதனால் ஓடை என அழைப்பர்.

"மண்ணுக்குள் முகம் புதைத்து

மயங்கும் ஒரு சிற்றோடை"(90)

என ஓடையில் நீர்வரத்தினைக் குறிப்பிடுகிறார்.

**நதி**

'ஒரு கிராமத்து நதி' என்னும் பெயரில் ஒரு நூலையே படைத்திருக்கிறார். அதன் தொடக்கமே நதியைப் பற்றியது தான். இயற்கையை வாழ்க்கையுடன் இணைத்துப் பார்க்கிறார்.

"தானும் உணவாகி

மீனும் உணவாகும்

இந்த நதிக்கு

நானும் உணவானேன்"(91)

என வாழ்வின் முடிவே நீர்த்துறைதான் என்பதை உணரச் செய்கிறார்.

**வெள்ளம்**

பெரும் மழையின் காரணமாக ஏற்படும் நீர்பெருக்கு வெள்ளம் எனப்படும். நீர்ப் பெருக்கைக் கண்டு மக்கள் மகிழ்ச்சியில் திளைத்தனர் என்பதை,

"வெள்ளம் வந்ததென்றால்

விருந்து வந்த சந்தோசம்"(92)

என்பதால் அறியமுடிகிறது.

**காவிரி**

காவிரி மனிதனுக்கு வளம் சேர்ப்பது. அத்தகைய காவிரி தமிழகத்தைத் தழுவுவதற்குத் தயங்குகிறது என்பதை,

"நீ நதியல்ல காவிரி
எங்கள் நேற்று இன்று நாளை"(93)

என்னும் வரிகளால் காவிரியின் முக்கியத்துவத்தை அறியமுடிகிறது.

**பாறைச் சிற்பங்கள்**

பாறையும் நதியும் மனிதர்களைப் போல இரகசியம் பேசிக் கொள்கின்றன என்கிறார் கவிஞர். இதனை,

"பாறைச் சிதறல்களோடு
அப்படியென்ன ரகசியம்
இந்த நதிக்கு
யுகாந்தரங்களாய்"(94)

என்று இயற்கையும் இரகசியம் பேசும் அதிசயத்தைக் குறிப்பிடுகிறார்.

**கல்லும் காடும்**

'சமரசம் உலாவும் இடம்' எனச் சுடுகாட்டை மருதகாசி கூறுவதைப் போல, ஏழையும் முதலாளியும் ஒன்று சேர்ந்து ஓய்வெடுக்கும் இடம் கல்லும் மண்ணும் நிறைந்த இந்தக் காடுதான் என்கிறார்.

"பாறைக்காடு நாவிதன் காடு

எல்லாக் காட்டையும்

காட்டு எஜமானர்களையும்

வெல்லும் இந்தச் சுடுகாடு"(95)

என வாழ்வின் நிலையாமையை எடுத்துரைக்கிறார்.

**வானவில்**

ஏழு நிறங்களைக் கொண்டது வானவில். அந்த நிறங்களை வானவில் எங்கிருந்து பெற்றது என வரிசைப்படுத்துகிறார். வெற்றிலை போன்று சிவந்தது போன்ற சிவப்பு நிறமும், நெல்கதிர்போல் தங்கப் பூச்சும், விழியில் உள்ள செழுமை நீலமும், புல்லில் உள்ள பசுமையும் போன்ற எல்லா நிறங்களும் உறவு கொண்டதைப் போல மின்னும் உன் நிறம். வில் நீ என்றால் நான் எங்கே? என்னும் கேள்வியும் தொடுக்கிறார்.

"மேற்றிசைப் பரிதி வட்டம்

சுழல்கையில் வண்ண வண்ணக்

கீற்றுடை புனைந்து விண்ணில்

கிளர்ந்தெழும் வான வில்லே!"(96)

என்னும் வரிகளால் வானவில்லின் அழகை விளக்குகிறார்.

**பனி**

மார்கழி, தை மாதங்களில் பனிப்பொழிவு அதிகமாக இருக்கும். அப்போது குளிரால் உயிர்கள் படும் துன்பத்தைக் குறிப்பிடுகிறார்.

"பெய்கிறது பனி

சற்றும் அசையவில்லை மரங்கள்

நல்ல உள்ளங்களும்"(97)

என நெடுநல்வாடை காட்சியைப் பதிவு செய்கிறார்.

**மலையாளக் காற்று**

மனித உயிர்வாழ்விற்குக் காரணமாக இருப்பது காற்று. பாலக்காட்டு கணவாய் வழியாக வரும் அக்காற்றின் தன்மையை எடுத்துரைக்கிறார்.

"தென்னை மரங்களைக் கதக்களி ஆடவிட்டு

................

மஞ்சள் கிளிகளைப் போல்

தாழம்பூக்கள் சிறகடிக்கவும்

விந்தை செய்யும் மோகினி வா"(98)

என்று 'காற்றே நீ செல்லாத இடமில்லை' என்கிறார்.

**தத்துவச் சிந்தனை**

தமிழ் இலக்கியத்தில் தத்துவப் பார்வையோடு கவிதை படைப்பது சங்க காலத்திலிருந்தே வருகிறது. இன்று கவிதை, புதினம், சிறுகதை முதலியவற்றில் தத்துவக் கருத்துக்கள் இடம் பெறுவதைக் காணமுடிகிறது. தத்துவ நோக்கில் கவிதை படைத்த தமிழ்ப் படைப்பாளர்கள் குறைவு என்றாலும் அவர்களும் ஒருவராக சிற்பியைக் குறிப்பிடலாம். 'பூஜ்ஜியங்களின் சங்கிலி' என்னும் நூல் தத்துவக் கருத்துக்கள் நிறைந்திருப்பதைக் காணலாம்.

"தடுக்கியது கல்லா...?

கால் அல்லவா!

கல்லை ஏன் செதுக்குகிறாய்?

என் காலைச் செதுக்கு!"(100)

என குருசீடர் முறையில் கருத்துக்களை விளக்கிச் செல்கிறார்.

இவ்வுலகில் எல்லாமே மாறக் கூடியது. மாற்றம் ஒன்றே மாறாதது என்னும் கருத்தை வலியுறுத்துகிறார். ஜென் புத்த மதச் சிந்தனையான, ஒரு பாத்திரம் எவ்வளவுக் கெவ்வளவு காலியாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு பயனுள்ளதாக இருக்கிறது என்னும் கருத்தை ஆசிரியரின் கவிதை வழி அறியமுடிகிறது.

"தத்துவத்தை வறட்சியில் தேடாதே

இனிய இலக்கியத்திலும் தேடு"(101)

என தத்துவக் கருத்தைக் கண்டறிவதற்கான வழியைக் கூறுகிறார்.

**அறிவியல் சிந்தனை**

அறிவியல் சிந்தனைகள் கவிஞரின் கவிதைகளில் மிளிர்வதைக் காணலாம். இன்றைய சூழலில் அறிவியல் வளர்ச்சியும் தொழில் நுட்பங்களும் சேர்ந்து மனித ஆற்றலைத் தடைப்படுத்துகின்றன. 'நாய்க்குடைக் காளான்' என்னும் கவிதை அணுகுண்டு வெடிப்பினால் ஏற்படும் ஆபத்துக்களைத் தெரிவிக்கின்றது.

"சூனியக்காரரே! விஞ்ஞான தீபத்தில்

மாணிக்கத் தாலியை எரிக்கும் மூடரே

எங்கள் பாப்பாக்கள் நீலமாய்ப் பிறக்குமுன்

புல்லிதழில் விஷ முத்துக்கள் வியர்க்குமுன்

செல்வப் பசுமடியில் மரணம் சுரக்குமுன்

அரும்பு உதடு பிரிக்கும் பச்சை மண் முற்றத்தில்

காரிக்கோலமிடும் அணுக்குண்டர்களே!"[102]

என வருங்கால வளர்ச்சி பற்றிக் குறிப்பிடுகிறார். அணுகுண்டு சோதனை இன்னும் விரிந்து கொண்டே சென்றால், தன் கடமையைச் செய்ய மனிதன் இருக்க மாட்டான் என மனித சமூகத்தின் அழிவைச் சித்திரிக்கிறார்.

விஞ்ஞான வளர்ச்சியின் மூலம் ஆண் இல்லாமல் ஆய்வு மனைகளில் குழந்தைகளைப் பிறப்பிக்கலாம் எனக்கூறி, இவ்வளர்ச்சி மனித சமூகத்திற்கு மகிழ்வைத் தரும் என்கிறார்.

இரசாயனக் கழிவுகளும் புதிய வேளாண் முறைகளும் சேர்ந்து பச்சை பசேல் என்று இருக்க வேண்டிய பயிர்களை சோகை பிடித்தவைகளாக மாற்றி, இயற்கையின் அற்புதத்தை அலங்கோலப்படுத்திய மனித மூளையை என்னவென்று சொல்வது. இயற்கை செய்த அற்புதங்கள் போக, செயற்கை நமக்கு பல பாடங்களைக் கூறுகின்றது என்பதை,

"வயல் வெளிகளில்

சோகை பிடித்த பயிர்களில்

இரசாயன முடிச்சுகளாய்த்

தானிய மணிகள்"[102]

கூறுவதன் வழி பசுமைப் புரட்சியை ஏற்படுத்துகிறோம் என்று கூறி விளை நிலங்களை இரசாயன உரங்கள் இட்டு பாழ்ப்படுத்துகிறோம். இயற்கை உரங்களை இட்டு பயிர்களை வளர்க்க விரும்புகிறார் கவிஞர்.

**பரிணாம வளர்ச்சி**

நான்கு கால்களால் நடந்த மனிதன் பரிணாம வளர்ச்சியின் காரணமாக இரண்டு கால்களில் நடக்கத் தொடங்கினான் என அறிவியலின் பரிணாம வளர்ச்சியைப் பதிவு செய்திருக்கிறார்.

"மூலக் கூறுகளில்
முகம் புதைத்திருந்த நான்
முற்றி முதிர்ந்து
மானுடமாய் அமைந்தேன்...!

எனக் காலத்தின் பரிணாம வளர்ச்சியைப் பற்றிக் கூறுகிறார்.

**இணையதளம்**

கணிப்பொறி விஞ்ஞான வளர்ச்சியால் நமக்குக் கிட்டிய கருவூலம். கல்வி, வியாபாரத்திற்கும் கணிப்பொறியை அன்றாடம் பயன்படுத்தி வருகின்றனர். இதன் தேவையும் மக்களிடையே நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகிறது. ஆனால் சிலர் ஆபாசப் படங்களைப் பார்ப்பதும் அவற்றை விற்றுப் பணம் பெறுவதும் இதனைப் பயன்படுத்துகின்றனர். இதனை,

"பேதைப் பெண்களின்

நிர்வாணப் படங்களை

எவனோ மானம் கெட்டவன்

இணைய தளத்தில் ஏற்றி

கைநிறையக் காசு பார்த்திருப்பான்"(105)

என இணையதளம் தகாத காரியங்களுக்குப் பயன்படுத்தப் படுவதைக் கண்டு மனம் வெதும்புகிறார்.

**கவிஞரின் பார்வையில் சான்றோர்**

ஒவ்வொரு கவிஞனின் உள்ளத்திலும் தம் மனதைக் கவர்ந்த சான்றோர் இருப்பர். அந்த வரிசையில் ஆசிரியரின் மனதைக் கவர்ந்த சான்றோரைத் தம் கவிதையில் குறிப்பிடுகிறார்.

**வள்ளுவர்**

வள்ளுவர் தான் தந்த குறளால் தன் மனதில் இடம் பிடித்தவர் என ஆசிரியர் கூறுகிறார். தன் மனதில் மட்டுமல்லாமல் உலக மக்கள் அனைவரின் இதயங்களிலும் இடம்பிடித்தவர் என்பதை,

"இமையா நாட்டப் பண்டிதர் கூட்டம்

இன்னும் முடிவறி யார்

எனினும் காவிரி மைந்தன் நீயெனும்"(106)

என வள்ளுவர் தமிழன் என்பதால் அனைத்து தமிழினமும் தலையை நிமிர்த்துகிறது என்கிறார். இதன்மூலம் திருக்குறளின் பெருமையை உணரச் செய்கிறார்.

**கம்பர்**

வடமொழி இராமாயணத்தைத் தமிழ் மரபிற்கேற்ப படைத்தளித்தப் பெருமகனார். கம்பரின் சொற்றிறத்தால் தன்னைப் பறிகொடுத்த கவிஞர்,

"தெய்வத் தமிழ்சேர் திருவழுந்தூர் உவச்சன்
நெய்த கலைப்பாவின் நேர்த்தியிலே ஆழந்திருந்தேன்"(107)

என சொல்வன்மையைக் கண்டு வியக்கிறார்.

**பாரதியார்**

சிற்பி பாரதியரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றி 'பாரதி கைதி எண் 253' என்னும் கவிதை நூலில் எழுதியுள்ளார். 25 நாட்களாக சிறையில் இருந்த பாரதியின் எண்ணங்களையும் கடந்தகால வாழ்க்கையையும் புதுமுறையில் பாரதி கூற்றாகப் படைத்துள்ளார். பாரதியின் பாடுபொருளில் தன்னைப் பறிகொடுத்தக் கவிஞர்,

"உன் கவிதை மட்டும்
நேற்று ஒரு சிறகாய்
நாளை மறு சிறகாய்
இன்று எனும் பொன்னுடலால்
என்றும்
பறந்திருக்கும்"(108)

என்றுகூறி பாரதியின் கவிதை அழியாப்புகழ் பெற்றவை என்பதை உணர்த்துகிறார்.

**ஷெல்லி**

ஆங்கிலக் கவிஞனான ஷெல்லியின் 'மேல்காற்று'க் கவிதை, சிறுவதிலேயே தன் மனதில் தாக்கத்தை ஏற்படுத்தியது என்கிறார்.

"மேல்காற்றுக் கவிதையை

மெல்லத் திறந்து

......... .......... ..........

சின்னா பின்னமான

முதல் இரவுச் சுவடு"(109)

என அக்கவிதை தன் மனதில் ஏற்படுத்திய தாக்கத்தை உணரச் செய்கிறார்.

**பாரதிதாசன்**

பாரதிதாசனால் பாராட்டப் பெற்ற கவிஞர் சிற்பி. பாரதியை பின்பற்றியது மட்டுமல்லாது அவரின் தாசனையும் பின்பற்றினார்.

"தெளிந்திட்ட உணர்ச்சி யாலே

தெரிந்தவன் தாச னாகிக்"(110)

எனப் பாரதிதாசனைத் தம் கவிதையில் குறிப்பிடுகிறார்.

**கடம்மனிட்ட இராமகிருஷ்ணன்**

மலையாளக் கவிஞரான இவரின் கவி வன்மையையும் தனித்திறனையும் சிற்பி வாயிலாக அறியமுடிகிறது.

**விவேகானந்தர்**

ஆன்மீகவாதியான விவேகானந்தரைக் குறிப்பிடுகையில்,

உயர்திணை உயிர்களைவிட அஃறிணை உயிர்களைக் காப்பதே புனிதம் என்று கூறிய இவரின் கருத்தை அனைவரும் அறியச் செய்கிறார் ஆசிரியர்.

"விவேகானந்தர்களை
உற்பத்தி செய்ய
ஆன்மீக நிலையங்களை
அன்புடன் கேட்டோம்"(111)

எனக் கூறி விவேகானந்தர்களை உருவாக்க வேண்டுமென வேண்டுகோள் விடுக்கிறார்.

**காந்தியடிகள்**

காந்தியடிகளை அயர்ந்த மக்களுக்கு அமுதம் கொட்டிய அண்ணல் என்றும், அடிமையில் சிக்கிய மக்களுக்கு சுதந்திரமாகிய அமுதத்தை ஊட்டியவன் என்றும் சிற்பி குறிப்பிடுகிறார். எளிமையான வாழ்க்கை வாழ்ந்த காந்தியடிகளை,

"ஆட்டுப்பாலும் நிலக்கடலையும்
சாப்பிட்டவாறு
அரை நிர்வாணப் பக்கிரி
யாக இருந்து
ஏகாதி பத்தியத்தை
எஃகுக் குரலில்
அதட்டினாரே காந்தியடிகள்"(112)

என்று நாட்டு மக்களுக்காகப் போராடிய திறனை எடுத்துரைக்கிறார்.

**திலகர்**

தீவிரவாதக் கொள்கை உடையவராக இருந்தவர் காந்தியைப் பற்றிக் கொண்டு காந்திதாசனாய் மாறியதை,

"திலகருக்கு மறுப்பல்ல காந்தி

.........

திகழ்ந்து பின்

காந்தி தாசனாய் உயர்ந்தது"(113)

எனத் திலகரைப் பற்றி பாரதி கூற்றாக கூறியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**குருசரண்சிங்**

காந்தி பற்றாளலான குருசரண்சிங், அவரின் கொள்கையான சகோதரத்துவத்தின் கொடி பறக்க வேண்டும்; இல்லையென்றால் மரணத்தின் மடியில் நான் உயிர் துறக்க வேண்டும் என்ற காந்தியின் தன் காந்தியின் கொள்கை தன் மனதை உலுக்கியதால்,

"ஆயுதம் ஏந்திய போரே

அன்னை விலங்குகள் தகர்க்குமென

மாணவ வயதில்

படிக்கும் புத்தகம் விட்டெறிந்தான்

வெடிக்கும் துப்பாக்கி ஏந்தினான்"(114)

என நாட்டுக்காக உயிர்துறக்க முயன்ற சரண்சிங்கைப் படைத்துக் காட்டுகிறார்.

**ஜீவா**

அரசியலிலும் பேச்சிலும் தீவிர உணர்வுடன் செயல்பட்ட ஜீவாவை குறிப்பிடுகையில்,

"களங்கள் எத்தனை போர்கள் எத்தனை

கரும்புக் காட்டிலோர்

வேழம் நீ ஜீவா"(115)

எனக் கூறி, ஜீவா பிறந்த மண்ணில் நாமும் பிறந்திருக்க தவம் செய்திருக்க வேண்டுமென்கிறார்.

**பெரியார்**

பெரியாரின் கொள்கைகளையும் அவரின் செயல்களையும் பற்றிக் கவிஞர்,

"சாதிப் படலங்கள்

கிழித்துக் கீறி

வெளிச்ச வீதிக்கு

அழைத்து வந்தது

இந்த வெண்தாடி

மாணிக்கம் அல்லவோ?"(116)

என்று அவர் மக்களுக்குச் செய்த தொண்டினை எடுத்துக் கூறுகிறார்.

**நேரு**

இமயமலையின் செய் தவத்தால் கிடைத்தவன நேரு என்றும் நாட்டு மக்களின் வறுமைக்காகப் போர் தொடுத்தவன். பதவிகள் பாதையில் கிடந்தும் அதைப் பார்க்க மறுத்தவன் என்கிறார்.

"மரணம் வருமுன் ஒருமுறை யேனும்

போய் வா சாந்தி வனம்!

நினைக்கும் நெஞ்சிலும் நிழலாய்க் குளிரும்

நிலையம் சாந்தி வனம்"(117)

என்று யமுனை நதிக்கரை ஓரமிருக்கும் நேருவின் சமாதியைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**லெனின்**

எளிமையான மக்களுடன் கூடி ரொட்டியும் முட்டைக்கோசும் உண்டு காவியம் படைத்தவர் லெனின்.

"கறுப்பு ரொட்டியும்
முட்டைக்கோசும்
எளிய மக்களோடு உண்டு
ஒரு காவிய யுகம் படைத்தாரே
லெனின்"(118)

என்று குறிப்பிடுகிறார்.

**அண்ணாதுரை**

தமிழகத்தின் மேன்மையைக் கனாக்கண்ட நாயகன் தூங்குகிறான் என அவரின் இறப்பில் வருந்திய கவிஞர்,

"காவிய ஊற்றின் கண்கள் திறந்தது
காஞ்சியின் முற்றத்திலே
தாவி விழுந்தது
பச்சையப்பன் மலைச்
சந்தனத் தோள்களிலே"(119)

என்று அவரின் கல்லறையில் வெள்ளி விளக்குகள் ஏற்ற வேண்டுமென வேண்டுகோள் விடுக்கிறார்.

**அப்துல்கலாம்**

இவரைப் பற்றி சிற்பி கூறுகையில், வீதி வீதியாய் மசூதி

தெருக்களில் நாளிதழ் விற்றவனுக்கு வானம் வசப்பட்டுவிட்டது என்று அவரின் குடும்ப நிலையையும் பின்னர் நிகழ்த்திய சாதனைகளையும் எடுத்துரைக்கிறார்.

"அலை நகரில் பிறந்து

பாரத ரத்தினமாய்த்

.................................

கலைந்த தலையும்

கசங்கிய உடையும் அடையாளம்"(120)

என்று மண்ணில் பிறந்தவன் விண்ணில் நிகழ்த்தும் அதிசயம் பற்றிக் கூறுகிறார்.

**தகவல் ஊடகங்கள்**

தகவல் என்பது "குறிப்பிட்ட ஒருவரை அல்லது ஒன்றைக் குறித்து பிறர் அறியும் வகையில் வெளிப்படுத்தப்படும் செய்தி (information / message) என்று அகராதி கூறுகிறது.

நாட்டில் நடக்கும் நிலைகளைத் தெள்ளத தெளிவாக எல்லோரும் புரிந்து கொள்ளும் வகையில் நமக்குத் தெரிவிப்பவை ஊடகங்களாகும். விஞ்ஞான வளர்ச்சியில் ஊடகங்கள் அதிகரித்துள்ளன என்பதை கவிஞரின் கூற்று வழி அறியலாம்.

**சுவரொட்டி**

'சுவர்கள்' என்னும் கவிதையில் ஒவ்வொரு நாளும் புதுமைகளைச் சுமந்துவரும் சுவரொட்டி பற்றிக் குறிப்பிடுகிறார்.

சுவர்கள் எளியவர்களின் இலவசப் பத்திரிக்கைகள், தேர்தல் காலங்களில் அவை அவசர அவசிய சாசனங்களாகப் பயன்படுத்துகின்றன. சாலையோர சுவர்களைப் பற்றி,

"வீதியில் வருகையில்
அற்பநேர உல்லாசத்துக்கு
சுவரொட்டி பார்க்க
.......... ............. ..........
கட்டெறும்பாய் மொய்த்த
என் கண்கள்"(122)

என சிறுவர் முதல் பெரியவர்கள் வரை அனைவர் கண்களும் சுவரொட்டியின் ஆபாசப் படங்களில் புதையுண்டு, தவறான செயலைச் செய்ய தூண்டுகின்றன. ஆபாச சுவரொட்டிகள் மனிதர்கள் பார்த்துச் சென்றனர்; மாடுகள் கிழித்துச் சென்றன என்ற கவிதை இங்கு நோக்கத்தக்கது.

**பத்திரிக்கை**

பத்திரிக்கையின் பணி மிகவும் முக்கியமான பணியாகும். இவை மக்களிடையே அறிவு வளத்தைப் பெருக்குவது மட்டுமல்லாமல், சில தகாத காரியங்களில் அவர்களைத தூண்டவும் செய்கிறது. இதனை,

"கரப்பானுக்கு சொர்க்கம் நிச்சயம்
செத்துக்கிடந்த பத்திரிக்கைப் பக்கத்தில்
நிர்வாண நடிகை"(123)

என்றும்,

"பத்திரிக்கை பக்கங்களில்

இளம் நடிகைகள்

சுதந்தர மகிமையை

விளம்பரப் படுத்தி(து)க்

கொண்டிருந்தனர்"(124)

எனப் பத்திரிக்கைகளில் அதிகம் வருபவை திரைப்பட அழகிகளின் அரைகுறை ஆடை அணிந்த உடல் என இன்றைய பத்திரிக்கைத் தாங்கி வரும் செய்திகளைப் பற்றிக் கவிஞர் விளக்குகிறார். இன்றைய பத்திரிக்கைகள் சாந்தி முகூர்த்த அழைப்பிதழ்களைத் தான் அச்சிட்டுக் கொண்டிருக்கின்றன என்ற குற்றச்சாட்டும் இங்கு பதிவு செய்யப்படுகிறது.

**அஃறிணை உயிர்களைப் பாடுதல்**

சமுதாயத்தின் எல்லா நிலைகளையும் கண்டு பாடிய சிற்பி அஃறிணை உயிர்களின் உள்ளக் குமுறலையும் அவற்றின் நிலைகளையும் பாட மறந்தாரில்லை. அஃறிணை உயிர்களின் மூலம் மனிதனுக்குத் தேவையான கருத்துக்களை எடுத்துக்கூறுகிறார்.

**உயிர்களிடம் இரக்கம்**

மனிதனுக்கு மனிதன் தீங்கு செய்து கொலைகள் செய்யப்படும் இப்பூமியில், மனிதனின் நிலையைத் தயங்காமல் எடுத்துக்கூறிய கவிஞர், அஃறிணை உயிர்களின் நிலையையும் கூறுகிறார். ஓரறிவு உயிரிலிருந்து ஆறறிவு உயிர் வரை அனைத்திடமும் பாசம் காட்ட விரும்பும் கவிஞனின் மனதை இது வெளிப்படுத்துகிறது.

மனித உயிர் போலவே பட்டாம் பூச்சியின் உயிரும் விலை மதிப்பற்றது என்பதை,

"தும்பையில் தேனெடுக்க

எப்போதோ வந்த பட்டாம்பூச்சி

நேரம் தப்பி வந்த

ரயில் சக்கரங்களில் சிக்கும்"(125)

ரயில் உரிய நேரத்தில் வந்திருந்தால் அது தன் உயிரை இழந்திருக்காது. மனிதன் செய்த தவறினால் ஒரு உயிர் பறிக்கப்படுகிறது. இதில் ரயில் நேரம் தவறி வந்ததால் பயணிகள் படும் துயரநிலையை ஆசிரியர் கூற முற்படுவதை அறியமுடியும். காலம் கருதிச் செய்தல் வேண்டும் என்னும் கருத்தை உணர்த்துகிறார்.

**உயிர் தத்துவம்**

அனைத்து உயிர்களும் பாகுபாடு இல்லாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதை,

"கொட்டைப் புழுவின்

நிமிர்ந்த பார்வையில்

எட்டடிப் பாம்பின்

இராஜகம்பீரம்"(126)

எனக் கூறி, சாப்பிட்டுவிட்டு வேண்டாமென்று தூக்கி எறியும் மாங்கொட்டையில் இரண்டு உயிர்கள் இருக்கின்றன. அவை தம்மை காப்பாற்றிக் கொள்ள போராடும். அதில் எந்த உயிர் வாழ்ந்தாலும் அதன் வளர்ச்சியை யாராலும் தடுக்க முடியாது. ஒருவன்

வாழ்க்கையில் உயர்வும் தாழ்வும் அவனே தான் தீர்மானிக்க வேண்டும் எனப் புழு, தளிர் இவைகளின் வளர்ச்சியை சமுதாயத்தில் மனிதன் எதிர்கொள்ள வேண்டிய பிரச்சினைகளோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

இதுபோல பல உயிர்களையும் உயிரற்றவைகளையும் மனித சமூகத்தோடு தொடர்புபடுத்தி மனித வாழ்க்கையை விளக்கியுள்ளமையை இவ்வாய்வால் அறியமுடியும்.

மூங்கில்,"[127] பூச்செடி,"[128] கண்ணாடி,"[129] நாய்கள்,"[130] மீன்கள்,"[131] சிகரெட்,"[132] உண்டியல்,"[133] பேனாவும் கட்டைவிரலும்,"[134] குதிரை"[135] போன்றவற்றை சமுதாயத்தோடு தொடர்புபடுத்தி மனிதன் சமுதாயத்தில் எவ்வாறு வாழ வேண்டும் கருத்தைக் கூற முற்படுவதைச் சிற்பியின் கவிதைகளின் வழி அறியமுடிகிறது.

**தொகுப்புரை**

கவிதையின் உள்ளடக்கமானது காலந்தோறும் மாற்றமடையக் கூடியது என்பதை இவ்வாய்வின் வழி உணரலாம். அன்றைய நிலையில் சமூகத்தில் நடைபெறும் நிகழ்வுகளின் பிரதிபலிப்பாகக் கவிதைகள் அமையும் என்பதை இவ்வாய்வு உணர்த்தும்.

நீதி என்பது ஏழைகளுக்குக் கிட்டாத ஒன்றாக இருப்பதையும், பாமர மக்களை நியாயவிலைக் கடைகள் அநியாயப்படுத்தி நிற்பதையும், சாதி பிரச்சினை, தண்ணீர் பிரச்சினை போன்றவை

சமூகத்தில் பெரும் விளைவுகளை உண்டு பண்ணுகின்றன என்பதை சிற்பியின் கவிதைகள் தெளிவுபடுத்துகின்றன.

அரசியல்வாதிகளின் போக்கையும் அவர்களின் சாதூர்யமான பேச்சாற்றலால் அப்பாவி மக்களை ஏமாற்றி, வாக்கு வாங்கிவிட்டு அவர்களைத் தவிக்கவிடும் அரசியல் கட்சிகளின் நிலையையும் விளக்குகிறது.

பலதரப்பட்ட உறவுகளின் பிணைப்பே குடும்பம், அதில் தாய், தந்தை, பாட்டி, சகோதரன், மனைவி, குழந்தை என உறவுமுறையும், பாசப்பிணைப்பையும் சிற்பி குறிப்பிடுவதை விளக்குகிறது இவ்வியல்.

பெண் ஒவ்வொரு பருவநிலையை அடையும் போதும் ஒவ்வொரு இன்னல்களுக்கு ஆளாகிறாள். அவளின் ஒவ்வொரு நிலையையும் புராணங்களில் பெண்கள் எவ்வாறு படைக்கப்படுகிறார்கள் என்பதைக் கூறி, இன்றைய பெண்களுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளமை அறியப்பெறுகிறது.

இயற்கை மனிதனுக்குச் செய்யும் அற்புதங்களையும் நதி, நிலவு, மழை, ஆறு, வானவில், காவிரி, பனி, கல், காடு, காற்று, வெள்ளம் போன்றவற்றின் மூலம் உணர்த்துகிறார்.

வாழ்க்கைக்குத் தேவையான தத்துவமும், அறிவியலின் அதிவேக வளர்ச்சியையும் கவிதைகளின் வழி விளக்கப்பட்டுள்ளது.

வள்ளுவர், கம்பர், பாரதியார், ஷெல்லி, பாரதிதாசன், கடம்மனிட்ட இராமகிருஷ்ணன், விவேகானந்தர், காந்தியடிகள்,

திலகர், ஜீவா, லெனின், குருசரண்சிங், பெரியார், நேரு, அண்ணாதுரை, அப்துல்கலாம் போன்ற சான்றோர்களைக் குறிப்பிட்டு அவர்களின் செயல்களை வெளியிட்டுள்ளமை அறியலாகிறது.

கவிஞர் பரந்துபட்ட பார்வை உடையவர் என்பதை, அவர் தகவல் ஊடகம் பற்றி குறிப்பிடும் முறையிலும், அஃறிணை உயிர்களை பாடும் முறையிலும் தெளிவாக விளக்கி நிற்கிறது.

## சான்றெண் விளக்கம்

*1. க.ப.அறவாணன், கவிதையின் உயிர், உள்ளம், உடல், ப.35.*

*2. ஆ.கருணாநிதி, தமிழ்ப் புதுக்கவிதையில் சமுதாயச் சிக்கல்கள், ப.41.*

*3. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.14.*

*4. ஆசிரியர் குழு, வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 8, பக்.588-589.*

*5. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.85.*

*6. மேலது, ப. 117.*

*7. மேலது, ப. 325.*

*8. மேலது, ப. 553.*

*9. மேலது, ப. 530.*

*10. மேலது, ப. 508.*

*11.மேலது, ப. 616.*

*12. மேலது, ப. 582.*

*13. சிற்பி, தேவயானி, ப.92.*

*14. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.315.*

*15. சிற்பி, மூடுபனி, ப.99.*

*16. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.541.*

*17. மேலது, ப.593.*

*18. மேலது, ப.544.*

*19. சிற்பி, தேவயானி, ப.198.*

*20. சிற்பி, மூடுபனி, ப.114.*

*21. மேலது, ப.23.*

22. சிற்பி, பாரதி கைதி எண்.253, ப.55.

23. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.121.

24. மேலது, ப.275.

25. மேலது, ப.303.

26. மேலது, ப.518.

27. பெ.சுப்பிரமணியன், வறுமை இறைவன் படைப்பா? ப.16.

28. சிற்பி, தேவயானி, ப.54.

29. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.547.

30. சிற்பி, மூடுபனி, ப.107.

31. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.395.

32. மேலது, ப.396.

33. மேலது, ப.400.

34. நாலடியார், ப.131.

35. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.132.

36. மேலது, ப.629.

37. ஆ.கருணாநிதி, தமிழ்ப் புதுக்கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், ப.55.

38. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.39.

39. அகராதிக்குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.56.

40. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.535.

41. சிற்பி, தேவயானி, ப.56.

42. மேலது, ப.54.

43. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 8, ப.591.

44. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.28.

45. மேலது, ப.28.

46. சிற்பி, முடுபனி, ப.18.

47. சிற்பி, தேவயானி, ப.193.

48. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.76.

49. சிற்பி, மூடுபனி, ப.17.

50. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.592.

51. மேலது, ப.361.

52. பட்டாபிராமன் மற்றும் பலர், வாழ்வியல் நோக்கு, ப.199.

53. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.297.

54. மேலது, ப.408.

55. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.296.

56. சிற்பி, தேவயானி, ப.66.

57. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.1203.

58. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.242.

59. சிற்பி, தேவயானி, ப.189.

60. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.242.

61. மேலது, ப.536.

62. மேலது, ப.575.

63. மேலது, ப.396.

64. மேலது, ப.370.

65. சிற்பி, தேவயானி, ப.106.

66. மேலது, ப.113.

67. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.71.

68. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.239.

69. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.576.

70. மேலது, ப.340.

71. மேலது, ப.346.

72. சிற்பி, தேவயானி, ப.55.

73. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.378.

74. மேலது, ப.403.

75. மேலது, ப.415.

76. மேலது, ப.312.

77. மேலது, ப.253.

78. சிற்பி, தேவயானி, ப.215.

79. மேலது, ப.218.

80. மேலது, ப.162.

81. சிற்பி, மூடுபனி, ப.117.

82. சிற்பி, தேவயானி, ப.119.

83. மேலது, ப.120.

84. கொளஞ்சி, சமுதாயக் கடலில் வைரமுத்து, ப.1.

85. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.19.

86. மேலது, ப. 202.

87. மேலது, ப.60.

88. மேலது, ப.66.

89. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.56.

90. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.616.

91. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.11.

92. மேலது, ப.42.

93. சிற்பி, மூடுபனி, ப.52.

94. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.24.

95. மேலது, ப.75.

96. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.72.

97. சிற்பி, மூடுபனி, ப.13.

98. சிற்பி, ஒரு கிராமத்து நதி, ப.38.

99. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.670.

100. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.99.

101. சிற்பி, பூஜ்ஜியங்களின் சங்கிலி, ப.87.

102. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.300.

103. இரா.சந்திரசேகரன், கவிஞர் சிற்பி கவிதை வளம், ப.56.

104. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.560.

105. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், 296.

106. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.108.

107. மேலது, ப. 28.

108. மேலது, ப.552.

109. சிற்பி, மூடுபனி, ப.118.

110. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.34.

111. மேலது, ப.549.

112. சிற்பி, தேவயானி, ப.56.

113. சிற்பி, பாரதி கைதி எண்.253, ப.16.

114. சிற்பி, மூடுபனி, ப.24.

115. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.140.

116. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.502.

117. மேலது, ப.147.

118. சிற்பி, தேவயானி, பக்.56 - 57.

119. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.251.

120. மேலது, ப.36.

121. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.656.

122. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.511.

123. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.293.

124. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.401.

125. சிற்பி, மூடுபனி, ப.30.

126. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.239.

127. மேலது, ப.245.

128. மேலது, ப.603.

129. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதைப் பயணங்கள், ப.225.

130. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.343-344.

131. சிற்பி, மூடுபனி, ப.66.

132. பாலா (தொ.ஆ), சிற்பியின் கவிதை வானம், ப.256.

133. மேலது, ப.542.

134. மேலது, ப.531.

135. மேலது, ப.584.

## முடிவுரை

♦ கலை கலைக்காகவே என்பது மேனாட்டார் கொள்கையாகும். கலை வாழ்க்கைக்காகவே இருத்தல் வேண்டும். வாழ்விற்குப் பயன் நல்குவதே கலையின்-கவிதையின் தன்மையாகும் என்பதை உள்ளடக்கமாகக் கொண்டெழுந்தது புதுக்கவிதையாகும்.

♦ தொல்காப்பியத்தில் 'பாட்டு', 'செய்யுள்' என்ற சொல்லாட்சி பின் 'கவிதை' என்ற பொருளில் வழங்கப்பட்டு வருகிறது. யாப்பு, பாட்டு, தூக்கு, தொடர்பு, செய்யுள் என்பவை கவிதை என்னும் ஒரே பொருளைக் குறிக்கின்றன. சங்க இலக்கியங்களிலும் 'கவி' என்றும் 'கவிதை' என்றும் வழங்கப்பட்டு வந்திருக்கின்றன.

♦ பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் 'பாட்டு', 'கவி' என்னும் சொல்லே காணப்படுகிறது. கவி என்னும் சொல் 'கவிதை' என்னும் பொருளில் மூன்று இடங்களில் காணப்படுகிறது.

♦ சீவகசிந்தாமணியில் கவிஞனைக் குறிக்கும் கவி என்ற சொல்லும், கவிதையைக் குறிக்கும் 'கவி' என்ற சொல்லும் கையாளப்பட்டுள்ளது.

♦ காப்பியம் பாடிய கவிஞர்கள் தம் கவிதை வரிகளால் சிறப்புப் பெற்றனர். சிலப்பதிகாரக் குன்றக் குரவையில் வரும் உரைப்பாட்டு என்பது 'கவிதை ' என்பதைக் குறிக்கிறது.

♦ கம்பராமாயணத்தில் கவிஞனுக்குரிய இலக்கணமாக, கவிஞன் என்பவன் இன்பம் தரக்கூடியவன் என்பதைக் கம்பர் சுட்டுகிறார்.

♦ இசுலாமியப் புராணத்தில் இறைநாமத்தின் மகிமை கவிதைக்கு இணையாக ஒப்பிடப்பட்டுள்ளது.

♦ கிறித்துவக் காப்பியத்தில் கவிஞனின் கவிதை வளம் வேத நூல்களோடு ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

♦ எல்லா காலகட்டங்களிலும் கவிதைகள் தோன்றியுள்ளன. தன் மதக் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துக்கூற அக்காலத்தில் கவிதைகள் பயன்பட்டன என்பதை அறியலாம். எல்லா மதத்தைச் சார்ந்த புலவர்களும் தகுந்த கருத்துக்களைத் தக்க சமயத்தில் எடுத்துக் கூறக் கவிதைகளைப் பயன்படுத்தினர் என்பது புலனாகிறது.

♦ ஆழ்வார்களும் நாயன்மார்களும் தம் கவிப்பாக்களால் இறைவனுக்குப் பாமாலை சூட்டியதை அறியமுடிகிறது.

♦ இலக்கண நூலான பாட்டியலில் கவிதையை நான்கு நான்கு பகுப்பாக பாகுபாடு செய்துள்ளதைக் காணலாம்.

♦ 'ஐந்திறம்' என்னும் நூலும் 'கவி' என்னும் சொல்லாக்கத்தைக் கையாண்டுள்ளது.

♦ பல்வேறு புலவர்களால் பாடப்பட்ட தொகுப்பான தனிப்பாடல் திரட்டில் புலவர்களின் கவிநயமும், அக்கவியைச் சுவைத்த அரசர்களின் கொடை நயமும் அறியப் பெறுகிறது.

♦ சிற்றிலக்கியங்களில் கவிதை பற்றிய குறிப்பும், கவிஞன் பற்றிய குறிப்பும் பரவிக்கிடக்கிறது. திரிகூடராசப்பக் கவிராயர் குற்றாலக் குறவஞ்சியில் 'கவி' என்னும் சொல்லுக்குக் 'குரங்கு' என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தியுள்ளமையும் புலனாகிறது.

♦ இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களுள் புதுக்கவிதைக்கு வடிவம் கொடுத்தவர் பாரதியார், ந.பிச்சமூர்த்தி போன்றோராவர். இவர்களைத் தொடர்ந்து வானம்பாடி, எழுத்து போன்ற இயக்கக் கவிஞர்கள் கவிதைத் துறையில் தம் முத்திரையைப் பதித்து வருகின்றனர்.

♦ பாடுபொருள் என்பது கவிஞன் பாடுவதற்கான காலமும் களமும் உருவாக்கிக் கொடுப்பதாகும். அன்றாடம் மனித வாழ்க்கையில் நடைபெறும் சிக்கல்களும் போராட்டங்களும் புதுக்கவிதையின் பாடுபொருளாகின்றன. சமகால நிகழ்வுகளும், அனுபவங்களும், கேட்ட நிகழ்வுகளும் பாடுபொருளாகி உள்ளன.

♦ சமூகத்தில் நடைபெறும், பிரச்சினைகளும், சிக்கல்களும் புதுக்கவிதையாளர்களின் பாடுபொருளாகின்றன. மதக்கலவரம், ஏழை, பணம் படைத்தவன் என்ற பாகுபாடு, வேலையின்மை, தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை போன்றவை சமுதாயத்தில் அன்றாடப் பிரச்சினை. இதனைப் பாடுபொருளாக்கி விளக்கியுள்ளார்.

♦ அரசியல் என்பது மனித வாழ்வில் முக்கியம். அதில் ஏற்படும் பிளவுகளும், பின்னடைவுகளும், முக்கிய பங்கு

வகிக்கின்றன. அரசியல் வாதிகளின் வாக்குறுதிகள் போன்றவற்றைப் பாடுபொருளாக்கி அரசியலின் அந்தரங்கம் பற்றியும் விளக்கியுள்ளமை அறியமுடிகிறது.

♦ பொருள் தான் அனைத்து செயல்களுக்கும் மூலகாரணம். வறுமை, விலைவாசி உயர்வால் ஏற்படும் அவலம், குழந்தைத் தொழிலாளர் நிலை போன்றவற்றைப் பாடுபொருளாகக் கையாண்டுள்ளார்.

♦ இன்று மனிதன் வாழ கல்வி அவசியம். கல்வியின் முக்கியத்துவம், மொழியுணர்வு, கல்வி கற்பிக்கும் ஆசிரியர், தேர்வுத்தாள் திருத்தும் முறை, மாணவர்களின் வேலை நிறுத்தம், அறிவுக்கு துணை நிற்கும் நூலகம் போன்றவை சிறப்பான பாடுபொருளைக் கொண்டு புனைந்து கல்வியின் முக்கியத்துவத்தை உணர்த்தியுள்ளனர்.

♦ குடும்பம் என்னும் அமைப்பில் கணவன் மனைவி பெறுமிடம், பிள்ளைகளின் பங்கு, பிள்ளைகளை வளர்க்கும் தாயின் சிறப்பு, தந்தையின் கண்டிப்பு, உறவுமுறைகளில் ஏற்பட்டுள்ள நெருக்கம், விரிசல் போன்றவற்றை மையமாகக் கொண்டு சிறப்புற பாடுபொருள்கள் படைக்கப்பட்டுள்ளன.

♦ பெண்களுக்கு ஏற்படும் இன்னல்களான வரதட்சிணைக் கொடுமை, விலை மகளிர் பிரச்சினை, ஆணாதிக்கம், பாலியல் பிரச்சனை, பெண்ணை மோகப் பொருளாக நினைத்தல், முதிர்கன்னியர் நிலை, விதவைப் பிரச்சினை போன்றவற்றைப் பாடுபொருளின் மையமாகக் காணப்படுகின்றன.

♦ காதலையும், காதலினால் பெற்றோர் எதிர்ப்பும், ஆதரவும், காதல் அழியாத தன்மை கொண்டது என்ற கருத்தையும் பாடுபொருளாக்கியுள்ளனர்.

♦ இன்றைய கவிதைகள் தங்கள் சொந்த வாழ்க்கையில் ஏற்பட்ட தோல்விகளாலும், அவநம்பிக்கையினாலும் எழுதப்படுகின்றன. அவை தெளிவற்றத் தன்மையைக் கொண்டிருந்து; சமுதாயத்தைக் குழப்புகின்ற வேலையைச் செய்து கொண்டிருக்கின்றன என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும் என்பதையும் அறியப் பெறுகிறது.

♦ இயற்கையின் அன்றட நிகழ்வுகளான வானவில், அருவி, மழை, மின்னல், மரம், கடல், சூரியன் போன்றவற்றின் செயல்களைப் பாடுபொருளாக்கிப் புனைந்துள்ளனர்.

♦ அறிவியலின் ஆழ அகலங்களைக் கண்டறிந்து அவற்றால் ஏற்படும் நன்மை தீமைகளையும் புனைந்திருப்பது பாடுபொருளின் சிறப்பாகும். ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் நடக்கும் உள்ளுணர்வு பற்றிய போராட்டத்தையும், அதற்குத் தீர்வு காண முடியாமல் தவிக்கும் நிலையையும் பாடுபொருளாக்கியுள்ளனர்.

♦ தகவல் ஊடகங்கள் இன்று நம்மை எப்படி கட்டி இழுத்து ஒரு கட்டுக்குள் வைத்துள்ளன என்பதை, இணையம், தொலைகாட்சி, பத்திரிகை, வானொலி போன்றவற்றைத் தத்தமது கவிதைகளின் பாடுபொருளாக உலவவிட்டுள்ளமை விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

♦ நீதி என்பது ஏழைகளுக்குக் கிட்டாத ஒன்றாக இருப்பதையும், பாமர மக்களை நியாயவிலைக் கடைகள் அநியாயப்படுத்தி நிற்பதையும், சாதியப் பிரச்சினை, தண்ணீர் பிரச்சினை போன்றவை சமூகத்தில் பெரும் விளைவுகளை உண்டு பண்ணுகின்றன என்பதை சிற்பியின் கவிதைகள் தெளிவுபடுத்துகின்றன.

♦ அரசியல்வாதிகளின் போக்கையும் அவர்களின் சாதூர்யமான பேச்சாற்றலால் அப்பாவி மக்களை ஏமாற்றி, வாக்கு வாங்கிவிட்டு அவர்களைத் தவிக்கவிடும் அரசியல் கட்சிகளின் நிலையையும், நுகத்தடிக்குப் பழகிப் போன மாடுகளைப் போல, மனிதர்கள் அடிமைத்தனத்திற்குப் பழகிப் போனதை அவரின் கவிதைகள் விளக்கி நிற்கின்றன.

♦ பலதரப்பட்ட உறவுகளான தாய், தந்தை, பாட்டி, சகோதரன், மனைவி, குழந்தை என உறவுமுறையும், பாசப்பிணைப்பையும் சிற்பி குறிப்பிடுவதை விளக்குகிறது இவ்வாய்வு.

♦ கருவறை தாண்டி கல்லறை வரையிலும் பெண் ஒவ்வொரு நிலையிலும் இன்னல்களுக்களாகிறாள். புராண காலப் பெண்களோடு இன்றைய பெண்களை ஒப்பிட்டுக் கூறியுள்ளமை அறியப்பெறுகிறது.

♦ இயற்கை மனிதனுக்குச் செய்யும் அற்புதங்களையும், நதி, நிலவு, மழை, ஆறு, வானவில், காவிரி, பனி, கல், காடு, காற்று, வெள்ளம் போன்றவற்றின் மூலம் உணர்த்துகிறார்.

♦ வாழ்க்கைக்குத் தேவையான தத்துவமும், அறிவியலின் அதிவேக வளர்ச்சியையும் கவிதைகளின் வழி விளக்கப்பட்டுள்ளது.

♦ வள்ளுவர், கம்பர், பாரதியார், ஷெல்லி, பாரதிதாசன், மலையாளக் கவிஞர் கடம்மனிட்ட இராமகிருஷ்ணன், விவேகானந்தர், காந்தியடிகள், திலகர், ஜீவா, லெனின், குருசரண்சிங், பெரியார், நேரு, அண்ணாதுரை, அப்துல்கலாம் போன்ற சான்றோர்களைக் குறிப்பிட்டு அவர்களின் செயல்களை வெளியிட்டுள்ளமை அறியலாகிறது.

♦ கவிஞர் பரந்துபட்ட பார்வை உடையவர் என்பதை, அவர் தகவல் ஊடகம் பற்றி குறிப்பிடும் முறையிலும், அஃறிணை உயிர்களை பாடும் முறையிலும் அறியப் பெறுகிறது.

♦ சமுதாயத்தில் புரையோடிக் கிடக்கின்ற போலித் தனங்களையும், வஞ்சனைகள், சுரண்டல்கள் போன்றவற்றைத் தோலுரித்துக் காட்டுகின்ற பொருள்களை உள்ளடக்கமாகக் கொண்டவைகளாக சிற்பியின் கவிதைகள் காணப்படுகின்றன.

♦ கவிஞர் சிற்பியின் கவிதைச் சிறப்புகளாக உவமை, உருவகம், உத்தி, குறியீடு, படிமம், பழமொழி, நம்பிக்கைகள், நகைச்சுவை, பிறசொற் பயன்பாடு போன்றவை இவ்வாய்வில் தரப்பட்டுள்ளன.

♦ இயற்கைப் பொருட்களை உவமை கூறுவதில் வானியல் தொடர்பான உவமைகளாக நட்சத்திரம், சூரியன், நிலா, விண்மீன் போன்றவை சிறப்பிடம் பெற்றுள்ளமை ஆராயப்பட்டுள்ளது.

♦ மரம், செடி, கொடி போன்றவற்றைப் பிறபொருளுடன் உவமையாக்கி உள்ளதை இவ்வாய்வு விளக்குகிறது.

♦ உயிரினங்கள் பற்றிய உவமைகளில் விலங்கு, பறவை போன்ற உயிரினங்களை மிகுதியான உவமைக்கு உட்படுத்துவதை இவ்வாய்வு விளக்குகிறது.

♦ உருவகப்படுத்தும் போது பெண்ணின் ஒவ்வொரு அங்கங்களையும் பூக்களுக்கு இணையாக உருவகப்படுத்துகிறார். இயற்கை எழிலை அவர் உருவகப்படுத்தும் தன்மையும் கண்டறியப்பட்டுள்ளது.

♦ சிறப்பான குறியீட்டுக் கவிதைகளில் மனிதர்களை சர்பமாகவும், பூனையாகவும் குறிப்பிடுகிறார். 'சிற்பியின் கவிதை வானம்' என்பதே குறியீட்டுப் பெயராகும்.

♦ சிற்பியின் 'மௌன மயக்கங்கள்' என்னும் தொகுப்பில் விலைமகள் பற்றிய படிமங்கள் பரவிக் கிடக்கின்றமையை இவ்வாய்வு விளக்குகிறது.

♦ கவிதை கூறும் முறைகளுள் உத்திமுறை சிறந்ததாகும். கவிஞர்தம் கவிதையில் கிண்டல் உத்தி, புதுமை உத்தி, முரண் உத்தி, நாடக உத்தி, உருவக உத்தி, அங்கதம் போன்ற உத்தி முறைகளை சிறப்பாக கூறியுள்ளமையை இவ்வாய்வு விளக்கியமைகிறது.

♦ பழமொழிகளை எடுத்துக்கூறிப் படிப்போருக்குச் சுவையூட்டும் கவிஞரின் எழுத்துவன்மை இவ்வாய்வின் மூலம் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

♦ பழங்காலம் முதல் இன்று வரை மக்களிடம் வழக்கிலுள்ள நம்பிக்கைகளைத் தம் கவிதையில் பதிவு செய்துள்ளமையும் புலப்படுகிறது.

♦ கவிதைகளைப் படிப்போர் தாம் பெற்ற இனிய அனுபவத்தைப் பிறரிடம் கூறி மகிழுமாறு நகைச்சுவைகளையும் கூறிச் செல்லும் திறனை சிற்பி பெற்றுள்ளமைப் பெறப்படுகிறது.

♦ கவிதைகளைக் காலத்திற்கேற்ப படைத்து, வாசகனிடம் எளிதாகக் கொண்டு செல்லும் வகையில் பிறமொழிகளைக் கையாண்டுள்ளார் என்பது ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

♦ படைப்பாளன் இலக்கிய உலகில் நிலைத்திருக்க வேண்டுமானால்; காலத்திற்குத் தகுந்த உத்திகளைப் பயன்படுத்த வேண்டும். படைப்பாளன் தனக்கென்று ஒரு கொள்கையை வைத்துக் கொண்டு, அதிலிருந்து தான் மாறுவதற்கு வாய்ப்பில்லை என்று உறுதிப்பாட்டுடன் இருப்பாரானால்; இலக்கியம் பள்ளத்தில் சிக்கிக் கொண்ட சக்கரத்தைப் போல ஓரிடத்திலேயே சுற்றிக் கொண்டிருக்கும் என்பதை சிற்பி நன்குணர்ந்துள்ளமை அவரின் கவிதை வரிகளின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

♦ ஒவ்வொரு படைப்புகளும் தங்களுக்குள் ஒரு வட்டப் பாதையை அமைத்துக் கொண்டு செல்லாமல், மையம் நோக்கி விளிம்புகளும், விளிம்பு நோக்கி மையங்களும் வருவதற்கு இவ்வாய்வு களம் அமைத்துக் கொடுக்கிறது.

## துணைநூற் பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


1. சிற்பி — பூஜ்ஜியங்களின் சங்கிலி, கவிதா பப்ளிகேஷன், சென்னை, முதற்பதிப்பு செப்டம்பர் 2008.

2. ............... — ஒரு கிராமத்து நதி, கவிதா வெளியீடு, சென்னை, ஐந்தாம் பதிப்பு 2006.

3. ............... — பாரதி கைதி எண் 253, கவிதா வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு 2004.

4. ................ — மூடுபனி, கவிதா வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு டிசம்பர் 2003.

5. ................ — ஆதிரை, கோளம் வெளியீடு, பொள்ளாச்சி, ஐந்தாம் பதிப்பு, 2005.

6. ................ — தேவயானி, கவிதா வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு ஆகஸ்ட் 2005.

7\. ................ இறகு,
கோலம் வெளியீடு,
பொள்ளாச்சி,
முதற்பதிப்பு 1996.

8\. ................ பெருமூச்சுகளின் பள்ளத்தாக்கு,
கவிதா பப்ளிகேஷன்,
சென்னை,
முதற்பதிப்பு 1996.

9\. ................ வண்ணப் பூக்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு 1994.

10\. பாலா (தொ.ஆ) சிற்பியின் கவிதை வானம்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு ஆகஸ்ட் 1996.

11\. .............. சிற்பியின் கவிதைப் பயணங்கள்,
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு ஆகஸ்ட் 2005.


**துணைமைச் சான்றாதாரங்கள்**


1\. அசோக்குமார் (தொ.ஆ), கவிமணி தேசியவிநயகம்,
பிள்ளையின் கவிதைகள்,
இராமநாதன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு 2002.

2. அடைக்கலசாமி, எம்.ஆர்., தேம்பாவணி, வர்தமானன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு 1992.

3. அண்ணாதுரை, மா. (தொ.ஆ) பாரதிதாசனும் தமிழ்க் கவிஞர்களும் (தொகுதி 5), பூங்கொடி வெளியீடு, ஈரோடு, முதற்பதிப்பு 2002.

4. அப்துல்ரகுமான் புதுக்கவிதையில் குறியீடு, அன்னம் பதிப்பகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு சூன் 2006.

5. அமுதபாரதி ஐக்கூ அருவிகள், நர்மதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு 1998.

6. அரங்கசாமி, ப. பத்துப்பாட்டில் பைந்தமிழ் வளம், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், முதற்பதிப்பு டிசம்பர் 2004.

7. அருணகிரி, மு. தமிழ் இலக்கியத்தில் அங்கதம், மரகதம் பதிப்பகம், மதுரை, முதற்பதிப்பு டிசம்பர் 1989.

8. அருணாசலதேசிகர், சோ., நந்திக்கலம்பகம், முல்லை நிலையம், சென்னை, இரண்டாம்பதிப்பு ஏப்ரல் 1997.

9. அறவாணன், க.ப., — கவிதையின் உயிர் உள்ளம் உடல்
நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு 1976.

10. அன்னிதாமசு, — பிரபந்தத் திரட்டு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 1980.

11. ஆடுதுறை அம்பலவாணன் — காளமேகம் அவ்வையார்
கவிதைத் திரட்டு,
பாண்டியன் பாசறை,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 1999.

12. ஆத்மநாதன், ஆ., — சாமரம்,
ஈஸ்வரி வெளியீடு,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு 2007.

13. ஆறுமுகநாவலர் — நன்னூல் காண்டிகையுரை,
தமிழ் பல்கலைக்கழகம்,
பதினான்காம் பதிப்பு.

14. இராசு, செ., (ப.ஆ), — சோழமண்டல சதகம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு 1994.

15. இராதாகிருஷ்ணன், எஸ்., — கவிதை வானில்,
சுதா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு மே 1999.

16. ................ கனவின் பெயர் கவிதை,
சுதா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 2007.

17. இரத்தினமூர்த்தி, வெ., தொல்காப்பிய நோக்கில்
புதுக்கவிதை,
தமிழாய்வு மய்யம், கோவை,
முதற்பதிப்பு டிசம்பர் 2000.

18. இராமசாமி நாயுடு தனிப்பாடற் றிரட்டு,
ஸன் ஆப் இந்தியா அச்சகம்,
சென்னை,
முதற்பதிப்பு சூலை 1923.

19. இலக்குமிபதி, ச., கல்மரம்,
பேகன் பதிப்பகம்,
வேலூர்,
முதற்பதிப்பு ஆகஸ்ட் 2003.

20. இளங்குமரனார், இரா., தேனருவி,
மாணவர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு 2004.

21. இளம்பூரணர் (உரை) தொல்காப்பியம் பொருளதிகாரம்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட், சென்னை,
இரண்டாம் பதிப்பு ஆகஸ்ட் 1997.

22. இன்குலாப் ஒவ்வொரு புல்லையும்,
பொன்னி அச்சகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு 2005.

23. இன்னாசி, சூ., கிறித்தவத் தமிழ்கொடை
தொகுதி 1,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்,
முதற்பதிப்பு டிசம்பர் 2001.

24. உண்ணாமலை, வீ., புதுக்கவிதையில் சமுதாயம்,
அகரம் பதிப்பகம்,
சிவகங்கை,
முதற்பதிப்பு ஆகஸ்ட் 1991.

25. எழிலவன் மரவடியில் போதிமரம்,
ரோகிணி நூலகம்,
நாகபட்டிணம்,
முதற்பதிப்பு ஏப்ரல் 2004.

26. ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பாமாலை,
உ.வே.சா. நூல் நிலையம்,
சென்னை,
நான்காம் பதிப்பு 1954.

27. கடிகாசலம், ந., சிவகாமி, ச., (ப.ஆ), சங்க இலக்கியம் கவிதையில்
நோக்கு, சிந்தனைப் பின்புல
மதிப்பீடு,
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
முதற்பதிப்பு 1998.

28. கண்ணன், இரா., (ப.ஆ) நவநீதப் பாட்டியல்,
அப்பா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 2002.

29. கபிலன்,
மழைக்கு ஒதுங்கிய கவிதைகள்,
கற்பகம் புத்தகாலயம்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 2005.

30. கருமலைத் தமிழாழன்
வேரின் விழுதுகள்,
வசந்தா பதிப்பகம்,
கிருட்டிணகிரி,
முதற்பதிப்பு டிசம்பர் 2004.

31. கருணாநிதி, ஆ.,
தமிழ்ப் புதுக்கவிதைகளில்
சமுதாயச் சிக்கல்கள்,
சென்னை,
முதற்பதிப்பு ஆகஸ்ட் 2002.

32. கவிதாசன்,
நாற்றாங்கால் காற்று,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு ஆகஸ்ட் 2003.

33. குலோத்துங்கன்
குலோத்துங்கன் கவிதைகள் ஒரு
பன்முகப் பார்வை,
பாரதி பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 2004.

34. கொளஞ்சி
சமுதாயக் கடலில் வைரமுத்து,
பழனி பதிப்பகம்,
பெரம்பூர்,
முதற்பதிப்பு டிசம்பர் 2002.

35. .............
நெருப்பு கவிதைகள்,
பழனி பதிப்பகம்,
பெரம்பூர்,
முதற்பதிப்பு மே 2005.

36. ............ புதிய குறிஞ்சி மலர்,
பழனி பதிப்பகம்,
பெரம்பூர்,
முதற்பதிப்பு மே 2005.

37. சங்கை வேலவன் தமிழ் ஒளியின் கவிப்பயணம்,
முற்போக்கு எழுத்தாளர் சங்கம்,
புதுவை,
முதற்பதிப்பு 2004.

38. சண்முகப்பிள்ளை, மு., (ப.ஆ) குறுந்தொகை,
தமிழ் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு செப்டம்பர் 1985.

39. சக்திகனல், கனகாம்பரமும் டிசம்பர் பூக்களும்,
மீனா புத்தக நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 2004.

40. சந்திரசேகரன், வெ.தி., முற்றுப்புள்ளி சற்றுத்தள்ளி,
ராசி பதிப்பகம்,
நெய்வேலி,
சூலை 2003.

41. .................. தலித்தியக் கவிதைகள்,
சரவணபாலு பதிப்பகம்,
விழுப்புரம்,
முதற்பதிப்பு டிசம்பர் 2007.

42. சம்பத், இரா., இலக்கியமும் இலக்கியக் கோட்பாடும்,
உமா பதிப்பகம்,
புதுச்சேரி,
முதற்பதிப்பு மே 2006.

43. சிற்பி பாலசுப்பிரமணியன், மோகன், இரா,. (ப.ஆ)
தமிழ் உலா தொகுதி II
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு சூலை 1993.

44. சுந்தரமூர்த்தி, இ.,
நடையியல் அறிமுகம்,
அன்பு நூலகம்,
சென்னை,
1978.

45. சுந்தரமகாலிங்கம், வீ.,
கவிதைக் காதல்,
வீரமீனா பதிப்பகம்,
விருதுநகர்,
முதற்பதிப்பு சனவரி 2008.

46. சுப்பிரமணியன், ச.வே.,
தமிழ் இலக்கிய வகையும் வடிவமும்,
தமிழ் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு 1984.

47. ................
தமிழ்ப் பெருங்கவிஞர்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 2001.

48. ................
தொல்காப்பிய வளம்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்,
முதற்பதிப்பு டிசம்பர் 2004.

49. சுப்பிரமணியன், பெ., (ப.ஆ),
வறுமை இறைவன் படைப்பா?
வேலூர்,
முதற்பதிப்பு பிப்ரவரி 2000.

50. சுப்பிரமணியன், பெ.,(ப.ஆ) பரிபாடல்,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
சென்னை,
முதற்பதிப்பு ஏப்ரல் 2004.

51. சிற்பி, பாலா (தொகு.ஆ),. மு.மேத்தா கவிதைகள்,
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 2007.

52. சுரதா துறைமுகம்,
சுவாதி பதிப்பகம்,
சென்னை,
ஐந்தாம் பதிப்பு ஆகஸ்ட் 2005.

53. சேதுராமன், வா.மு., தமிழ் நூல்களில் கவிதை பற்றிய
கருத்துகளும் கற்பனைகளும்,
தமிழ்மணி புத்தக பண்ணை,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 1995.

54. ................ விடுதலைச் சுவடுகள்,
தமிழ்மணி புத்தகப் பண்ணை,
சென்னை,
ஏப்ரல் 1999.

55.சோமசுந்தரன், அரு., அருசோ கவிதைகள் தொகுதி II
பொன்முடி பதிப்பகம்,
காரைக்குடி,
முதற்பதிப்பு சூலை 2004.

56. ஞானசம்பந்தன், அ.ச., இலக்கியக் கலை,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு 1999.

57. .................. கம்பன்-புதிய பார்வை,
கங்கை புத்தக நிலையம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு 2003.

58. தட்சிணாமூர்த்தி, அருச்சுன., தமிழ்ப் புதுக்கவிதைகளில்
அரசியல் கருத்துகளின் தாக்கம்,
பாரதி புத்தகாலயம்,
சென்னை,
முதற்பதிப்பு 2002.

59. தமிழ்குடிமகன், மு., பத்தாண்டுத் தமிழ் கவிதைகள்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு 1997.

60. தமிழ்செல்வம், சிங்கை.,(தொ.ஆ) கீழை நாட்டுக் கவிதை மஞ்சரி,
பாகம் 2,
அதியன் பதிப்பகம்,
சிதம்பரம்,
முதற்பதிப்பு 2007.

61. தமிழ்நாடன் தமிழ்நாடன் கவிதைகள்,
காவ்யா,
சென்னை,
முதற்பதிப்பு 2002.

62. தமிழமுதன் — தமிழமுதன் கவிதைகள், சேலம் ஓவியர் எழுத்தாளர் மன்றம், சேலம், டிசம்பர் 2002.

63. தமிழ் நிலவன், மு., — பூவிலே தேன்விழா, ஜானகி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு 2003.

64. தமிழோவியன் — கவிதையில் காட்சியும் கற்பனையும், தமிழருவி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு 2001.

65. தயானந்தன் பிரான்சிஸ், தி. மோசஸ் மைக்கேல், — இரட்சணிய யாத்திரிகம், கிறித்தவ இலக்கிய சங்கம், சென்னை, முதற்பதிப்பு 1998.

66. திருவுடையான், இரா., — பொன் மகூலம், சென்னை, அக்டோபர் 2005.

67. துருவன் — வாழ்க்கை என்னும் ஓடம், மூவேந்தர் அச்சகம், சென்னை, முதற்பதிப்பு 2001.

68. நீலவன் (தொ.ஆ)., — கவிதை வளம், வி.முருகேசன் வெளியீடு, வேலூர், டிசம்பர் 2000.

69. பதிப்பாசிரியர் குழு — அஷ்டப் பிரபந்தம், சென்னை, முதற்பதிப்பு 1957.

70. ............. — கம்பராமாயணம், கம்பன் கழகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1983.

71. ............. — பதினெண்கீழ்க்கணக்கு, (முதல் தொகுதி) எஸ்.ராஜம், வெளியீடு, பிற விபரங்கள் இல்லை.

72. பட்டாபிராமன், துரை.,(தொ.ஆ) — வாழ்வியல் நோக்கு, கலைஞன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு 2007.

73. ............ — பாரதியார் கவிதைகள், வானதி பதிப்பகம், சென்னை, ஆறாம் பதிப்பு 1986.

74. பாலசுப்பிரமணியன், சி., — தமிழ் இலக்கிய வரலாறு, மலர்ப் பதிப்பகம், சென்னை, 33ஆம் பதிப்பு 2001.

75. பாலசுப்பிரமணியன், மு., — வாழப் பிறந்தோம், ஜெயந்தி பதிப்பகம், புதுச்சேரி, முதற்பதிப்பு 2006.

76. பாலு மணிவண்ணன் — பெண்ணியக் கவிதைகள், ஷீலா பதிப்பகம், சென்னை, டிசம்பர் 2002.

77. பிரதாப் — சந்தங்கள், மாஸ்டர் பதிப்பகம், மதுரை, டிசம்பர் 2005.

78. புவியரசன் — இதற்குப் பெயர் இதுவன்று, அறிவுச்சுடர் பதிப்பகம், திருத்தணி, செப்டம்பர் 2003.

79. புஷ்பராஜன், மு., — மீண்டும் வரும் நாட்கள், காலச்சுவடு பதிப்பகம், சென்னை, நவம்பர் 2008.

80. மணிவண்ணன், போ., — தமிழ்க் கவிதைகளில் பெண்ணியம் நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, நவம்பர் 2008.

81. மயன் — ஐந்திறம், தொழிற்நுட்பக் கல்வி இயக்ககம், சென்னை, ஏப்ரல் 1986.

82. மாணிக்கவாசகன், கா.,(உ.ஆ) — புறநானூறு, உமா பதிப்பகம், சென்னை, செப்டம்பர் 1998.

83. மாணிக்க சண்முகம் — எனக்கும் சிறகுகள் முளைக்கும்,
சுதா பதிப்பகம்,
சென்னை,
டிசம்பர் 2003.

84. மாரியப்பன், சு., — இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க்
கவிதைகளில் உவமைகள்,
நிர்மலா பதிப்பகம்,
செங்கல்பட்டு,
முதற்பதிப்பு 1994.

85. மாலிறையன், துரை., — இறைபேரொளி நபிகள் நாயகம்
அருட்காவியம்,
மரியம்மை பதிப்பகம்,
புதுச்சேரி,
டிசம்பர் 2000.

86. மீரா — எதிர்காலத் தமிழ்க் கவிதை,
அன்னம் வெளியீடு,
சிவகங்கை,
நவம்பர் 1985.

87. முகம்மது உவைஸ், ம., — இஸ்லாமியத் தமிழ் இலக்கிய
வரலாறு தொகுதி 2,
காப்பியங்கள்,
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்,
மதுரை,
முதற்பதிப்பு 1990.

88. முகம்மது யூசுப். எம் (ப.ஆ)., — சீறாப்புராணம்,
உதய மார்த்தாண்டபுரம்,
திருவாரூர் 1999.

89. முத்து, சு., — கவிதைகளில் அறிவியல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
டிசம்பர் 2001.

90. முத்துராசன், கு — தண்டியலங்காரம்,
யாழ் வெளியீடு,
சென்னை,
டிசம்பர் 2004.

91. முருகேஷ், மு., — என் இனிய ஹைக்கூ,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
டிசம்பர் 2007.

92. மேத்தா, மு., — ஊர்வலம்,
திருமகள் நிலையம்,
சென்னை,
15ஆம் பதிப்பு சூன் 2007.

93. ............... — என்னுடைய போதி மரங்கள்,
நர்மதா பதிப்பகம்,
சென்னை,
டிசம்பர் 1987.

94. ............... — ஒரு வானம் இரு சிறகு,
வர்மா பதிப்பகம்,
சென்னை,
எட்டாம் பதிப்பு ஏப்ரல் 2004.

95. ............... — கண்ணீர் பூக்கள்,
திருமகள் நிலையம்,
சென்னை,
23ஆம் பதிப்பு சூன் 2002.

*96.* மோகன், *இரா.,* — *புதுக்கவிதைத் திறன்,*
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்,
*முதற்பதிப்பு சூலை 2006.*

*97.* மோகன்தாஸ், *த.,* — *இன்றைய தமிழ்க் கவிதைகளில் பாடுபொருள்,*
*அன்றில் பதிப்பகம்,*
*சென்னை,*
*டிசம்பர் 2004.*

*98. ரவி.* கே., *ஷோபனா ரவி.,* — *நமக்குத் தொழில் கவிதை,*
*வானவில் பண்பாட்டு மையம் வெளியீடு,*
*சென்னை,*
*முதற்பதிப்பு 1996.*

*99. ரவீந்திரன், சி.ஆர்., (தொ.ஆ),* — *கவிஞர் கண்ணதாசன் கவிதைகள்*
*சாகித்திய அகாதெமி,*
*புதுதில்லி,*
*முதற்பதிப்பு 2007.*

*100.* வல்லிக்கண்ணன் — *புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்,*
*அன்னம் வெளியீடு,*
*சிவகங்கை,*
*மூன்றாம் பதிப்பு ஆகஸ்ட் 1992.*

*101.* வளர்மதி, *மு.,* — *நானும் என் கவிதையும்,*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை,*
*டிசம்பர் 1999.*

102. விவேகானந்தன், மு., பாட்டு இலக்கியம் ஒரு பார்வை, ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு 1998.

103. விஜயன், எஸ்., வழி தொலைந்த பரிசல்கள், நிவேதா பதிப்பகம், சென்னை, டிசம்பர் 2006.

104. வைரமுத்து சிகரங்களை நோக்கி... சூர்யா பதிப்பகம், சென்னை, பிப்ரவரி 2000.

105. ஸ்ரீசந்திரன், ஜெ., (உ.ஆ), சீவக சிந்தாமணி, தமிழ் நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு 2004.

106. ............. தமிழ் இலக்கிய வரலாறு, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, நவம்பர் 2003.

107. ஸ்ரீதேசிகன், ரா., காலவெளியில் கவிதை நதிகள், (கவிதைக்கலை), பூம்புகார் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு ஆகஸ்ட் 2003.

108. ஜெகதா, இதயம் தொட்ட இஸ்லாமிய இலக்கியம், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு 2003.

*109.* ஜெயதேவன், வ., (தொ.ஆ), — *ஈரோடு தமிழன்பன் கவிதைகள், தொகுதி 3, பூம்புகார் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு சூலை 2007.*

*110.* ஜேசுராஜ், சி., — *புதுக்கவிதையில் புதிய மானுடச் சிந்தனைகள், கவின்மலர் பதிப்பகம், குமரி மாவட்டம், முதற்பதிப்பு ஆகஸ்ட் 1999.*

**அகராதிகள்**

*1.* ஆசிரியர் குழு — *கலைக் களஞ்சியம் தொகுதி, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு 1960.*

*2.* .................. — *கலைக்களஞ்சியம் தொகுதி-3, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு 1954.*

*3.* .................. — *கலைக்களஞ்சியம் தொகுதி-4, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு 1956.*

*4.* .................. — *கலைக்களஞ்சியம் தொகுதி-7, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு 1960.*

5. ……………… வாழ்வியற்களஞ்சியம் தொகுதி-2,
தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
இரண்டாம் பதிப்பு 1991.

6. ……………… வாழ்வியற்களஞ்சியம் தொகுதி-2,
தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
இரண்டாம் பதிப்பு 1988.

7. ……………… வாழ்வியற்களஞ்சியம் தொகுதி-2,
தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
இரண்டாம் பதிப்பு 1998.

8. ……………… வாழ்வியற்களஞ்சியம் தொகுதி-10,
தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
இரண்டாம் பதிப்பு 1988.

9. ……………… Tamil Lexicon, Vol-II part I,
University of Madras,
Macmillan India Press, 1982,
2nd Edition.

**ஆய்வேடுகள்**

1. சோ.அன்பரசி க.மோகனின் கள்ளிப்பாலுக்கு அப்பால்
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி,
2010.

## பின்னிணைப்பு

1. நிலவுப் பூ
2. சிரித்த முத்துக்கள்
3. ஒளிப்பறவை
4. சர்ப்ப யாகம்
5. புன்னகை பூக்கும் பூனைகள்
6. மௌன மயக்கங்கள்
7. சூரிய நிழல்
8. ஆதிரை (கவிதை நாடகம்)
9. வண்ணப்பூக்கள் (சிறுவர் கவிதை)
10. இறகு
11. சிற்பியின் கவிதை வானம்
12. ஒரு கிராமத்து நதி
13. பூஜ்ஜியங்களின் சங்கிலி
14. பெரு மூச்சுகளின் பள்ளத்தாக்கு
15. பாரதி கைதி எண் 253 (நெடுங்கவிதை)
16. மூடுபனி
17. தேவயானி
18. சிற்பி கவிதைப் பயணங்கள்

### மொழிபெயர்ப்பு நூல்கள்

1. தேனீக்களும் மக்களும்
2. அக்கினி சாட்சி (மலையாள புதினம் மொழிபெயர்ப்பு)
3. A Noon in Summer (ஆங்கில மொழி பெயர்ப்பு)
4. சச்சிதானந்தன் கவிதைகள்

5. ஒரு சங்கீதம் போல (மலையாள புதினம் மொழிபெயர்ப்பு)

6. உஜ்ஜயினி (மலையாள காவியம் மொழிபெயர்ப்பு)

7. கவிதை மீண்டும் வரும் (மலையாள கவிதை மொழிபெயர்ப்பு)

8. வாராணசி (மலையாள புதினம் மொழிபெயர்ப்பு)

9. சாதனைகள் எப்போதும் சாத்தியம் தான்

**பதிப்பித்த நூல்கள்**

1. மகாகவி பாரதி – சில மதிப்பீடுகள்
2. பாரதி – பாரதிதாசன் படைப்புக்கலை
3. தமிழ் உலா
4. பாரதி என்றொரு மானுடன்
5. மருதவரை உலா
6. அருட்பா அமுதம்
7. பாரதியின் கட்டுரைகள்

**கட்டுரைகள்**

1. இலக்கிய சிந்தனை
2. மலையாளக் கவிதை
3. இல்லறமே நல்லறம்
4. அலையும் சுவடும்
5. மின்னல் கீற்று
6. சிற்பியின் கட்டுரைகள்
7. படைப்புப் பார்வையும்